# கீழ்க்கணக்கு நூல்களில் சங்க இலக்கியச் செல்வாக்கு

பாரதிதாசன் பல்கலைக்கழக முனைவர் (Ph.D.,) பட்டத்திற்காக
அளிக்கப்பெறும் ஆய்வேடு

திருமதி. **இரா. ஜோதிமணி,** எம்.ஏ., பி.எட்., எம்.ஃபில்.,
ஆய்வாளர்



**தமிழ் உயராய்வு மையம்**

**தமிழவேள் உமாமகேசுவரனார் கரந்தைக் கலைக்கல்லூரி**

**தஞ்சாவூர் - 613 002**

**திசம்பர் 2002**

முனைவர் **மு. இளமுருகன்,** எம்.ஏ., பி.எச்.டி.,
தலைவர் - தமிழ்த்துறை,
தமிழவேள் உமாமகேசுவரனார் கரந்தைக் கலைக்கல்லூரி,
தஞ்சாவூர் - 613 002

# நெறியாளர் சான்றிதழ்

**"கீழ்க்கணக்கு நூல்களில் சங்க இலக்கியச் செல்வாக்கு"** என்னும் தலைப்பில் அமைந்த இவ்ஆய்வு பாரதிதாசன் பல்கலைக் கழகத்தின் முனைவர் (பிஎச்.டி.,) பட்டத்திற்காக திருமதி. **இரா. ஜோதிமணி** அவர்களால் ஏப்பிரல் 1997 முதல் திசம்பர் 2002 வரையிலான கல்வியாண்டில் என் மேற்பார்வையில் தன்னியலாகச் செய்யப்பட்டதாகும். தமிழவேள் உமா மகேசுவரனார் கரந்தைக் கலைக் கல்லூரித் தமிழ்த்துறை உயராய்வு மையத்தில் இவர் செய்த இவ்ஆய்வின் மீது இதற்கு முன் வேறெந்தப் பட்டமும் அளிக்கப் பெறவில்லை எனச் சான்றளிக்கிறேன்.

இடம்: கரந்தை

நாள்: 30-12-2002

(மு. இளமுருகன்)

நெறியாளர் கையொப்பம்

முனைவர் மு. இளமுருகன் ...,
தமிழ் விரிவுரையாளர் முதுநிலை,
தமிழவேள் உமாமகேசுவரனார்
கரந்தைக் கலைக்கல்லூரி,
தஞ்சாவூர்-613 002.

திருமதி. **இரா. ஜோதிமணி,** எம்.ஏ., பி.எட்., எம்.ஃபில்.,
முனைவர் பட்ட ஆய்வாளர்
தமிழ்த்துறை,
தமிழவேள் உமாமகேசுவரனார் கரந்தைக் கலைக்கல்லூரி,
தஞ்சாவூர் - 613 002

# ஆய்வாளர் உறுதிமொழி

**"கீழ்க்கணக்கு நூல்களில் சங்க இலக்கியச் செல்வாக்கு"** என்னும் தலைப்பில் முனைவர் மு. இளமுருகன், எம்.ஏ., பிஎச்.டி., அவர்கள் மேற்பார்வையில் பாரதிதாசன் பல்கலைக்கழக முனைவர் (பிஎச்.டி.,) பட்டத்திற்காகச் செய்யப்பட்ட இவ்ஆய்வு ஏப்பிரல் 1997 முதல் திசம்பர் 2002 வரை யான் மேற்கொண்ட ஆராய்ச்சியின் பயனாகும். இவ்ஆய்வேடு இதற்குமுன் வேறு எந்தப் பட்டத்திற்கும் அளிக்கப்படவில்லை என்றும், இஃது என் சொந்த முயற்சியால் உருவாக்கப்பட்டது என்றும் உறுதி கூறுகிறேன்.

இரா. ஜோதிமணி

இடம்: கரந்தை

**(இரா. ஜோதிமணி)**

நாள்: 30.12.2002

ஆய்வாளர் கையொப்பம்

# நன்றியுரை

கல்லூரியின் முன்னாள் முதல்வரும் நாவலர் ந.மு. வேங்கடசாமி நாட்டார் திருவருட் கல்லூரியின் தலைவரும், என் தமிழ் ஞானத்திற்கு வித்திட்டவருமான வணக்கத்திற்குரிய பேராசிரியர் பி. விருத்தாசலம் அவர்கட்கும், இந்நாள் கல்லூரியின் முதல்வர் வணக்கத்திற்குரிய முனைவர் இரா. குருநாதன் அவர்கட்கும்,

என் ஆய்வின் நெறியாளரும், கல்லூரியின் தமிழ்த் துறைத் தலைவரும் ஆன மதிப்பிற்குரிய முனைவர் மு. இளமுருகன் அவர்கட்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

தேவையான நூல்களைக் கொடுத்து உதவிய நூலகர் திருமதி. ப. நீலா அவர்கட்கும்,

இவ்ஆய்வினை மேற்கொள்ளும்படிச் செய்த என் பாசமிகு தந்தை சாமு. உத்திராபதி, தாய் இரஞ்சிதம் அவர்கட்கும், வாழ்க்கைத் துணையானதோடு, இந்த ஆய்வுக்கும் துணையாக வாய்த்த என் கணவர் ம.இராமானுஜம், எம்.ஏ., எம்.எல்., அவர்கட்கும், இவ்ஆய்வேட்டை அழகாகவும், செம்மையாகவும் கணிப்பொறியில் வடிவமைத்து உதவிய தஞ்சை வீரா கணினி மையத்திற்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

இரா. ஜோதிமணி

**(இரா. ஜோதிமணி)**

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகத். | - | அகத் திணையியல் |
| அகம். | - | அகநானூறு |
| ஆசாகோ. | - | ஆசாரக்கோவை |
| இளம். | - | இளம் பூரணர் |
| இனியது. | - | இனியவை நாற்பது |
| இன்னா. | - | இன்னா நாற்பது |
| இன்னி. | - | இன்னிலை |
| உ.ஆ. | - | உரை ஆசிரியர் |
| உ.ம. | - | உவமயில்ல் |
| எழுத்து. | - | எழுத்ததிகாரம் |
| ஏலா. | - | ஏலாதி |
| ஐங். | - | ஐங்குறுநூறு |
| ஐந் - எழு. | - | ஐந்திணை எழுபது |
| ஐந் - ஐம். | - | ஐந்திணை ஐம்பது |
| க.வா. | - | கடவுள் வாழ்த்து |
| க.ஆ. | - | கட்டுரை ஆசிரியர் |
| க.த. | - | கட்டுரைத் தலைப்பு |
| கலித். | - | கலித்தொகை |
| கழக வெளியீடு. | - | திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் |
| களவழி. | - | களவழி நாற்பது |
| காப்பு. | - | காப்புச் செய்யுள் |
| கார். | - | கார் நாற்பது |
| குறிஞ்சிப். | - | குறிஞ்சிப்பாட்டு |
| குறுந். | - | குறுந்தொகை |

| | | |
|---|---|---|
| கைந். | - | கைந்நிலை |
| சிலம்பு. | - | சிலப்பதிகாரம் |
| சிறுபஞ். | - | சிறுபஞ்சமூலம் |
| சிறுபாண். | - | சிறுபாணாற்றுப்படை |
| செய். | - | செய்யுளியல் |
| சொற். | - | சொற்பொழிவு |
| திணைமாலை. | - | திணைமாலை நூற்றைம்பது |
| திணைமொழி. | - | திணைமொழி ஐம்பது |
| திரி. | - | திரிகடுகம் |
| திருக். | - | திருக்குறள் |
| திருமுருகு. | - | திருமுருகாற்றுப்படை |
| தொகு. | - | தொகுதி |
| தொ.ஆ. | - | தொகுப்பு ஆசிரியர் |
| தொல். | - | தொல்காப்பியம் |
| நச். | - | நச்சினார்க்கினியர் |
| நற். | - | நற்றிணை |
| நாலடி. | - | நாலடியார் |
| நான்மணி. | - | நான்மணிக்கடிகை |
| நூ. | - | நூற்பா |
| நூன். | - | நூன்மரபு |
| நெடுநல். | - | நெடுநல்வாடை |
| ப. | - | பக்கம் |
| பக். | - | பக்கங்கள் |
| பட்டினப். | - | பட்டினப்பாலை |
| ப.ஆ. | - | பதிப்பு ஆசிரியர் |
| பதிற். | - | பதிற்றுப்பத்து |
| பரி. | - | பரிபாடல் |
| பழமொழி. | - | பழமொழி நானூறு |
| பன்னிரு. | - | பன்னிருப்பாட்டியல் |
| புறத். | - | புறத்திணையியல் |
| புறம். | - | புறநானூறு |
| பெரும். | - | பெரும்பாணாற்றுப்படை |
| பொருந. | - | பொருநராற்றுப்படை |
| பொருள். | - | பொருளதிகாரம் |

| | | |
|---|---|---|
| மணி. | - | மணிமேகலை |
| மதுரைக். | - | மதுரைக்காஞ்சி |
| மலைபடு. | - | மலைபடு கடாம் |
| முதுமொழிக். | - | முதுமொழிக் காஞ்சி |
| முல்லைப். | - | முல்லைப் பாட்டு |
| மேலது. | - | மேலே சுட்டியது |
| யா. கலம். | - | யாப்பருங்கலம் |
| யா. காரி. | - | யாப்பருங்கலாக்காரிகை |
| P. | - | Page |

# பொருளடக்கம்

# ஆய்வு அறிமுகம்

பொய்யகல நாளும் புகழ்விளைத்தல் என்வியப்பாம்
வையகம் போர்த்த வயங்கொலிநீர் – கையகலக்
கற்றோன்றி மண்தோன்றா காலத்தே வாளோடு
முற்றோன்றி மூத்த குடி[1]

என ஐயனாரிதனார் தமிழ்க்குடியின் பழமையை விளக்கியுள்ளார். இத்தகு சிறப்பும் பெருமையுமிக்க மக்களின் பழக்கவழக்கங்கள், பண்பாடு, வாழ்வியல் கூறுகள் என்ற அனைத்து நிலைகளையும் சங்க இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன. தமிழ் மொழிக்கு உயிரும் உடம்பும் என்று மதிக்கத்தக்கது சங்க இலக்கியம் என்பர்.[2] இச்சங்க இலக்கியங்கள் தனக்குப் பின் எழுந்த இலக்கியங்களாகிய கீழ்க்கணக்கு நூற்களில் ஏற்படுத்திய செல்வாக்கு இவண் ஆராயப்படுகிறது.

**ஆய்வு முன்வரலாறு**

கீழ்க்கணக்கு நூற்கள் பற்றிய முன்ஆய்வாகத் தில்லை கோவிந்தன் அவர்கள் 'Evolution and Evaluation of Patinenkilkanakku' (1976) என்னும் தலைப்பில் மேற்கொண்ட ஆய்வாகும். பால் செல்லதுரை அவர்கள் 'கீழ்க்கணக்கு நூல்களில் களவொழுக்கம்' (1978) என்னும் தலைப்பிலும், சி. வேங்கடபதி அவர்கள் 'பதினென்கீழ்க்கணக்கு - ஓர் ஆய்வு' (1982) என்னும் தலைப்பிலும் ஆய்வு செய்துள்ளனர். ஆ. வேலுப்பிள்ளை அவர்கள் எழுதியுள்ள 'தமிழ் இலக்கியங்களில் காலமும் - கருத்தும்' (1978) என்னும் நூல் மனங்கொளத்தக்கது. இந்நூலில் தமிழிலக்கியங்கள் ஒவ்வொரு காலத்திலும் எவ்வாறு பரிணமித்துள்ளன என்றும்

அவற்றிற்கான காரணங்களையும் விளக்கியுரைத்துள்ளார். எஸ். இராமராசன் அவர்கள் 'ஆசாரக்கோவை - ஓர் ஆய்வு' (1980 - 81) என்னும் தலைப்பில் ஆய்வு செய்துள்ளார். ச. சிதம்பரம் அவர்கள் 'பதினெண்கீழ்க்கணக்கு நூற்களில் மருதத்திணைப் பாடல்கள்' என்னும் ஆய்வுக்கட்டுரையை வழங்கியுள்ளார். மு. இளமுருகன் அவர்களின் 'தமிழ்ப் பெருங்காப்பியங்களில் சங்க இலக்கியத்தின் செல்வாக்கு' (1999) என்னும் நூலும் குறிப்பிடத்தக்கதாகும். இந்நூல் செல்வாக்குக் கொள்கையின் அடிப்படையிலும், ஒப்பிலக்கிய அணுகுமுறையிலும் எழுதப்பட்டுள்ளது.

இம்முன் வரலாற்றை மனங்கொண்டு சங்க இலக்கியத்தைக் கீழ்க்கணக்கு நூற்களுடன் ஒப்பிட்டறியும் முயற்சி இவண் மேற்கொள்ளப்படுகிறது.

**ஆய்வு எல்லை**

தொல்காப்பியம், எட்டுத்தொகை, பத்துப்பாட்டு ஆகியன சங்க இலக்கியங்கள் எனவும், நான்மணிக்கடிகை, இனியவை நாற்பது, இன்னா நாற்பது, கார் நாற்பது, களவழி நாற்பது, ஐந்திணை ஐம்பது, ஐந்திணை எழுபது, திணைமொழி ஐம்பது, திணைமாலை நூற்றைம்பது, திரிகடுகம், சிறுபஞ்சமூலம், ஆசாரக்கோவை, பழமொழி நானூறு, இன்னிலை, முதுமொழிக்காஞ்சி, ஏலாதி, கைந்நிலை ஆகிய கீழ்க்கணக்கு நூல்கள் மட்டும் எல்லையாகக் கொண்டு இவ்வாய்வு நிகழ்த்தப் பெறுகிறது.

திருக்குறள், நாலடியார் என்ற இரு நூல்களும் ஆய்விற்கு எடுத்துக் கொள்ளப் பெறவில்லை. காரணம், இவ்விரு நூல்களிலும் சங்க இலக்கியச் செல்வாக்கினை தனித்தனியே ஆராயுமளவிற்கு களங்கள் இருப்பதாலும், ஆய்வின் எல்லை கருதியும் விடப்பட்டன. இதன் காரணமாகவே ஆய்வுத் தலைப்பு, பதினெண் கீழ்க்கணக்கு நூல்களெனக் குறிப்பிடாமல் கீழ்க்கணக்கு நூல்களென வரையறை செய்து பணி மேற்கொள்ளப்பட்டது.

## அணுகுமுறை

ஒப்பிலக்கிய அணுகுமுறையில் இவ்வாய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

## செல்வாக்குக் கொள்கை

ஒரு இலக்கியம் தனக்குப் பின் தோன்றிய இலக்கியத்தில் ஆளப்படுவதை செல்வாக்கு என்றழைக்கின்றனர். ஒப்பிலக்கிய ஆய்வாளர்கள் இதனைச் செல்வாக்குக் கொள்கை என்று குறிப்பிடுகின்றனர்.

> செல்வாக்குக் கொள்கை அல்லது தாக்கக்
> கோட்பாடு (Influence Theory) என்பதே
> விரிவானதாகும். இதனை எதிர்த்துத் தடைகள்
> பல எழுப்பப்பட்டனவெனினும் பல புதிய கோணங்களில்
> இது வளர்ச்சிப் பெற்றுள்ளது3

எனத் தமிழண்ணல் குறிப்பிடுவர்.

## செல்வாக்கு நிலைகள்

ஒப்பிலக்கிய ஆய்வாளர்கள் செல்வாக்கு நிலையை பல நிலைகளாகக் குறிப்பிடுகின்றனர். அவற்றில் பிராவர் என்பவர் குறிப்பிடப்பட்டுள்ள நிலைகளை தமிழண்ணல், 'ஒப்பிலக்கிய அறிமுகம்' என்ற தனது நூலில் எடுத்துக் காட்டியுள்ளார். அவற்றை,

> 1. 'ஓர் இலக்கியத்திலிருந்து பிறிதொன்று நேரரே
> கடன் வாங்கிய பகுதிகளை – சொல், தொடர்,
> கருத்து அனையன ஒருவர் காணுதல் கூடும்',
> 2. 'தூண்டுதல்களால் ஒருவர் புதியன படைத்திருந்தால்,
> அதற்குக் காரணமான முன்னைவற்றை ஒருவர் அறிய
> முற்படலாம். இதில் ஒன்றைப் படித்ததால் எழுந்த
> மனவுணர்வுத் தூண்டுதலால் முன்னையதன் சாயலுடன்
> ஒரு நூல் படைக்கப்படுதல் கூடுமே தவிர, வேறு
> தாக்கமின்று', 3. 'முன்னைய நூல்களைப் படைத்து
> அகத் தெழுச்சியால் அதன் சாயலை மட்டுமின்றி,
> அமைப்பும், சிறப்பும் அதனினும் சிறக்கப் படைத்து
> விடுவதுமுண்டு இது வெறும் தூண்டுதல் மட்டுமன்று,
> வழிகாட்டியாகவும் அமையும்', 4. 'ஒரு நாட்டில்
> தங்கி வாழும் பிறமொழியினர், சென்றேறிய
> மொழியில் எழுதும்பொழுது தங்களையும் அறியாமல்
> தனது முன்னைய தாய்மொழிப் பண்புகளைப்
> பின்னையதில் கலப்பர். இதுவும் அம்மொழியில்
> ஏற்படும் ஒருவகைத் தாக்கமே', 5. 'மறைமுகத்
> தாக்கமானவை உய்த்தறிய வேண்டியன மேலை

நாட்டாசிரியர் ஒருவரை தம் மொழியில் ஒருவர்
பின்பற்றி எழுதலாம். அவர் செல்வாக்குப் பெற்றுவிட்டால்,
மேலை நூல்களே படிக்காத ஒருவரும் தம்மொழியில்
செல்வாக்குப் பெற்றவரது தாக்கத்தால் தம் நூல்களை
அம்முறையில் அமைக்கலாம்,'
**6.** 'எதிர்முகத் தாக்கமாக ஒரு நூலுக்கு
எதிரானவற்றையே சிந்தித்து ஒருவர் எழுதலாம்'[4]

என்பனவற்றால் அறியமுடிகின்றது.

இச்செல்வாக்கு நிலைகளில் சில கீழ்க்கணக்கு நூல்களில் சங்க இலக்கியச் செல்வாக்கை ஆராய உதவுகின்றது. படைப்பாளர்கள் தாம் கண்டு உணர்ந்தவற்றையும், தனக்கு முன்னுள்ள இலக்கியத் தாக்கத்தையும் தன் நூலில் கையாண்டுள்ளனர். தான் கற்று உணர்ந்த இலக்கிய வரிகளையும், கருத்துக்களையும் அப்படியே கையாண்டுள்ளனர். அதற்கு அவர்களது பரந்த அறிவும் தாம் கற்ற நூல்களை மனதில் நிறுத்திக் கொள்ளும் தன்மையும் காரணமாய் அமைந்தன. இவ்வடிப்படையில் ஆராயும்போது தமிழண்ணல் குறிப்பிட்டவற்றுள் சொல், தொடர், கருத்து ஆகியவற்றை ஆராய வாய்ப்புள்ளது.

சங்க இலக்கியங்கள் அனைத்தும் தொடர்ந்து இலக்கியப் படைப்பாளர்களால் கையாளப்பட்டு வந்துள்ளன. இந்நிலையில் கீழ்க்கணக்கு நூற்களை இயற்றிய படைப்பாளர்களும் தங்களுக்கு முற்பட்ட சங்க இலக்கியத்தினின்று பெற்ற சொல், தொடர், கருத்து முதலியனவற்றை இவ்வாய் வேட்டில் ஆராயப்படுகின்றது. மிளகுக் கொடிகள் படர்ந்துள்ள மலை என்ற சொல்லை,

கறிவளர் சிலம்பு[5]

எனக் கலித்தொகையில் இடம் பெற்றுள்ளது. இச்சொல்,

கறிவளர் பூஞ்சாரல்[6]

எனத் திணைமாலையில் கையாளப்பட்டுள்ளது.

எப்பொருளும் நிலையா இவ்வுலகத்தின் கண் நிலைபெறுதலைக் கருதினோர் தம்முடைய புகழை பூமியில் நிறுத்திவிட்டு மாண்டார்கள் என்பதை,

மன்னா வுலகத்து மன்னுதல் குறித்தோர்
தம்புகழ் நிறீஇத் தாமாய்ந்தனரே[7]

என்றுப் புறநானூறு குறிப்பிட்டுள்ளது. இத்தொடர்,

## பாட்டமைப்பு

வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தில் மனிதகுலம் வேட்டை, வேளாண்மைக்குரிய வேலைப் பிரிவினைகளில் அடியெடுத்து வைத்தது. இக்காலத்தில் மக்கள் இனக்குழுக்களாக வாழ்ந்தனர். அறிவியல் தொழில்நுட்பம் வளராத காலத்தில் வாழ்க்கைக்குத் தேவையானவற்றைத் தனிமனிதனால் திரட்ட இயலவில்லை. எனவே ஒருங்கிணைந்து உழைக்க வேண்டிய தேவை இருந்தது. அவ்வாறு மக்கள் இணைந்து செயல்பட்டபோது உழைப்பின் அயர்வைத் தனித்துக் கொள்ளவும், அனைவரையும் ஒருங்கிணைக்கவும், குழுப்பாடல் பிறந்தது. இப்பாடல் நாட்டுப்புறக் கலை வடிவினதாக எழுந்தது. குழுப்பாடல்களே தனிப்பாடல்களின் முன்னோடி என்பாரது கருத்து உள்ளங்கொளத் தக்கது.[1] பின்னர் மனிதகுல வளர்ச்சிக் கட்டத்தில் அரசு நிறுவனம் அமைய, அரசை விரிவுபடுத்துவோர்கள் எழுந்தனர். போரில் ஈடுப்பட்ட வீரர்களை மதித்துப் போற்றும் தேவையில் வீரநிலைப் பாடல்கள் எழுந்தன. இவைகள் தனிப்பாடல்களாகப் பரிணமித்தன. இப்பாடல்கள் கி.மு. 200 வரையுள்ள காலத்தில் எழுத்தனவென்பர்.[2]

பின்னர் அரசுருவாக்கம் வளர்ச்சி அடைந்த நிலையில் போரற்ற அமைதியான வாழ்வை வலியுறுத்தி அறக்கருத்துக்கள் எழுந்தன. கி.பி. முதல் நூற்றாண்டு வரையில் வீரநிலையை உள்ளடக்கமாகக் கொண்ட தனிப்பாடல்கள் சங்கப் பாடல்களாய் எழுந்தன.

**தனிநிலைப் பாடல்கள்**

சங்கத் தனிப்பாடல்கள் ஒருவர் கூற்றாகவே அமைந்துள்ளன. எட்டுத்தொகையும், பத்துப்பாட்டும் இந்நிலையில் எழுந்த நூல்களாகும். ஒரு மொழியின் முன்னையது தனிப்பாடல் என்றும், அவையே மொழிக் கட்டிடத்தின் 'படிக்கட்டுகள்'[3] என்றும் இதன் சிறப்பை வற்புறுத்தியுள்ளனர்.

தனிப்பாடலுக்குரிய இலக்கணமாக வ.சுப. மாணிக்கம், தனிப்பாடல் என்பது யாது? நடந்த ஒரு தனி நிகழ்ச்சியை அல்லது மனத்துத் தோன்றிய ஒரு தனிக்கருத்தைப் பாடுதல், தனிப் பாடல்கள் கற்பனை குறைந்தன. ஆனால் கவர்ச்சி மிகுந்தன. மறைவு இல்லாதவை. ஆனால் உண்மை தழுவியவை. உறுதி தளர்ந்தவை. உணர்ச்சி செறிந்தவை[4] என்று குறிப்பிட்டுள்ளார்.

இவ்வாறாகத் தனிப்பாடல்கள் உணர்த்த வேண்டிய பொருளைத் தெளிவுடன் உணர்த்தின. கருத்துச் செறிவைப் படிப்போர் உள்ளத்தில் பதிய வைத்தது. கூற வேண்டிய கருத்தை நேரடியாக கூறின. கற்பனைகளையும், பாக்களின் நீண்ட நெடிய தொடர்களையும் விட கருத்துக்களுக்கு முதலிடம் தந்தது.

இத்தனிப் பாடல்கள் ஈற்றயல் அடி முச்சீராக இடம் பெற்றுள்ளமையை வாய்மொழி இலக்கியப் பண்பாகத் தமிழண்ணல் குறிப்பிட்டுள்ளார்.[5]

தனிப்பாடல்களில் கதைத் தொடர்ச்சியைக் காணவியலாது. கருத்துக்களை மட்டும் பளிச்சிட்டு நிற்கின்றது. சங்கத் தனிப்பாடல்களில் இடம்பெறும் அகப்புறச் செய்திகளுக்கு வரையறை காணப்படுகிறது. அகமாயின் பெயர்குறியாக் கோட்பாடு உறுதியாகப் பின்பற்றப்பட்டு வந்துள்ளது. சங்க நூல்களுள் கலிப்பாவால் கலித்தொகையும், பரிபாடல் என்னும் பாவகையால் பரிபாடல் என்ற நூலும் யாக்கப்பட்டுள்ளன. இவைதவிர ஏனையவை அகவற்பா வடிவுடையனவாகும். இப்பாடல்கள் மூன்றடிச் சிறுமையினின்றும் 583 அடி நீட்சியாக அகவற்பா

வடிவுடையனவாகும். வஞ்சியடி பெற்ற மதுரைக்காஞ்சி 782 அடி அளவிற்கு நீண்ட பெரிய பாட்டாகச் சங்க நூற்களில் இடம் பெற்றுள்ளது. இந்நூல் காப்பியத்திற்கு உதவும் அடிப்படை அமைப்புகளோடு இருப்பதாகக் குறிப்பர்.

இவ்வாறாகச் சங்க நூற்கள் காப்பியத்திற்கு வித்திட்டாலும், கீழ்க்கணக்கு நூற்களிலும் தனது செல்வாக்கு ஏற்படுத்தியிருப்பது கவனிக்கத் தக்கது.

கீழ்க்கணக்கு நூல்கள் பெரும்பாலும் நீதி நூல்களாகும். நீதிக் கருத்துக்களைக் கூறுவதற்கு எல்லா பாவகையிலும் வெண்பாவே சிறந்ததென்று புலவர்கள் கூறுகின்றனர். அவ்வகையில் காணும்போது சங்க நூல்களில் வெண்பாக்கள் இடம் பெற்றுள்ளதை உணர முடிகிறது. சங்க நூல்களிலும் அறக்கருத்துக்கள் கூறப்பட்டிருப்பினும் கீழ்க்கணக்கு நூல்களில்தான் செல்வாக்குப் பெற்றன.

கி.பி. முதல் நூற்றாண்டுக்குப் பின்னர் எட்டுத்தொகையிலும், பத்துப்பாட்டிலும் இடம்பெற்ற அகவற்பா அமைப்புக் கதை தழுவி நீளத் தொடங்கியது. அதற்கு அக்கால அரசுருவாக்கப் பரிணாமம்தான் காரணமாகும். தமிழகத்தில் சேர, சோழ, பாண்டிய அரசுகள் நிலைப் பெற்றிருந்தன. இக்காலக் கட்டத்தில் நிலவெல்லை விரிவிற்காகப் போர்கள் மலியத் தொடங்கின (அகம். 162, புறம் - 375, 122, 62, 63). முடியுடைய மூவரின் முரண்பாட்டால் தொடர்ந்து போர்முரசுகள் ஒலிக்கத் தொடங்கின (அகம். 55, 246, குறுந். 393, நற். 58.10). வீட்டிற்கொரு காளையென இளைஞர் களிறெறிந்து பெயரச் சென்றனர். (புறம் - 321). போர் தொடருமாயின் பால் மனம் மாறாச் சிறுவனும் வாளேந்திச் செல்ல (புறம் - 279) நேர்ந்தது. மருத்துவ அறிவியல் வளராத அக்காலத்தே குத்தீட்டியும், கொடுவாளும், ஆடவர் எண்ணிக்கையைக் குறைத்தன. இவ்வாடவர்களை நம்பி வாழ்ந்த பெண்டிர் அவல வாழ்விற்குரியவராயினர். இவ்வகை அவலம் பெண்களைப் பரத்தமைக்கு இட்டுச் சென்ற தென்பாரது கருத்து இவண் கருதத்தக்கதாகும்.[7]

தோற்ற மன்னரது நாட்டிற்கு நெருப்பு வைத்தனர் (புறம் - 6.7). பகைமன்னரது பல்லினைப் பிடுங்கி கோட்டை மதிலில் பதிய வைத்தனர் (அகம் - 211). மக்கள் உற்பத்தி செய்து வைத்திருந்த வளமான விளைவுகளை அழித்தனர் (புறம் - 7.16, 52, பதிற். 25.71, மதுரைக். 125, 126, 154-156).

எதிர் அரசர்களது வாரிசுகளை யானையைக் கொண்டு மிதிக்க முற்பட்டதைப் (புறம் - 46, 47) பார்க்க முடிகிறது. பகையரசர்களது மதிலை உடைத்து அப்பகுதியில் கழுதையைக் கொண்டு ஏர் உழுது வரகும் கொள்ளும் விதைத்ததைக் (புறம் - 15.392) காண முடிகிறது. தோற்ற அரசர்களின் முடியினால் வீரக்கழல் செய்வதையும், காவல் மரத்தை வெட்டி முரசு உருவாக்குவதையும் (பதிற். 44) காண முடிகிறது. பெண்களின் கூந்தலை கயிறாகத் திரித்து யானையைப் பிணைத்தனர் என்பதை நற்றிணை (270) குறிப்பிட்டுள்ளது. மேற்கூறிய இக்கருத்துக்களை,

**கழுதை ஏர் பூட்டியது**

கடுந்தேர் குழிந்த ஞெள்ள லாங்கண்
வெள்வாய்க் கழுதைப் புல்லினம் பூட்டிப்
பாழ்செய் தனையவர் நனந்தலை நல்லெயில்[8]

என்றும்,

அணங்குடை மரபின் இருங்களந்தோறும்
வெள்வாய்க் கழுதைப் புல்லினம் பூட்டி
வெள்ளை வரகுங் கொள்ளும் வித்தும்[9]

என்ற புறப்பாடல் வரிகளால் உணர முடிகிறது.

இவ்வாறாகச் சங்க காலப் போர்கள் தமிழகத்தில் முடியுடைய மன்னர்கள், குறுநில மன்னர்கள் ஆகியோரது ஆதிக்கம் மேலோங்கியது. போரினால் அக்கால மக்கள் அவலநிலையை யடைந்தனர். தோற்றவர்களை முற்றிலுமாகச் சூரையாடல், பெண்டிர் நிலை தாழ்தல் அனைத்துமாக ஒருங்கிணைந்து சங்ககாலப் பிற்பகுதி அரசியல் வெகுமக்களிடம் அவலத்தை அள்ளி வீசியது. ஒரு நாட்டில் தொடர்ந்து போர் நிகழுமேயானால் வறுமை தோன்றலைத் தவிர்க்க முடியாது. அத்தகு போரின்

விளைவால் பெண்கள் சந்தைப் பொருளாக ஆக்கப்பட்டனர்[10] என வருந்துவாரது கருத்து இங்கு காணத்தக்கதாகும்.

**வேற்றரசு**

சங்க காலத்தின் பிற்பகுதியில் அரசு இருந்தும் பொது மக்கள் அமைதியற்றவராய் அல்லல் பட்டனர். வளமிருந்தும் மக்களிடம் வறுமையே காணப்பட்டது. இவ்வாறு சங்க கால பிற்பகுதி மக்கள் மனஅமைதியற்று வாழ்ந்தனர். மோசமான வாழ்வை நோக்கித் தள்ளப்பட்டனர் என்பதை மேற்கூறியவற்றால் அறியமுடிகிறது.

இந்நிலையில் களப்பிரர்கள், தமிழகத்தில் தனது ஆட்சியை நிலைநாட்டினர். இவர்கள் கி.பி. 250இல் தமிழகத்தைக் கைப்பற்றினர் என்பர்.[11]

மதுரை மாநகரிலே நிலவியிருந்த கடைச்சங்கத்தின் இறுதி காலத்திற்குப் பின்னரும், ஆறாம் நூற்றாண்டின் தொடக்கக் காலத்தில் தோன்றிய பல்லவர்கள் ஆட்சிக் காலத்திற்கு முன்னரும், இடைப்பட்ட ஒரு காலப் பகுதியினை சங்கம் மருவிய காலம் என்பர்.[12] சங்க காலத்தில் முடியுடைய மூவேந்தராலும் வேளிர் முதலான சிற்றரசர்களாலும் ஆளப்பட்டு வந்த தமிழகம் கி.பி.மூன்றாம் நூற்றாண்டில் அந்நியரது ஆட்சிக்குட்பட்டது. சோழ நாட்டையும், பாண்டிய நாட்டையும் 'களப்பிரர்கள்' கைப்பற்றினர்கள். நடுநாட்டையும், தொண்டை நாட்டையும் பல்லவர்கள் ஆட்சி புரிந்தனர். இவர்கள் 'பாலி பிரகிருத மொழியினையும் ஆதரித்தனர். இதனால் தொன்மை தமிழ்மொழி ஆதரிக்கப்படாமல் போயிற்று. பல இலக்கியக் கூறுகளை இழக்க வேண்டியதாயிற்று. இருப்பினும் இந்த இருண்ட காலத்தில் பதிணென்கீழ்க்கணக்கு போன்ற நீதி நூல்களும், சிலப்பதிகாரம், மணிமேகலை போன்ற காப்பியங்களும் தோன்றின.

இவற்றுள் பதிணென்கீழ்க்கணக்கு நூல்களைச் சங்ககால இலக்கியமென்றும் சிலர் கூறுவர். ஆனால் அவ்வாறு கொள்வதற்கு சில இடர்பாடுகளைக் காட்டுவர். இந்நூல்கள்

சங்ககால இலக்கியமென்றும் சிலர் கூறுவர். ஆனால் அவ்வாறு கொள்வதற்குச் சில இடர்பாடுகளைக் காட்டுவர். இந்நூல்கள் சங்ககால நூல்களிலினின்றும் கூறும் பொருளாலும் அமைந்திருக்கும் நடையாலும் வேறுபட்டிருக்கின்றன என்பர்.[13] எனவே இப்பதிணெண்கீழ்க்கணக்கு நூல்கள் சங்கம் மருவிய காலத்தில் தோன்றிய நூல்களென்று கொள்வர்.

**பாவினங்கள்**

சங்க காலத்தில் அகவற்பாக்களே மிகுதியும் கையாளப்பட்டுள்ளன. சங்க இலக்கியங்களுக்குப் பின் தோன்றிய காப்பியங்களில் அகவற்பாக்களே தொடர் நிலைச் செய்யுள்களாக இடம் பெற்றுள்ளன. ஆசிரியப்பா நெகிழ்ச்சிக்கும், மாற்றத்திற்கும் இடம் தருவதால் பல புலவர்கள் பலர் இதனைக் கையாண்டு உள்ளனர். அகவற்பா கதை முதலியன போலத் தொடர்ச்சியாக வரும் தொடர் நிலைச் செய்யுட்களைப் படைப்பதற்கு ஏற்றதாக அமைந்துள்ளது. இருப்பினும் சங்க காலத்தில் எழுந்த செய்யுட் களெல்லாம் தனி செய்யுட்களாகவே இருந்துள்ளன. இச்சங்கப்பாக்கள் பலவற்றில் வெண்பாவும் இடம் பெற்றுள்ளன. இவ்வெண்பாக்கள் பதிணெண்கீழ்க்கணக்கு நூல்களில் பெருமளவில் தனது செல்வாக்கைச் செலுத்தியுள்ளதை அறிய முடிகிறது. காரணம்,

குறைந்த யாப்பிற்றாய் அறம், பொருள், இன்பம் என்ற மூன்று உறுதிப் பொருள்களையும் கூறுவதற்கு வெண்பாவே சிறந்ததாகக் கருதப்பட்டது.

அடிநிமிர்பில்லா செய்யுட்தொகுதி
அறம் பொருளின்பம் அடுக்கி யவ்வகைத்
திறம்பட உறைப்பது கீழ்க்கணக்காகும்[14]

என்று பன்னிரு பாட்டியல் கூறுகிறது.

சங்க இலக்கியப் பாவமைப்பின் பரிணாமத்தினை முழு அளவில் பெறாவிட்டாலும், ஆங்காங்கே காணப்பெற்ற வெண்பாக்கள், கீழ்க்கணக்கு நூல்களில் செல்வாக்குற்றதை அறிய முடிகிறது.

## அடிக்குறிப்புகள்

1. மா. செண்பகம், 'சங்க இலக்கியத்தில் குழுப் பாடல்' - பத்தாவது ஆய்வுக் கோவை, ப. 319
2. து. சீனிச்சாமி, தமிழில் காப்பியக் கொள்கை, ப. 58
3. வ.சுப. மாணிக்கம், இலக்கியச்சாறு, ப. 50
4. மேலது, ப. 51
5. தமிழண்ணல், சங்க இலக்கிய ஒப்பீடு, பகுதி - 1, ப. 115
6. லெப.கரு. இராமநாதன் செட்டியார், பத்துப்பாட்டுவளம், ப. 67
7. க. வெள்ளைவாரணன், சங்க காலத் தமிழ் மக்கள், ப. 101 - 102.
8. புறம் - 15
9. புறம் - 392
10. ஆ.சிவ சுப்பிரமணியன், 'பொற்காலங்கள்', ப. 23
11. மயிலை சீனி. வேங்கடசாமி, 'களப்பிரர் ஆட்சியில் தமிழகம்', ப. 19
12. சி. பால சுப்பிரமணியன், தமிழ் இலக்கிய வரலாறு, ப. 75
13. மேலது, ப. 76
14. பன்னிரு - 133

# யாப்பு

தமிழ் யாப்பியலில் ஆசிரியம், வஞ்சி, வெண்பா, கலி என்ற நான்கு முதன்மைப்பா வகைகளை தொல்காப்பியர் கூறியுள்ளதை,

ஆசிரியம் வஞ்சி வெண்பாக் கலியென
நாலியற் றென்ப பாவகை விரியே

என்னும் நூற்பாவானறியலாம்.[1] பாவிற்குரிய உறுப்புக்களாக முப்பத்து நான்கினை வரையறைச் செய்து தமிழின் நெடுங்கால யாப்பியலுக்கு இடமளிக்கும் வகையில் செய்யுளியலை அமைத்துள்ளார். இவரது யாப்பியலின் இலக்கியமாக விளங்கி நிற்பது சங்கப்பாக்கள், இவைகள் கீழ்க்கணக்கு நூல்களில் பரிணமிக்க தத்தம் செல்வாக்கினைச் செலுத்தியுள்ளப் பாங்கு இவண் ஆராயப்படுகிறது.

**சங்க யாப்பு**

சங்க நூல் தொகுப்புகளில் கலித்தொகை, பரிபாடல் ஆகியன யாப்பால் பெயர் பெற்றன. பத்துப்பாட்டிலும் பொருநராற்றுப்படை, மதுரைக்காஞ்சி, பட்டினப்பாலை ஆகிய மூன்றிலும் வஞ்சியடிகள் விரவியுள்ளன. பட்டினப்பாலையில் வஞ்சியடிகள் மிகுந்திருத்தலின் வஞ்சிநெடும்பாட்டு என்பர். ஏனையவை ஆசிரியப்பாவாலும் அவற்றது இனத்தாலும் அமைந்தன. இவற்றினூடே நால்வகைப்பாக்கள் இடைமிடைந்தும் காணப்படுகின்றன.

சங்க நூற்களில் ஆசிரியப்பாவின் ஆட்சியே மிகுதி. ஒருவர் கூற்றான் அமையும் படைப்புப் பொருண்மைக்கு பா இடம் கொடுத்தமையே இதற்கு காரணம் எனலாம்.

எட்டுத்தொகை நூலாகிய கலிப்பா வெண்பாவின்கண் அடங்கும் என்று தொல்காப்பியர் கூறினார். நடை என்றது பாக்கள் இயலும் திறம் என்று விளக்கினார். இளம்பூரணர் இவ்விருப்பாக்களுக்கும் இடையே உள்ள ஒற்றுமைப் பண்புகளினால் கலிப்பாக்களில் வெண்பாக்கள் கலந்து உருபாக வருதல் சுட்டத்தக்கது. குறுவெண்பாட்டு என்ற வகையின் பாற்படுபவனவாகிய குறள்வெண்பா, நேரிசை சிந்தியல் வெண்பா, இன்னிசை சிந்தியல் வெண்பா எனவும், நெடுவெண் பாட்டு என்ற வகையினைச் சேர்ந்த நேரிசை வெண்பா, இன்னிசை வெண்பா ஆகிய அளவியல் வெண்பாக்களும், நான்கடியால் மிக்கு வருவனவாகிய பஃறொடை வெண்பாக்களும் கலித்தொகையில் விரவி வருகின்றன[3] என்பதை இவண் அறியத்தக்கது. பரிபாடலிலும் வெண்பாக்கள் ஆங்காங்கே தலைகாட்டி நிற்கின்றன. அன்றியும் பத்துப்பாட்டு நூல்களிலும் ஒவ்வொரு பாட்டினை அடுத்தும் வெண்பாக்கள் காணப்படுகின்றன. இவற்றைப் பாடியவர்கள் அவ்வப்பாட்டினைப் பாடியவர்களா? என்பது ஆய்வுக்குரியது. பெரும்பாலும் இவ்வெண்பாக்கள் பத்துப்பாட்டினைப் படித்துச் சுவைத்த பிற ஆசிரியரால் பாராட்டப்பட்டிருக்க வேண்டும் என்பது அறிஞர்களின் கருத்தாக உள்ளது. ஆனால் மலைபடுகடாம் எனப்படும் கூத்தராற்றுப்படைக்குரிய இன்னிசை வெண்பா தொன்மைமிக்கதாகத் தோன்றுகிறது.

மேலும் பட்டினப்பாலை, குறிஞ்சிப்பாட்டு, நெடுநல்வாடை, திருமுருகாற்றுப்படை, மதுரைக்காஞ்சி, பெரும்பாணாற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை போன்ற நூல்களிலும் 25 வெண்பாக்கள் இடம் பெற்றிருக்கின்றன. ஆனால், அவை சர்ச்சைக்குரியதாக இருப்பதால், தெளிவாக வெண்பாக்கள் இடம் பெற்றுள்ள கலித்தொகை, பரிபாடல் இரண்டிலும் காணமுயல்வது சிறந்ததாகும்.

**கீழ்க்கணக்கில் யாப்பு**

இவற்றுள் அறநூல்கள் பதினொன்று. திருக்குறள், நாலடியார், நான்மணிக்கடிகை, இனியவை நாற்பது, இன்னா நாற்பது, திரிகடுகம், ஏலாதி, பழமொழி, சிறுபஞ்சமூலம், ஆசாரக்கோவை என்ற பத்து நூல்களும் வெண்பா யாப்பிற்குரியது. முதுமொழிக்காஞ்சி குறள் வெண் செந்துறை என்னும் யாப்புக்குரியது. அகப்பொருள் தழுவிவருவனவாகிய கார் நாற்பது, ஐந்திணை ஐம்பது, ஐந்திணை எழுபது, திணைமொழி ஐம்பது, திணைமாலை நூற்றைம்பது, கைந்நிலை என்ற ஆறு நூல்களும் வெண்பா யாப்பிற்றனவே. புறப்பொருள் நூலாகிய களவழி நாற்பதிலும் வெண்பாவே இடம் பெற்றுள்ளன. இன்னிலை (அ) கைந்நிலையிலும் வெண்பா தன்னாட்சியைச் செலுத்தியுள்ளது. மேற்கூறியவற்றான் சங்க நூல்களில் ஆங்காங்கே காணப்பட்ட வெண்பாக்கள், கீழ்க்கணக்கு நூல்களில் பெருஞ்செல்வாக்குற்றிருப்பதை எடுத்துக்காட்டுகள் மூலம் அறிய முடிகிறது.

**யாப்பு ஆய்வுகள்**

தமிழ் யாப்பறி வகைக்குறித்து இலக்கண, இலக்கிய ஆய்வாளர்கள் நிகழ்த்திய ஆய்வுகள் முதற்கண் மதிக்கத்தக்கன. இந்நூற்றாண்டில் அ. சிதம்பரனாதன் செட்டியார் 'தமிழ் யாப்பியல் திறனாய்வு' (The Advanced Studies in Tamil Prosody), சோ.ந. கந்தசாமியின் 'தமிழ் யாப்பியலின் தோற்றமும் வளர்ச்சியும்' என்ற நூலில் வரலாற்றுக் கண்ணோட்டத்துடன் தமிழ் யாப்பியல் பரிணாமம் பற்றி நிகழ்த்தப்பட்டுள்ள ஆய்வு விரிவானதாகும். மு. இளமுருகன் அவர்களின் 'தமிழ்ப்பெருங்காப்பியங்களில் சங்க இலக்கியத்தின் செல்வாக்கு' என்ற இலக்கிய ஆய்வு நூலும் குறிப்பிடத்தக்கன. இம்முன் வரலாற்றோடு கீழ்க்கணக்கு நூல்களின் உருவாக்கத்திற்குச் சங்க யாப்பு தந்த செல்வாக்கு என்னும் நோக்கில் ஒப்பீட்டு முயற்சி இங்கு நிகழ்த்தப்பட்டுள்ளது.

**வெண்பாவின் பாகுபாடு**

ஐவகை வெண்பாக்களை இருகால நூல்களும் காட்டுகின்றன. அவை குறள் வெண்பா, சிந்தியல் வெண்பா, நேரிசை வெண்பா, இன்னிசை வெண்பா, பஃறொடை வெண்பா என்பனவாகும். அடி, தொடை, ஓசை ஆகியவற்றால் இவை பெயர் வேறுபாடு அடைகின்றன. பொது இலக்கணத்தால் ஒத்தவை. இவற்றுள் ஒவ்வொரு வகையினைக் குறித்தும் இரு நூல்களும் கூறும் கருத்துக்களைத் தொகுத்து நோக்கத்தக்கது.[4]

**சிந்தியல் வெண்பா**

யாப்பருங்கலத்தில் சிந்து என்ற பெயரினாலும், காரிகையில் சிந்தியல் என்ற பெயரினாலும் இவ்வெண்பா சுட்டப்பெறுகிறது. யாப்பருங்கலம், 'சிந்து இருதொடை இயற்றே' எனக் குறித்தது. தொடை என்பது இரண்டடிகள் இயைவதால் தோன்றுவதாதலின் இருதொடை என்றதால் மூன்றடி கொண்டது என்பது புலனாகும். இந்நூலில் இதனை நேரிசை சிந்தியல், இன்னிசை சிந்தியல் என்று வகைபடுத்தப் பெறவில்லை எனின் நேரிசை வெண்பாவே போல இரண்டாம் அடியின் இறுதியில் தனிச்சொல் பெற்று இரு விகற்பத்தாலும், ஒரு விகற்பத்தாலும் வருவன நேரிசைச் சிந்தியல் வெண்பாவாகும்.

இன்னிசை வெண்பாவே போலத் தனிச் சொல் பெறாது ஒரு விகற்பத்தாலும், பல விகற்பத்தாலும் மூன்றடியால் வருவன இன்னிசைச் சிந்தியல் வெண்பாவாகும்.[5]

கலித்தொகை, பரிபாடல் ஆகிய சங்கப்பாக்களில் சிந்தியல் வெண்பா உறுப்புகளாக வந்துள்ளன. பதினெண்கீழ்க்கணக்கு நூல்களிலும் இவ்வெண்பாக்கள் செல்வாக்கு பெற்றன.

**சங்க வெண்பா**

இவ்வெண்பா கலித்தொகையிலும், பரிபாடலிலும் இடம் பெற்றுள்ளன (கலி - 92. 42 - 44, 140: 13 - 16, 85: 22 - 25, 104: 73 - 76, 88: 10 - 14, 104: 33 - 38, 102: 25 - 27, 91: 6 - 8, 141: 7 - 10, 17 - 20, 141: 15 - 16, குறள்வெண்பா - 82: 6 - 7,

பஃறொடை - 80: 1 - 9, 98: 1 - 8, பரி - 94: 95, 17:18, 69:70, 17: 20 - 21, 18: 34 - 35, 36:7, 38:9, 19: 65 - 66, 95: 6, 21: 64 - 65, பதி - 1: 72 - 3, 2: 58 - 9, 60:1, 62:3, 16: 17 - 9, 11: 103 - 05, 6: 11 - 3, 65 - 7, 68:70, 6: 71 - 4, 75:8, 7: 61 - 4, 8, 47: 50 - 9, 23:6, 11: 46 - 9;18, 26:9, 8:47, 50: 8:11, தலைவிரவிய இன்னிசை வெண்பா - 20: 108 - 111, பஃறொடை வெண்பா - 6: 87 - 93, 8: 83 - 9, 10: 63 - 8, 11: 4 - 15, 88 - 92, 106 - 114, 20 - 31, 32 - 8, 39 - 47, 50 - 55, 17 - 42 - 6, 18: 1 - 6, 19: 30 - 37, 20: 41 - 5, 74 - 8).

இவ்வாறாகப் பல வெண்பாக்கள் இடம் பெற்றுள்ளன. இவற்றில் முழுமையும் பயன்படுத்தப் பெறவில்லை. ஆய்வு எல்லை கருதி ஒருசிலவே உதாரணங்களாகத் தரப்பட்டுள்ளன.

**சங்க சிந்தியல் வெண்பா**

கலித்தொகையிலும் பரிபாடலிலும் இடம்பெறும் சிந்தியல் வெண்பா இடம் பெற்றுள்ளன. அவை வருமாறு,

> ஒருத்தி, அடிதாழ் கலிங்கம் தழீஇ ஒரு கை
> முடிதாழ் இருங்கூந்தல் பற்றிப்பூ வேய்ந்த
> கடிகயம் பாயும் அலந்து[6]

என்று கலித்தொகையிலும்,

> கல்லகாரப் பூவாற் கண்ணி தொடுத்தாளை
> நில்லிகா என்பாள்போல் நெய்தல் தொடுத்தாளோ
> மல்லிகா மாலை வளாய்[7]

என்று வருவதைப்போலவே பதிணென்கீழ்க்கணக்கு நூல்களிலும் சிந்தியல் வெண்பா செல்வாக்குற்றது.

**கீழ்க்கணக்கில் சிந்தியல் வெண்பா**

ஆசாரக்கோவை நூறு வெண்பாக்களில் அமைந்த அறநூல்; இதனுள் சிந்தியல் வெண்பாக்கள் 53 அடங்கியுள்ளன. இவற்றுள் (3.24) நேரிசை சிந்தியல் வெண்பா. எஞ்சியவை இன்னிசைச் சிந்தியல் வெண்பாவாகும்.

முன்துவ்வார் முன் எழார் மிக்குறார் ஊணின் கண்
என்பெறினு மாற்ற வலமிரார் – தம்மிற்
பெரியார்தம் பாலிருந்தக் கால்[8]

என்ற பாடலில் நேரிசை சிந்தியல் வெண்பா பயின்றுள்ளது.

துறந்தாரைப் பேணலும் நாணலும் தாம் கற்ற
மறந்தும் குரவர்முன் சொல்லாமை மூன்றும்
திறம் கண்டார் கண்ட நெறி[9]

என்ற பாடலில் இன்னிசை சிந்தியல் வெண்பாவினைக் காண முடிகிறது.

**நேரிசை வெண்பா**

நேரிசை வெண்பாவின் இலக்கணத்தை யாப்பருங்கலம், காரிகை என்ற இரு நூல்களும் கூறுகின்றன.

நான்கடி உடையதாய், தனிச்சொல் இரண்டாமடியின் இறுதிச் சீராய் அமைந்து, அவ்விரண்டாமடி ஒரூஉத் தொடை, மேற்கதுவாய் தொடை, கீழ்க்கதுவாய் தொடை, முற்றுத்தொடை ஆகியவற்றில் ஒன்றினைப் பெற்று இரண்டு விகற்பத்தாலும் ஒரு விகற்பத்தாலும் பாடப் பெறுவது நேரிசை வெண்பா எனப்படும்.[10]

காரிகையில், இரண்டு குறள் வெண்பாவாய் இடைக்கண் முதல் தொடைக்கு ஏற்ற தனிச் சொல்லினால் அடி நிரம்பிச் செப்பலோசை குன்றாது முதலிரண்டடியும் ஒரு விகற்பமாகவும் கடையிரண்டடியும் மற்றொரு விகற்பமாகவும் வரினும், நான்கடி ஒரு விகற்பமாய் வரினும் நேரிசை வெண்பா என்று கூறப்பட்டது.

இந்நேரிசை வெண்பாக்கள் சங்க இலக்கியங்களிலும், பதிணென்கீழக்கணக்கிலும் பெருவதைக் காண முடிகிறது.

**சங்க நூலில்**

பாண்தலை இட்ட பலவல் புலையனைத்
தூண்டிலா விட்டுத் துடக்கித்தான் – வேண்டியார்
நெஞ்சம் பிணித்தல் தொழிலாகத் திரிதரும்
நுந்தையால் உண்டி சில[11]

எனப் பயின்றமை உணரத்தக்கது.

பரிபாடலில் மதுரையைப் பற்றி பாடும்போது நேரிசை வெண்பா பயின்று வருவது மனங்கொளத்தக்கது.

உலகம் ஒரு நிறையாத் தானோர் நிறையாப்
புலவர் புலக்கோலால் தூக்க – உலகனைத்தும்
தான்வாட வாடாத தன்மைத்தே தென்னவன்
நான் மாடக் கூடல் நகர்[12]

எனவரும் வரிகளால் உணரலாம்.

**கீழ்க்கணக்கில் நேரிசை வெண்பா**

நாலடியில் 309 பாடல்கள் நேரிசை வெண்பாவாக அமைந்துள்ளது. நான்மணிக்கடிகை - 52 பாடல்கள், கார்நாற்பது - 13 பாடல்கள், களவழி நாற்பது - 10 பாடல்கள், திரிகடுகம் - 50 பாடல்கள், ஆசாரக்கோவை - 6 பாடல்கள், சிறுபஞ்சமூலம் - 97 பாடல்கள், ஏலாதி - 82 பாடல்கள், திணைமாலை நூற்றைம்பது - 150 பாடல்கள், ஐந்திணை எழுபது - 27 பாடல்கள், கைந்நிலை - 9 பாடல்கள், பழமொழி நானூறு - 25 பாடல்களும் இடம்பெற்றுள்ளன.

எனவே கீழ்க்கணக்கு நூல்களில் 1067 பாடல்கள் நேரிசை வெண்பாவாகவே அமைந்துள்ளன. இவற்றிலிருந்து ஒரு பாடலை உதாரணம் காட்டுதல் தகும்.

பல்கணை எவ்வாயும் பாய்தலில் செல்கலா(து)
ஒல்கி உய்க்கும் களிறெல்லாம் – தொல்சிறப்பின்
செல்வலங் குன்றம்போல் தோன்றும் புனல்நாடன்
தெவ்வரை அட்ட களத்து[13]

என வந்துள்ளது.

**இன்னிசை வெண்பா**

ஒரு விகற்பத்தாலும், பல விகற்பத்தாலும் தனிச்சொல் பெறாது நான்கடியால் வருவன இன்னிசை வெண்பா எனப்படும். யாப்பருங்கல நூற்பாவில் ‘நான்கடி’ என்பது சுட்டப் பெறவில்லை. எனின் உரையாசிரியர் அதிகார வசத்தால் இச்சொல் வருவித்து உரைக்கப்பட்டது என்றார்.[14] ஆனால் காரிகையில் நான்கடியால் வருமென்று உரைக்கப்பட்டுள்ளது. கலித்தொகை, பரிபாடல் போன்ற சங்க பனுவல்களில் இன்னிசை வெண்பா உறுப்பாக வந்தன. இவ்வெண்பாக்கள் கீழ்க்கணக்கு நூற்களிலும் தனது செல்வாக்கை ஏற்படுத்தியுள்ளன.

**சங்க இன்னிசை வெண்பா**

கோளரிதாக நிறுத்த கொலையேற்றுக்
காரி கதனஞ்சான் பாய்ந்த பொதுவற்கே
ஆர்வுற் றெமர் கொடை நேர்ந் தார் அலர் எடுத்த
ஊராரை உச்சி மிதித்து[15]

எனக் கலித்தொகையில் பயின்றுள்ளன.

**கீழ்க்கணக்கில் இன்னிசை வெண்பா**

இன்னிசை வெண்பா கீழ்க்கணக்கு நூல்களில் மிகுதியாக இடம் பெற்றுள்ளன. நான்மணிக்கடிகை - 48 பாடல்கள். பூதஞ்சேந்தனார் பாடிய இனியவை நாற்பது முழுமையும் இன்னிசை வெண்பாவாகும். இன்னா நாற்பதும் இன்னிசை வெண்பாவால் யாக்கப்பட்டன. கார்நாற்பதில் - 27 பாடல்களும், களவழி நாற்பதில் - 12 பாடல்களும், திரிகடுகத்தில் - 51 பாடல்களும், ஆசாரக் கோவையில் - 32 பாடல்களும், சிறுபஞ்சமூலத்தில் - 12 பாடல்களும், ஏலாதியில் - 12 பாடல்களும், திணைமொழி ஐம்பதில் - 47 - 2, ஐந்திணை ஐம்பதில் - 16, ஐந்திணை எழுபதில் - 40 - 2, திணைமாலை நூற்றியயைம்பதில் - 4, கைந்நிலையில் - 38, பழமொழி நானூற்றில் - 225 இன்னிசை வெண்பாக்களாகும். பதிணென்கீழ்க்கணக்கில் 666 இன்னிசை வெண்பாக்கள் இடம் பெற்றுள்ளன.

பத்துக் கொடுத்தும் பதியிருந்து வாழ்வினிதே
வித்துக்குற் றுண்ணா விழுப்பம் மிகஇனிதே
பற்பல நாளும் பழுதின்றிப் பாங்குடைய
கற்றலின் காழினிய தில்[16]

என்ற பாவால் விளங்கி நிற்கிறது.

**பஃறொடை வெண்பா**

பாதம் பலவரின் பஃறொடை வெண்பா[17]

என்று யாப்பருங்கலமும்,

துன்னும் அடிபலவாய்ச் சென்று நிகழ்வ
பஃறொடையாம் என்று காரிகையும்[18]

பஃறொடை வெண்பாவின் இலக்கணம் கூறுகின்றன. ஏனைய வெண்பாக்களை விட இவ்வெண்பா அடியளவில் மிக்கதாக உள்ளன.

**சங்கநூல் பஃறொடை**

கலித்தொகையில் (88: 10 - 14) என்ற பாடலிலும், பரிபாடலில் (6: 87 - 93, 8:83 - 89, 10: 63 - 68, 11: 4 - 15, 88 - 92, 106: 114, 16: 20 - 31) போன்ற செய்யுட்களில் இடம் பெற்றுள்ளன.

**கீழ்க்கணக்கு நூற்களில் பஃறொடை வெண்பா**

நான்கடியில் மிக்குவரும் வெண்பாக்கள் 31 'பதினெண்கீழ்க்கணக்கில்' உள்ளன. இவற்றில் மிகுதியானவை களவழி நாற்பதில் வழங்குவன. இவற்றுள் 19 பாடல்கள் பஃறொடை வெண்பாக்கள். நான்மணிக்கடிகையில் மூன்று பாடல்கள் உள்ளன.

இனியவை நாற்பது 9ஆம் பாடல் பஃறொடை வெண்பாவால் யாக்கப் பெற்றது.

ஓவாக் கணைபாய வொல்கி எழில்வேழம்
தீவாய்க் குருதி இழிதலால் செந்தலைப்
பூவலங் குன்றம் புயற்கேற்ற போன்றவே
காவிரி நாடன் கடாஅய்க் கடிதாகக்
கூடாரை அட்ட களத்து[19]

என்ற களவழி பாடலால் அறியலாம். மேற்கூறியவற்றால் சங்க வெண்பாக்கள், கீழ்க்கணக்கு நூல்களில் ஏற்படுத்திய செல்வாக்கை உணர முடிகிறது.

**பெயரமைப்புச் செல்வாக்கு**

சங்க இலக்கியங்கள் காதலையும், வீரத்தையும் பாடுபொருள்களாகக் கொண்டு விளங்கின. கீழ்க்கணக்கு நூல்கள் நீதியையும், நேர்மையையும் பாடுபொருள்களாகக் கொண்டுள்ளன. இருப்பினும் பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் தனக்கு முன்தோன்றிய சங்க இலக்கியச் சாயலை மறந்திடவில்லை. யாப்பு முதலிய பாவகைகளில் செல்வாக்குற்றதைப் போலவே அன்பின் ஐந்திணைகளிலும் செல்வாக்குப் பெற்றிருந்தன. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்ற திணைகளை ஐந்திணைகள் என்று கையாளப்பட்டுள்ளது. நற்றிணை நானூறு, அகநானூறு என்ற சங்கநூற்கள் தன் பாடல் எண்ணிக்கையைக் குறித்தது போலவே, கீழ்க்கணக்கு நூல்களும், ஐந்திணை ஐம்பது, ஐந்திணை எழுபது, திணைமாலை நூற்றைம்பது,

திணைமொழி ஐம்பது என்று கையாண்டுள்ளனர். இக்கருத்தை, 'பத்து' எனும் ஒரு பாட்டுநெறி சங்க இலக்கியத்தே முகிழ்த்தது. ஒருபொருள்மேல் மூன்றடுக்கியதே, பத்தடுக்கிய நிலைக்கு இட்டுச் சென்றிருக்கலாம். பத்துக்களாகப் பாடுவது பத்துப் பத்துக்களாகப் பாடும் மரபிற்கே இட்டுச் சென்றது. பத்தின் வேறுபாடுகளாக இலக்கிய வகைகள் தமிழில் கிளைத்துள்ள முறை, அதன் பரிநாம வளர்ச்சியைக் காட்டவல்லது. ஐந்திணை ஐம்பது, எழுபது, திணைமாலை நூற்றைம்பது என இவ்வாறு ஒருபுறம் வளர்ச்சி பெறக் காண்கிறோம் என்பர்.[20]

இதற்குக் காரணம் சங்க இலக்கியங்களின் செல்வாக்கைக் கீழ்க்கணக்கு நூல்களின் மிகுதியாகப் பெற்றதாகும்.

பதிற்றுப்பத்து என்ற சங்கப்புற இலக்கியம் பத்து சேர அரசர்களைப் பாடுவதாக அமைந்துள்ளது.

கீழ்க்கணக்கு நூலாகிய களவழி நாற்பது புறம் பற்றிய செய்திகளைக் கூறும் புறநூலாகும். இதில் சோழன் செங்காணனும், சேரமான் கணைக்காலிரும் பொறையும் போர்ப்புறத்துப் போரிடுவது பற்றிய நாற்பதும் பாடல்களைக் கொண்டுள்ளது. களம் பற்றி நாற்பது பாடல் பாடியதால் இது களவழி நாற்பதாயிற்று. இது பதிற்றுப்பத்து என்ற சங்க நூல் செல்வாக்கால் களவழி நாற்பது என்று பெயரிட்டுள்ளாரோ என்று எண்ணத் தோன்றுகின்றது.

சங்கப் பாடல்கள் தனித்தனியாக இருப்பதைப் போன்றே கீழ்க்கணக்குப் பாடல்களும் தனிப்பாடல்களாகக் காணப்படுகின்றது.

ஐங்குறு நூறு என்னும் சங்க நூலில் பாடல்கள் ஐந்து திணைகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. அவற்றினுள் இடம் பெறும் செய்யுட்கள் பத்து பத்தாக எடுத்தாளப்பட்டுள்ளன. இச்சங்க நூல் தன்பின் தோன்றிய கீழ்க்கணக்கு நூலாகிய முதுமொழிக் காஞ்சியில் செல்வாக்குப் பெற்றவை உளங்கொளத் தக்கது.

| ஐங்குறுநூறு | முதுமொழிக்காஞ்சி |
|---|---|
| வேட்கைப் பத்து | சிறந்த பத்து |
| வேழப் பத்து | அறிவுப் பத்து |
| கள்வன் பத்து | பழியாப் பத்து |
| தோழிக்குரைத்த பத்து | துவ்வாப் பத்து |
| கிழத்திக் கூற்றுப் பத்து | அல்ல பத்து |
| புனலாட்டுப் பத்து | இல்லைப் பத்து |
| புலவிப் பத்து | பொய்ப் பத்து |
| தோழிக் கூற்றுப் பத்து | எளிய பத்து |
| புலவி விராய பத்து | நல்கூர்ந்த பத்து |
| எருமைப் பத்து | தண்டாப் பத்து |
| அன்னாய் வாழிப்பத்து | |
| அன்னாய்ப் பத்து | |
| அம்மவாழிப் பத்து | |

இருகால நூல்களின் உள்ளடக்கம் வெவ்வேறாக இருந்தாலும் புறஅமைப்பால் இவ்விலக்கியச் செல்வாக்கை அறிய முடிகிறது. நிலையாமையை விளக்கும் சங்கநூலாகிய மதுரைக்காஞ்சி என்ற நூல் போலவே, கீழ்க்கணக்கிலும் முதுமொழிக்காஞ்சி என்ற நூல் நிலையாமையை எடுத்துரைக்கின்றது.

சங்க காலத்தில் பாடல்களின் எண்ணிக்கையோடு நூல்களைச் சார்த்திக் கூறும் மரபு உள்ளது. எ.டு. நற்றிணை நானூறு, புறநானூறு என்பன. இம்மரபு கீழ்க்கணக்கு நூல்களிலும் பழமொழி நானூறு, நாலடி நானூறு, இனியவை நாற்பது, இன்னா நாற்பது, கார் நாற்பது என சங்க நூற்கள் செல்வாக்குற்றிருத்தலை இவ் ஆய்வின் மூலம் அறிய முடிகிறது.

## அடிக்குறிப்புகள்

1. இளம், தொல் - செய்யு. நூ. 101
2. மு. இளமுருகன், தமிழ்ப் பெருங்காப்பியங்களில் சங்க இலக்கியச் செல்வாக்கு - ப. 40
3. சோ.ந. கந்தசாமி, 'தமிழ் யாப்பியலின் தோற்றமும் வளர்ச்சியும்', ப. 619
4. யா. கலம் - 60
5. யா. கலம் - 60
6. கலித். - 92: 42 - 44
7. பரிபா. - 11: 103 - 105
8. ஆசா. கோ - 24
9. மேலது - 63
10. யா. கலம் - 60
11. கலித். - 85: 22 - 25
12. பரி. - 6
13. களவழி - 10
14. யா. கலம் - 61
15. கலித் - 104: 73 - 76
16. இனியது - 41
17. யா. கலம் - 62
18. யா. காரி - 26
19. களவழி - 12
20. க.ஆ. இராம. பெரிய கருப்பன், சங்க இலக்கியக் கருத்தரங்குக் கட்டுரைகள், சங்க இலக்கியம் ஒப்பியல் நோக்கு - ப. 71

## சொல் அமைப்புச் செல்வாக்கு

சங்க இலக்கிய வரிகளின் பகுதிகள் பல கீழ்க்கணக்கு நூற்களில் கையாளப்பட்டுள்ளன. இவற்றைச் சொல்லமைப்புச் செல்வாக்கு அல்லது பகுதிவரிச் செல்வாக்கு எனக் கொள்ளவியலும், சங்க இலக்கியங்களில் இடம் பெறும் சொற்கள் கீழ்க்கணக்கு நூல்களில் பெருமளவில் கையாளப்பட்டுள்ளன. சில இடங்களில் தொடர்களை அப்படியே கையாண்டுள்ளனர். பல இடங்களில் அச்சொற்களின் பொருள் வரும்படியும் கையாண்டுள்ளனர். பெரும்பாலும் இவை விலங்கு, பறவை, மரம், கனி, மலை, நிலவு, பொழுது, மலர், மழை, வண்டு, குளம், பொய்கை ஆகியவற்றைக் கொண்டு விளங்கும் சொற்களைக் காண முடிகிறது. அவ்வாறு இடம்பெறும் சொற்களைக் கீழ் வரும் உதாரணங்களின் வாயிலாக அறியலாம்.

**குன்றம்**

சில இடங்களில் சொற்செல்வாக்கென்று தனித்து வருகின்றன. சில சமயங்களில் தொடரில் வருகின்றன. முதல் வரியில் இறுதியில் வரும் சொற்கள் அடுத்த வரியில் முதலிலும் வரலாம். இடை இறுதி என்ற இடங்களில் வரலாம். அவ்வாறு வருவதை இங்கு எடுத்துக் கூறப்பட்டுள்ளன.

தலைவனின் அருமையைக் கூறும்போது, 'மலைநாட்டுத் தலைவனே' என்று கூறப்படுகிறது. பெரிய மலை நாட்டின் தலைவனைத் தலைவி காதலிக்கிறாள் என்று

அறத்தொடு நிற்குமிடங்களிலும் குன்றம் கூறப்படுகிறது. குறிஞ்சி நிலத் தலைவனைக் கூறும்போது குன்றம் குறிப்பிடப்பட்டுள்ளது.

மால்வரை இழிதரும்[1]

என குறுந்தொகையில் 'பெரிய மலை' என்ற சொல், ஐந்திணை ஐம்பதில்,

மால்வரை வெற்ப[2]

என்றும்,

நன்மலை நாடன்[3]

என்றும் கூறப்பட்டுள்ளன.

குன்றம் பற்றிய பாடல் வரிகள் சங்க இலக்கியங்களில் நிரம்ப இடம் பெற்றுள்ளன. இதுபோல் கீழ்க்கணக்கு நூல்களிலும் குறிஞ்சித் திணைப் பாடல்களில் செல்வாக்குப் பெற்று விளங்குகிறது.

**கடல்**

கடல் பற்றியும், கடலில் செலுத்தும் கலம் குறித்தும் கூறப்படுகிறது. சங்க இலக்கியங்களில் மணல், பெரிய கடல், வெண்சங்கு, பரதவர் முதலியன பற்றி சொற்கள் இடம் பெற்றுள்ளன. இச்சொற்கள் தனக்குப் பின் தோன்றிய இலக்கியங்களிலும் தாக்கத்தை ஏற்படுத்தியுள்ளது பெருங்கடல் என்ற சொல்.

பெருங்கடற் கரையது[4],
பெருங்கடற் பரதவர்[5]

என்று சங்க நூற்களில் வந்துள்ளது. இவை திணைமாலையில்,

பெருங்கடல் வெண்சங்கு[6]

என செல்வாக்குப் பெற்றுள்ளன. அதுபோன்று வெண்மணல் என்ற சொல்லும் பலவாறாக இடம் பெற்றுள்ளன.

வெண்மணற் பொதுளிய[7]

(குறுந் - 386) என்ற குறுந்தொகை சொல்,

வெண்மணற் கானலுறு[8]

என திணைமாலையில் செல்வாக்குற்றன.

**பிரிவிடைக் கூற்று**

தலைவியைப் பிரிந்து சென்ற தலைவன் வரவில்லை. அதனால் கவலையடைந்த தோழி - தலைவிக்குக் கூறியது. சில இடங்களில் தலைவி தோழிக்குக் கூறுவதாக அமைந்துள்ளது. தலைவன் பொருள்தேடச் சென்றவிடத்து அங்கு நடக்கும் நிகழ்ச்சிகளைப் பார்த்து (ஆண் பல்லி, பெண் பல்லி) தலைவன் வந்துவிடுவான் என்று விழித்துக் கூறியது.

உள்ளார் கொல்லோ தோழி[9]

என்ற சொல் குறுந்தொகையில் (குறுந் - 16, 67) பல இடங்களில் இடம் பெற்றுள்ளன. இச்சொல்,

உள்ளார் கொல் காதலர்[10]

என்று ஐந்திணையில் இடம் பெற்றுள்ளமை மனக்கொளத் தக்கது.

**களிறு**

யானையைப் பற்றிய பாடல்கள் மிகுதியாக இடம் பெற்றுள்ளன. யானையில் ஆண் யானையைக் களிறு என்றும், பெண் யானையை பிணை, வேழம் என்றெல்லாம் வழங்கப் பெறுகிறது.

நெடுநல் யானை[11]

என்று குறுந்தொகையும்,

நல் யானை[12]

என திணைமாலையும் கூறியுள்ளன. இதுபோன்ற சொல் பல இடங்களில் ஆட்சி பெற்றுள்ளன.

களிறியங் காரிடை[13]

என்ற சொல்,

இரும்புலி தொலைத்த பெருங்கை யானை[14]

என நற்றிணையிலும் வருகிறது. இது,

கடுங்களிறு விட்டுழிச்[15]

என சிறுபஞ்ச மூலத்தில் செல்வாக்குற்றுள்ளன.

**மிளகுக்கொடி: கறிவளர்**

மலையின் அழகை வருணிக்கும்போது, மிளகுக்கொடி படர்ந்த மலை என்று வருணிக்கப்பட்டுள்ளது. மிளகுக்கொடி, அடர்ந்து, செழித்து வளர்ந்திருப்பதை

கறிவளர் சிலம்பில்'[16]

என்று சங்க இலக்கியங்கள் கூறுகின்றன. இவை மட்டுமின்றி (குறுந் - 288, ஐங் - 243, அகம் - 112:114) பல சங்கப் பாடல்களில் சொல்லாட்சி பெற்றுள்ளன. இச்சொல்,

கறிவளர் பூஞ்சாரல்[17]

என்று திணைமாலையில் கையாளப்பட்டுள்ளன.

**மழை**

ஆரவாரம் செய்து பெய்யும் மழைக்கு அடைமழை என்கிறோம். ஆனால் சங்க இலக்கியம் இதனைக் கணைபெயல் என்று கூறுகிறது. இச்சொல் கீழ்க்கணக்கு நூலில் செல்வாக்குற்றதை உணர முடியும்.

கனைபெயல்[18]

என்னும் ஐங்குறுநூற்றுச் சொல்,

கனைபெயல்[19]

என திணைமொழியில் செல்வாக்கு பெற்றுள்ளன. மேலும் இச்சொல் (கலி - 45:48, 46-18, 48:15, 90:22, 116:14) ஆகிய இடங்களில் இடம் பெற்றுள்ளன.

**திருமணி**

நாகப்பாம்பு உமிழ்ந்த மணி பற்றிச் சங்க நூல் திருமணி என்று கூறுகிறது.

திருமணியுமிழ்ந்த நாகம்[20]

என்ற சொல்,

அருமணி நாகம்[21]

என்றும்,

முதிர்மணி நாகம்[22]

என்று கீழ்க்கணக்கு நூல்களில் செல்வாக்குப் பெற்றுள்ளன. இச்சொல் (குறுந் - 185, கலி - 45:46, குறுந் - 239) நிரம்ப இடம் பெற்றுள்ளன.

**நாணொடுக்கம்**

நாணத்தால் உண்டாகும் ஒடுக்கம் என்பது இதன் பொருள். இச்சொல் கலித்தொகையில் உள்ளது போல் கீழ்க்கணக்கு நூல்களிலும் கையாளப்பட்டுள்ளன.

நாணொடுக்கம்[23]

என்ற சொல்,

நாணொடுக்கம்[24]

என செல்வாக்குப் பெற்றன.

**கழுமிய நாட்பு**

கலங்குதல் இல்லாத படைக்களம், போர் என்பது இதன் பொருள். இதை புறநானூற்றில் கையாண்டுள்ளனர். இச்சொல் களவழி நாற்பதில் அப்படியே செல்வாக்குப் பெற்றுள்ளன.

கழுமிய ஞாட்பினுள்[25]

என புறநானூற்றிலுள்ள சொல்,

கழுமிய ஞாட்பினுள்[26]

என களவழி நாற்பதில் தாக்கம் பெற்றுள்ளன.

**கொடும்பாடு**

நடுவு நிலைமையைக் குறிக்கும் சொல் கொடும்பாடாகும். இச்சொல் சங்க நூலாகிய பரிபாடலில் கையாளப்பட்டுள்ளன.

கொடும்பாடு[27]

இச்சொல் கீழ்க்கணக்கு நூல்களில் அப்படியே,

கொடும்பாடு[28]

எனச் செல்வாக்குப் பெற்றுள்ளன. இச்சொல் சில (இனியது - 30) இடங்களில் கையாளப்பட்டுள்ளன.

**கணைக்கால்**

நீர்நிலையில் பூக்கும் பூக்களைக் கணைக்கால் என்று குறித்தனர். இது சங்க இலக்கியங்களாகிய ஐங்குறுநூறு (98), நற்றிணை (230, 138, 262), குறுந்தொகை

(9), கலித்தொகை (119 - 5), பெரும்பாணாற்றுப்படை போன்ற நூல்களில் இடம் பெற்றுள்ளன.

கணைக்கால் நெய்தல்[29]

என வருகிறது. இவை,

கணைக்கால் நெடுமருது[30]

எனத் திணைமொழியில் வந்துள்ளன.

**பூங்கண்**

இச்சொல் அழகிய கண்கள் என்று பொருள். இது சங்க நூல்களில் சொல்லப்பட்டப் பொருளிலேயே கீழ்க்கணக்கு நூல்களிலும் குறிப்பிடப் பெற்றுள்ளன. (கலி. 79 - 20).

பூங்கண்[31]

என அகநானூற்றிலும்,

பூங்கண்[32]

எனக் கீழ்க்கணக்கு நூலிலும் வந்துள்ளன.

**கவழம்**

யானைக்குக் கொடுக்கும் உணவின் அளவுக்கு கவழம் என்று குறித்துள்ளனர். கவழம் - ஒரு வாய் உணவு என்று பொருள். இச்சொல்,

கவழம்[33]

எனச் சங்க நூலிலும்,

கவழம்[34]

திணைமாலையிலும் வந்துள்ளன.

**கடம்பர் செல்வன்**

முருகனைக் குறிக்கும் கடம்பர் செல்வன் என்ற சொல் செல்வாக்கு ஈண்டு அறியத்தக்கதாகும்.

கடம்பமர் செல்வன்[35]

எனப் பரிபாடலில் வரும் சொல்,

கடம்பமர்செல்வன்[36]

எனக் கீழ்க்கணக்கு நூலில் வந்துள்ளன.

**இருங்கழி**

உப்பங்கழியைக் குறிக்கும் சொல்லாக இருங்கழியை கையாண்டனர். இது குறுந்தொகையில் (172:2, 313:2, 320:2, 324:3) பல இடங்களில் இடம் பெற்றச் சொல் ஐந்திணை எழுபதிலும் செல்வாக்கு அடைந்துள்ளன.

இருங்கழி[37], இருங்கழி[38]

என வந்துள்ளன.

**இடுமணல்**

இட்ட மணல் மேடுகளைக் கொண்ட கடற்கரை என்று கூறப்படுகிறது. இச்சொல், குறுந்தொகையில் இடம் பெற்றுள்ளன.

இடுமணல்[39]

என்ற சொல்,

இடுமணல்[40]

சங்க நூலில் அப்படியே எடுத்தாளப்பட்டுள்ளன.

**ஆர்கலி**

கடல் சூழ்ந்த அல்லது மிகுதியான நீரையுடைய என்று பொருள்படும். இது,

ஆர்கலி[41]

என குறுந்தொகையில் வந்துள்ளன.

ஆர்கலி[42]

என முதுமொழிக்காஞ்சியில் கையாளப்பட்டுள்ளன. முதுமொழிக்காஞ்சியில் (1, 11, 21, 31, 41, 51, 61, 71, 81, 91) பல இடங்களில் செல்வாக்குப் பெற்றுள்ளன.

**அணங்குதல்**

வருந்துதல் என்று பொருள்படும். குறுந்தொகையில்,

அணங்குதற்கு[43]

என்ற சொல் திணைமாலையில்,

அணங்குதல்[44]

எனச் செல்வாக்குப் பெற்றது.

**ஐவாயரவம்**

ஐந்து வாயையுடைய நாகப்பாம்பு. இத்தொடர் பரிபாடலில்,

ஐந்தலை யவிர்பொறி அரவம்[45]

என்ற சொல் திணைமாலையில் அப்படியே,

ஐவாய நாகம்[46]

எனச் செல்வாக்குற்றது.

**வெஞ்சுரம்**

வெம்மை மிகுந்த பாலை நிலத்தைக் குறிக்கும் சொல்லாகும். இது குறுந்தொகையில்,

வெஞ்சுரம்[47]

என்ற சொல் வந்துள்ளது. இச்சொல் எவ்வித மாற்றமுமின்றி

வெஞ்சுரம்[48]

என கைந்நிலையில் வந்துள்ளது.

**கவ்வை**

கவ்வை[49]

என்பது சங்க இலக்கியத்தில் ஆரவார ஒலி, என்ற பொருளில் வந்துள்ளது. ஆனால் திணைமாலையில்,

கவ்வை[50]

என்ற சொல், பழிச் சொல் என்ற பொருளில் கையாளப்பட்டுள்ளன. இச்சொல் திணைமொழி ஐம்பதில் 7, 11 ஆகிய பாடலில் செல்வாக்குப் பெற்றுள்ளன.

**நெடுங்கடல்**

நெடுங்கடல்[51]

நற்றிணையில் நெடிய கடல் என்ற பொருளில் கையாளப்பட்டுள்ளது.

நெடுங்கடல்[52]

என்பது அதே பொருளில் செல்வாக்குற்றன.

**எறிசுறா**

எதிர்ப்பட்டாரைத் தாக்குகின்ற சுறா மீன்கள் எனக் குறுந்தொகையில் கூறப்பட்டுள்ளது.

எறிசுறா[53]

என்ற இச்சொல்,

எறிசுறா[54]

சுறா மீன்களின் கூட்டம் என ஐந்திணை ஐம்பது கூறுகிறது.

**கொடுங்கோல்**

கொடுங்கோல்[55]

என்பது முறை தவறிய ஆட்சியென புறநானூறு சுட்டுகிறது. இன்னா நாற்பதில் வரும்

கொடுங்கோல்[56]

என்ற சொல்லும் இதே பொருளில்தான் செல்வாக்குற்றுள்ளது.

**வன்கண்**

வன்கண்[57]

என்பது வற்புறுத்துதல் என்று குறுந்தொகையிலும்,

வன்கண்[58]

என்பது நான்மணிக்கடிகை என்று பொருள் கூறுகிறது. ஆனால் சொல் அப்படியே கையாளப்பட்டுள்ளது.

**தீஞ்சுளை**

தீஞ்சுளை[59]

என்ற சொல் இனிய சுவையுடையது என புறநானூறு கூறுகிறது.

தீஞ்சுளை[60]

என்பது சுவையுடைய பழங்களான பலாப்பழம் என ஐந்திணை எழுபது கூறுகிறது. இச்சொல் (புறம்: 129:4, 109:5) பல செய்யுட்களிலும் செல்வாக்குப் பெற்றுள்ளது.

**கொண்கண்**

கொண்கண்[61]

என்ற சொல் குறுந்தொகையில் (கணவனை) தலைவனைக் குறித்தது.

கொண்கண்[62]

என்ற சொல் ஐந்திணை ஐம்பதில் அதே கருத்தில் செல்வாக்குப் பெற்றன.

**பெருங்கடல்**

பெருங்கடல்[63]

என்பதை பெரிய கடல் என்று குறுந்தொகை கூறுகிறது. (குறுந் - 101:1, 246:1, 269:4, 303:2, 320:1, 243:4) அதே பொருளில்,

பெருங்கடல்[64]

என்ற சொல்லை திணைமாலை கையாண்டுள்ளது.

**கண்படுக்கும்**

கண்படுக்கும்[65]

என்ற சொல் உறக்கம் என்ற கருத்தில் குறுந்தொகை யாகுகிறது.

கண்படுக்கும்[66]

என்ற சொல்லும் உறங்கும் என்றே ஒரு கருத்தையே ஐந்திணை ஐம்பது கூறுகின்றது.

இவ்வாறு சங்க இலக்கியச் சொற்கள் கீழ்க்கணக்கு நூற்களில் செல்வாக்குற்றதை அறிய முடிகிறது.

**நொதுமலர்**

நொதுமலர்[67]

என்ற சொல் கலித்தொகையில் அயலார் என்று விளங்கிப் பெற்றுள்ளது. திணைமாலையில்,

நொதுமலர்[68]

என்ற சொல் அயலார் என்றே செல்வாக்குற்றன.

**பொதும்பர்**

பொதும்பர்[69]

என்பது குறுந்தொகையில் சோலையைக் குறித்தது. திணைமாலையிலும்,

பொதும்பர்[70]

என்ற சொல் மாறாமல் கையாளப்பட்டுள்ளன.

**வெதிர்**

வெதிர்[71]

என்ற சொல் அகநானூற்றில் மூங்கில் என்று அழைக்கப்பட்டுள்ளன. இவை (புறம் 109:4, அகம் 397.16) பல இடங்களில் வந்துள்ளன. இதுபோல் நான்மணிக்கடிகையிலும்,

வெதிர்[72]

என்பது மூங்கிலைக் குறித்துள்ளது.

**இருந்தும்பி**

இருந்தும்பி[73]

என்ற சொல் இசைக்கும் வண்டுகள் என்று கலித்தொகைக் கூறுகிறது. கார் நாற்பதும்,

இருந்தும்பி[74]

என்பதை அதே பொருளில் கையாண்டுள்ளன.

கீழ்க்கணக்கு நூல்கள் தோன்றிய காலத்தில் மொழியில் புதிய சொற்கள் உருவாகியுள்ளன. கீழ்க்கணக்கு நூல்கள் வெண்பாக்களாகத் தோன்றியிருப்பினும் முன்னோர் கையாண்ட சொற்களைப்போல் போற்றியுள்ளனர். இச்சொற்களின் அமைப்பினால், சங்க இலக்கியம் தனக்குப் பின்வந்த நூல்களில் செல்வாக்கை ஏற்படுத்தியுள்ளமை இவண் மனங்கொளத் தக்கது.

## அடிக்குறிப்புகள்

1. குறுந் - 95
2. ஐந் - ஐம் - 12
3. மேலது - 11
4. குறுந் - 313
5. மேலது - 320
6. திணைமாலை - 33
7. குறுந் - 281
8. திணைமாலை - 51
9. குறுந் - 232
10. ஐந் - ஐம் - 4
11. குறுந் - 77 - 4
12. திணைமாலை - 22
13. கலி. 49:2
14. நற் - 353 - 10
15. சிறுபஞ்ச - 80
16. கலி - 52:17
17. திணைமாலை - 7
18. ஐங் - 405
19. திணைமொழி - 28
20. அகம் - 138
21. கார் - 20
22. திணைமொழி - 28
23. கலித் - 52:25

24. சிறுபஞ் - 45

25. புறம் - 178

26. களவழி - 11

27. பரி - 2:76

28. இன்னா - 6

29. அகம் - 360

30. திணைமொழி - 32

31. அகம் - 66 - 12

32. ஐந் - எழு - 47

33. மலைபடு - 308

34. திணைமாலை - 42

35. பரி - 8:126

36. ஐந் - ஐம் - 1

37. குறுந் - 313:2

38. ஐந் - எழு - 64

39. குறுந் - 205:5

40. ஐந் - எழு - 59

41. குறுந் - 52:1

42. முதுமொழிக் - 1

43. குறுந் - 337 - 4

44. திணைமாலை - 47

45. பரி - 19:72

46. திணைமாலை - 13

47. குறுந் - 77:2

48. கைந் - 24

49. குறுந் - 282

50. திணைமாலை - 35, 73

51. நற் - 175 -1

52. கைந் - 50

53. குறுந் - 318

54. ஐந் - எழு - 65

55. புறம் - 71

56. இன்னா - 3

57. குறுந் - 395

58. நான்மணி - 93

58. புறம் - 380 - 9

60. ஐந்.எழு - 4

61. குறுந் - 212

62. ஐந் - ஐம் - 44

63. குறுந் - 311:1

64. திணைமாலை - 33

65. குறுந் - 308:5

66. ஐந் - ஐம் - 35

67. கலித் - 59:19

68. திணைமாலை - 39

69. குறுந் - 313:3

70. திணைமாலை - 29

71. அகம் - 185 - 6

72. நான்மணி - 4

73. கலித் - 30.4, 43-9

74. கார் - 15

## தொடர் அமைப்புச் செல்வாக்கு

அகத்தையும் புறத்தையும் பாடுவதற்கு ஆசிரியப்பாவே சிறந்ததென்பர். அதனால் சங்க இலக்கியங்கள் பதினெட்டும் ஆசிரியப்பாவால் இயற்றப்பட்டன. ஆனால் கீழ்க்கணக்கு நூல்களில் பெரும்பாலானவை நீதி நூல்களாகும். கதை அமைப்பின்றி சொல்ல வேண்டிய கருத்தைச் சுருங்கச் சொல்லி விளங்க வைப்பதற்கு வெண்பா யாப்புதான் சிறந்ததென்பர். அதனால் கீழ்க்கணக்கு நூல்கள் வெண்பாவால் இயற்றப்பட்டுள்ளன. இவ்விரு பாக்களும் வெவ்வேறாக இருப்பதால் இரு நூல்களின் சொற்களும் தொடர்களும் ஓரளவிற்கு ஒத்துள்ளன. கீழ்க்கணக்கு நூல்களில் காலமாற்றத்திற்கு ஏற்ப தொடர்கள் சிறிது மாற்றம் பெற்றுள்ளன. இருப்பினும் சங்க இலக்கியக் கருத்துக்கள் கீழ்க்கணக்கு நூல்களில் செல்வாக்குற்றிருப்பது மறுக்க முடியாத உண்மையாகும். இவ்வகைத் தொடர் செல்வாக்கினைக் கண்டறிதல் ஒப்பாய்வின் ஒரு பகுதியாகும்.

**இறைவழிபாடு**

எந்த ஒரு செயலையும் தொடங்குவதற்கு முன்பு இறைவழிபாடு செய்வது மனிதகுல வழக்கமாகும். இது தமிழ் இலக்கியங்களில் பெரிதும் போற்றப்பட்டுள்ளன. புலவர்கள் நூல் தொடங்கும்முன்பு ஏதாவது ஒன்றை வணங்கி பின்பு நூல் எழுதுவர். இது இயற்கையாகவோ, இறைவனாகவோ, அந்தந்தப் புலவர்களின் விருப்பம்போல் அமையும். சங்ககாலத்தில் இருந்து முருகன், சிவன், பலராமன் போன்ற தெய்வ வழிபாடு

குறிப்பிடப்பட்டுள்ளது. அவ்வாறு நிகழ்ந்த பலராமன் வழிபாட்டினை சங்க இலக்கியங்கள் கூறுகிறது. இந்த கருத்துப் பின்வந்த இலக்கியங்களிலும் செல்வாக்குற்றன.

அடல்வெந் நாஞ்சிற் பனைக்கொடியோனும்[1]

என்று புறநானூற்றில் இடம் பெற்ற தொடர்,

பொற்பனை வெள்ளையைப் உள்ளாதொழுகின்னா[2]

என்று இன்னா நாற்பதில் செல்வாக்குப் பெற்றது.

**மழை**

மழை இல்லை என்றால் உலகம் இல்லை, மக்கள் இல்லை என்ற கருத்தை விளக்குமுகத்தான் இத்தொடர் அமைந்துள்ளது. இது எல்லாக் காலத்து இலக்கியங்களும் நவில்கின்றன.

............................ வானந்
துளிமாறு பொழுதினிவ் உலகம்[3]

என்ற கலித்தொகை வரிகள்,

வானத்துளி நோக்கி வாழுமுலகம்[4]

என்றும்,

மழையின்றி மாநிலத்தார்க்கில்லை[5]

என்றும் கீழ்க்கணக்கு நூல்களில் செல்வாக்குப் பெற்றதை அறிய முடிகிறது.

**மூங்கில்: சான்றோர்**

மூங்கில் மரங்கள் நெல்லுண்டானதே பட்டுவிடும். இதுபோன்று சான்றோர்கள் தன்நிலை தாழ்ந்தால் உயிர் வாழார் என்ற கருத்தை விளக்குவதற்காக இத்தொடர் கையாளப்பட்டுள்ளன.

நெல்லுடை நெடுவெதிர்சாம்[6]

என்ற சங்க வரி,

நெற்பட்ட கண்ணே வெதிர்சாம்[7]

என்ற கீழ்க்கணக்கில் தாக்கப்பெற்றுள்ளன. இத்தொடர் (அகம் 397 - 16, புறம் 109-4) பல இடங்களில் கையாளப்பட்டுள்ளன.

**தலைவன்**

தலைவனுடைய மலைநாட்டுப் பெருமையைக் கூறும்போது, இனிய சுளைகளைக் கொண்ட பலாமரங்கள் நிறைந்த மலைநாடனே என்று செப்புகின்றனர். இக்கருத்து மிக்க தொடர்,

தீஞ்சுளைப் பலவின் நாஞ்சிற் பொருநன்[8]

என்று சங்க இலக்கியத்திலும்,

மன்றப் பலவின் சுளை விளை தீம்பழம்[9]

என்றுக் கீழ்க்கணக்கு நூலிலும் எடுத்தாளப்பட்டுள்ளன. இத்தொடர் (புறம் 109:5, 129-4) பல இடங்களில் இடம்பெற்றுள்ளன.

**மணிகள்**

பாறைகளில் தோன்றும் ஒளிமிகுந்த மணிகளைப் பற்றிக் கூறும்போது,

மாமலை பயந்த காமரு மணியும்[10]

என்றுப் புறநானூறு கூறும் தொடரை,

கல்லிற் பிறங்குங் கதிர் மணி[11]

என நான்மணிக்கடிகைக் கையாண்டுள்ளது.

**நிலவு**

போர்க்களத்தில் யானையில் துதிக்கைகள் துண்டிக்கப்பட்டுக் கிடக்கும் காட்சி மதியைத் தீண்டுகின்ற பாம்பினை ஒத்துள்ளது. இத்தொடர்,

கோடுவாய் கூடாப்பிறை[12]

என சங்கத் தொடர்.

கோடுகொள் ஒண்மதியை[13]

என்றுக் கீழ்க்கணக்குத் தொடரில் செல்வாக்குற்றது.

**உவமத் தொடர்**

முத்து போன்ற பற்களுடையவளின் சிரிப்பு என்று பொருள். இதுபற்றி கலித்தொகையில் பல பாடல்கள் (93:12 - 97:6) பாடப்பட்டுள்ளது.

முத்தேர் முறுவலாய்[14]

என்ற கலித்தொகைத் தொடர்,

முத்தேர் முறுவலார்[15]

என்று இனியவை நாற்பதில் செல்வாக்குப் பெற்றுள்ளது.

**கருவிளைமலர்**

கண்ணுக்கு கருவிளைமலர்க் கூறப்பட்டுள்ளது. இது உருவகமாக வந்துள்ளது. சங்க இலக்கியங்களில் இத்தொடர் பல இடங்களில் ஆளப்பட்டுள்ளன.

கண்ணெனக் கருவிளை மலர[16]

என்ற ஐங்குறுநூற்றுத் தொடர்,

கருவிளை கண்மலர்போற் பூத்தன[17]

என்று கார்நாற்பதில் கையாளப்பட்டுள்ளது.

**சிரல்வாய்**

செம்முல்லைப் பூக்கள் சிச்சிலிப் பறவையின் வாய்க்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளது.

பனிவளர்ந் தளவின் சிரல்வாய்ச் செம்முகை[18]

என்ற ஐங்குறுநூறுத் தொடர்,

சிரல்வாய் வனப்பினவாகி நிரலொப்ப[19]

என்று கார்நாற்பதில் மொழியப்பட்டுள்ளது.

**மான்: பிணை**

பெண் மானைக் குறிக்கும் பிணை பற்றிய தொடர் இடம் பெற்றுள்ளது. (நற்: 37, கலி 20:22, 23, அகம் 14:4 - 6)

மறியுடை மடப்பிணை தழீஇப் புறவிற்
றிரிமருப் பிரலை பைம்பயி ருகள[20]

என்ற அகப்பாடல் தொடர்,

உருகு மடமான் பிணையோடுகளும்[21]

என்றுத் திணைமொழியில் செல்வாக்குற்றது.

**மன்னரியல்பு**

மன்னன் என்போன் குளம் வெட்டி, நாட்டின் வளத்தைப் பெருக்குபவனாக இருக்கவேண்டும் என சங்க இலக்கியத் தொடர்கள் கூறுகின்றன.

குளந்தொட்டு வளம் பெருக்கி[22]

என்றப் பட்டினப்பாலை தொடர் சிறுபஞ்சமூலத்தில்,

குளந்தொட்டு ..................
வளந்தொட்டு[23]

என்றுச் செல்வாக்கு பெற்றன.

**கவழம்**

யானைக்குக் கொடுக்கப்படும் உணவின் ஒரு வாயளவு கவழம் என்று கூறப்படுகிறது.[24] இது திணைமாலையில் ஆட்சிப் பெற்றதை,

கவழக் களிப்பியன்மால் யானை[25]

என்றத் தொடரால் அறியலாம்.

**மலர்கள்**

மலர்கள் பலவற்றைச் சங்க இலக்கியங்கள் கூறுகின்றன. அவற்றிலும் குறிஞ்சிப்பாட்டில் கபிலர் மலர்க் காட்சியை அமைத்துள்ளார். அவற்றில் 'அடும்பு'[26] என்ற மலரைப் பற்றியும் கூறியுள்ளார். இதுபோல, திணைமாலையில்,

புலம்புலால் ப்பார்த்தும் பகர்த்தும் அடும்பெல்லாம்[27]

என இத்தொடர் எடுத்தாளப்பட்டுள்ளது.

**மந்தி**

சிவந்த முகங்களையும், கரிய விரல்களையும், வெண்பற்களையும் உடைய மந்தியைச் சங்க நூலார் பல இடங்களில் கையாண்டுள்ளார். அத்தொடர்,

கருவிரன் மந்தி[28]

என்றும்,

கருவிரல் மந்திச் செம்முகப் பெருங்கிளை[29]
கருவிரற் செம்முக வெண்பற்சூல் மந்தி[30]

என்ற தொடர் பெண்குரங்கைக் குறிக்கிறது.

**பெண்ணழகு**

தளர்முலை பாராட்டினைபோ வைய[31]

என்ற சங்கத் தொடர்,

தளர்முலை பாராட்டி என்னுடைய பாவை[32]

என்றுக் கீ[illegible]க்குத் தொடரில் தாக்கத்தை ஏற்படுத்தியுள்ளன.

பெண்களின் அழகினையும், வனப்பினையும் கூறும்போது கையாளப்பட்ட சங்க இலக்கியத் தொடர் சிறுபஞ்சமூலத்தில் கையாளப்பட்டுள்ளது. இத்தொடர் சிறுபாணாற்றுப்படை, 324 -26ல் இடம் பெற்றுள்ளன.

சுணங்கணி வருமுலைச் சுடர்கொண்ட நறுநுதல்
மணங்கமழ் நறுங்கோதை[33]

என்றக் கலித்தொகைத் தொடர்,

பொன்பெறும் பூஞ்சுணங்கின் மென்முலையாய்[34]

என வந்துள்ளன.

**புறங்கூறாமை**

புறங்கூறாமைப் பற்றி சங்க இலக்கியங்கள் பல தொடரைக் கையாண்டுள்ளன. பின் நாளில் தோன்றிய கீழ்க்கணக்கு நூல்கள் அதனை உள்ளடக்கமாக கொண்டு விளங்கியது.

கொண்டுநீ மாறிய கவின்பெறல் வேண்டேன்[35]

என்பது கலித்தொகைத் தொடர்.

கொண்டு கண் மாறல் கொடுமையின் துவ்வாது[36]

என முதுமொழிக்காஞ்சியில் எதிரொலிக்கிறது. இத்தொடர் நான்மணிக்கடிகை எட்டாவது பாடலில் இடம் பெற்றுள்ளன.

**வண்டு**

வண்டுகளின் இனிய ஓசையானது யாழிசைப்போல் ஒலிக்கிறது. இத்தொடரை சங்கப் புலவர்கள் நிரம்பக் கையாண்டுள்ளனர் (கலி 32:9, அகம் 82: 6 -7, 318: 5 - 7, கலி - 131:9). பல பாடல்களில் இத்தொடர் இடம்பெறுகிறது. இத்தொடர் கீழ்க்கணக்கு நூல்களிலும் தாக்கமடைந்துள்ளன. அவை,

யாழிசை யினவண் டார்ப்ப[37]

என்ற முல்லைப் பாட்டுத் தொடர்,

யாழின் வண்டார்க்கும் புனலூர்[38]

எனப் பழமொழியில் இடம் பெற்றுள்ளது. இத்தொடர் திணைமாலை - 11ஆம் பாடலில் இடம்பெற்றுள்ளது.

**வேங்கை**

வேங்கை மரத்தினையும் அதன் பூவையும் பற்றி பல கருத்துக்களைச் சங்க இலக்கியங்கள் நவில்கின்றன. வேங்கைப் பூக்களைப் பற்றிய தொடர்கள் பல இடம்பெற்றுள்ளன. இவ்வேங்கை, (கலி - 38:22, நற் - 206:8, 313:1, அகம் 15 -10, 232: 2 - 14)

காரரும்பவிழ்த்த கணிவாய் வேங்கை[39]

என்றும்,

பன்னாகு நின்ற விடத்துக் கணிவேங்கை[40]

எனப் பழமொழியிலும் எடுத்தாளப்பட்டன. திணைமொழி (9) ஒன்பதாம் பாடலிலும் இத்தொடர் வந்துள்ளன.

**வேங்கை – புலி**

வேங்கை மரத்தின் பூக்கள் வேங்கைப் புலிக்கு உவமையாகக் கூறப்படுகிறது. இது சங்க இலக்கிய தொடர்கள் பலவற்றால் (ஐங் - 396, கலி 38:6, குறுந் - 47, பரி - 11, அகம் 12: 9 - 11, புறம் - 200: 18 - 20) அறிய முடிகிறது. இத்தொடர்,

வேங்கையஞ் சினையென விறற்புலி முற்றியும்[41]

எனக் கலித்தொகையிலும் வருகிறது. அத்தொடர் கீழ்க்கணக்கு நூல்களிலும் ஆட்சி பெற்றுள்ளது. அவை,

கருங்கா லினவேங்கை கான்றபூக் கல்மேல்
இருங்கால் வயவேங்கை யேய்க்கும்[42]

எனச் செல்வாக்குற்றன.

**இம்மை மறுமை**

மனிதனுக்கு மறுபிறப்பு உண்டு என அறியாத மூப்பு பயனற்றது. இக்கருத்தை விளக்குவதற்குச் சங்க நூல்கள் பல தொடர்களைக் கையாண்டுள்ளன. அத்தொடர் கீழ்க்கணக்கு நூல்களில் கையாளப்பட்டுள்ளதை,

அறஞ் சாரான் மூப்பபோ லழிதக்காள் வைகறை[43]

என்ற சங்கத் தொடராலும்,

மறுபிறப்பறியாதது மூப்பன்று[44]

என வரும் கீழ்க்கணக்குத் தொடராலும் உணர முடியும். இத்தொடர் பழமொழி (399)யிலும் கையாளப்பட்டுள்ளன.

**குழவி தளர்நடை**

குழந்தையின் அசைவுகள் ஒவ்வொன்றும் மகிழ்ச்சியைத் தரக்கூடியவை. அவர்கள் நடக்கின்ற தள்ளாடிய நடை, மழலைப் பேச்சு போன்றவை இன்பந் தரக்கூடியவையாகும். இக்கருத்தை எல்லா காலத்திலும் எழுந்த எல்லா இலக்கியங்களும் கையாண்டுள்ளன. அவற்றில் சங்க நூல் எடுத்துக்காட்டுகளையும், அதன் தாக்கம் பெற்ற கீழ்க்கணக்கு நூலில் கையாளப்பட்டதையும் இவண் காணத்தக்கது.

தளர்நடை காணடலினிது[45]

எனக் கலித்தொகையில் இடம்பெற்ற தொடர்,

குழவி தளர்நடைக் காண்டலினிதே[46]

என இனியவை நாற்பதில் செல்வாக்கு அடைந்துள்ளன. இக்கருத்து பல சங்க நூல்களில் (ஐங் - 66:403) இடம் பெற்றுள்ளன. குழந்தையின் சொல் அமிழ்தினுமினியது என்பதை,

நீ கற்ற சொற்கள் யாம் கேட்ப
மருந்தோவா நெஞ்சிற் கமிழ் தம்யின்று[47]

எனவும்,

அவர் மழலைக் கேட்டல் அமிழ்தின் இனிதே[48]

என வரும் தொடர்களால் அறியலாம்.

**பல்லி**

தலைவன் பொருள்வயிற் பிரிந்து சென்றான். அவன் வருவதற்குக் கால தாமதமாவதால் தலைவி கவலையுறுகிறாள். அப்போது பல்லி கத்துகிறது. அழுவதை நிறுத்திக் கொண்டு மனதைத் தேற்றுகிறாள். பல்லி இசைத்துவிட்டது. நம் தலைவனின் வரவைப் பல்லி அறிவிக்கிறது என்ற தலைவியின் உள்ளக்கிடக்கையைக் காட்டுவதாக இத்தொடர் அமைந்துள்ளது. அவை,

பாங்கர்ப் பல்லி படுதொன்றும், பரவி[49]
பல்லியும் பாங்கொத்து இசைத்தன[50]

என்ற சங்க இலக்கியத் தொடர்களை,

பாங்கத்துப் பல்லி படும்[51]

எனக் கீழ்க்கணக்குத் தொடரில் கையாண்டுள்ளனர்.

**நீர் மிகை பற்றி**

நீர்மிகிற் சிறையுமில்லை[52]

எனப் புறப்பாடலில் வரும் தொடர்,

நீர்மிகினில்லை சிறை[53]

எனப் பழமொழியில் செல்வாக்குற்றது.

**கொன்றை மலர்கள்**

சங்க இலக்கியங்களில், நெய்தல், அரும்பு, குறவம், வேங்கை, குவளை, ஆம்பல் எனப் பலவகை மலர்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. அவற்றில் கொன்றை மலரும் ஒன்றாகும். குறிஞ்சிப்பாட்டு என்னும் நூலை 'பூக்காடு' என்று சொல்லாம். அவை,

நான்மலர்க் கொன்றையும் பொலந்தார் போன்றன[54]

என்றப் பரிபாடலின் கருத்து,

பொன்போல்தார் கொன்றை புரிந்தன[55]

என்றுத் திணைமாலையில் எடுத்தாளப்பட்டுள்ளன.

**மலைநாடன்**

தன் ஊரினுடைய நெறியின் அருமையைக் கூறி தோழி இரவுக்குறி மறுக்குமிடத்து மலையின் பெருமைப் பேசப்பட்டுள்ளது. இத்தொடர்,

தொடர்வரை வெற்பன் துறக்குவ னல்லன்[56]

என்றக் கலித்தொகைத் தொடர்,

ஒருவரையே போல் எங்கும் பகைவரையுஞ் சூழ்ந்த
வருவரையுள்ளதாம் சீறூர்[57]

எனக் கீழ்க்கணக்கு நூலில் செல்வாக்குப் பெற்றது.

**சான்றோர் நிலை**

சான்றோர்கள், தன்னைப் புகழ்ந்து பேசுமிடத்து தலைகுனிந்து நாணமடைவர். தன்னை இகழ்ந்து பேசுமிடத்து பொறுத்துக் கொள்வர். இக்கருத்துற்றத் தொடரைச் சங்க இலக்கியங்களில் (கலி - 119: 6-7, புறம் - 152, பரி 21 - 22, 285: 13 - 14) கையாளப்பட்டுள்ளன. அவற்றை,

சான்றோர் புகழுமுன்னர் நாணுப[58]

என்றக் குறுந்தொகைத் தொடரால் உணரலாம். இத்தொடர் திரிகடுகத்தில்,

பிறர்தன்னைப் போணுங்கால் நாணலும்[59]

எனச் செல்வாக்குப் பெற்றன.

**கற்பு**

கற்புடைய பெண்களின் வாக்கு ஆற்றல் வாய்ந்தவை. அவர்கள் சொல்லும் சொல்லை இயற்கை ஏற்று நடக்கும். மழையே பொழிக என்றால் பொழியும் என்ற கருத்து சங்க காலந்தொட்டு கையாளப்பட்டுள்ளன.

வான் தரு கற்பினாள்[60]

என்று கூறப்படுவதிலிருந்து உணரலாம்.

அருமழை தரல் வேண்டிற் றருகிற்கும் பெருமையளே[61]

என்றத் தொடர்,

பெண்பால் கொழுநன் வழிச்செலவு இம்மூன்றும்
திங்கள்மும் மாரிக்கு வித்து[62]

எனத் திரிகடுகத்தில் கையாளப்பட்டுள்ளது.

**துகில்**

துகில் அருவிக்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளது. இத்தொடர் சங்க காலத்தில் மட்டுமின்றி நீதி நூல் காலத்திலும் கையாளப்பட்டுள்ளது. இத்தொடர்கள் (புறம் - 154: 10 - 12, முருகு - 296:316) பல இடங்களில் எடுத்தாளப்பட்டுள்ளன.

அவிர்துகில் புரையும் அவ்வெள்ளருவி[63]

எனக் குறிஞ்சிப்பாடலில் வரும் தொடர்,

மாநீல மாண்ட துகிலுமிழ்வ தொத்தருவி[64]

எனத் திணைமாலையில் செல்வாக்குற்றதை இவண் உளங்கொளத் தக்கது.

**யானை – அம்பு**

யானையின் மேல் தைத்த அம்புகளுக்கு, மலைமீது தங்கும் குருவிகள் உவமையாகக் கையாளப்பட்டுள்ளன.

குன்றத் திருந்த குரீஇ யினம் போல
அம்பு சென்றிறுத்த வரும்புண் யானை[65]

எனப் புறநானூற்றுத் தொடரும், கருத்தம்,

யானைமேல் யானை நெறிதர வானாது
கண்ணோர் கடுங்கணை மெய்ம்மாய்ப்ப – எவ்வாயும்
எண்ணருங் குன்றில் குரீஇயினம் போன்றவே[66]

எனக் களவழி நாற்பதில் எடுத்தாளப்பட்டுள்ளன.

**புகழ் நடுதல்**

எப்பொருளும் நிலையாத இவ்வுலகத்தின் கண் நிலைபெறுதலைக் கருதினோர் தம்முடைய புகழைப் பூமியிடத்து நிறுத்திவிட்டு இறந்தார்கள் என்று புறநானூறு நவில்கிறது.

மன்னா வுலகத்து மன்னுதல் குறித்தோர்
தம்புகழ் நிறீஇத் தாமாய்ந்தனரே[67] ✓

என்றத் தொடரானது,

மண்ணின் மேல் வான்புகழ் நட்டானும்
சாவா உடம் பெய்தினார்[68] ✓

எனத் திரிகடுகத்தில் தாக்கம் பெற்றுள்ளது.

இக்கருத்துடைய தொடர் (புறம் - 18:30, பதிற் - 86:5, பெரும் - 466 - 7, கார்-8) பல இடங்களில் கையாளப்பட்டுள்ளன.

**கல்வி**

ஒரு வீட்டில் ஒரு தாய்க்குப் பிறந்தவர்களானாலும், மூத்தவரானாலும் கல்வி கற்றவர்களே மதிக்கப்படுவர். சிறுவயதுடையவராக இருந்தாலும், கற்றோரே போற்றப்படுகிறார்கள். இத்தொடரமைந்த பாடலை,

ஒரு குடிப் பிறந்த பல்லோ ருள்ளும்
மூத்தோன் வருக வென்னாது[69] ✓

எனப் புறப்பாடலில் காணமுடிகிறது. இத்தொடரமைந்த பாடல் கீழ்க்கணக்கு நூலாகிய நான்மணிக்கடிகையில் எடுத்தாளப்பட்டுள்ளது. அவை,

ஒரு குடியிற் கல்லாது மூத்தானைக் கைவிடுபு கற்றான் ✓
இளமை பாராட்டும் உலகு[70]

எனச் செல்வாக்குப் பெற்றன.

**பாம்பு**

நாகப்பாம்பு, முதிர்ந்த மூப்பு எய்தியபின் நாகமணி உமிழும் என்பது மனிதகுலம் அறிந்த உண்மையாகும். இக்கருத்தைச் சங்க இலக்கியங்களில் பல இடங்களில்

(குறுந் - 185, கலி - 45:46, குறுந் - 239, கார் - 11, திணைமால் - 107, திணைமொழி - 28, ஐந் - ஐம் - 28) எடுத்தாளப்பட்டுள்ளன.

திருமணி யுமிழ்ந்த நாகம்[71]

என்று அகநானூற்றில் வரும் தொடர்,

ஏறோடு அருமணி நாகம்[72]

எனக் கார்நாற்பதில் செல்வாக்குப் பெற்றது.

**கடம்ப மரம்**

நாற்சந்தியிலும், முச்சந்தியிலும், ஐஞ்சந்தியிலும் புதிதாக மலர்ந்துள்ள கடம்ப மரத்து நடுவில் மக்கள் குழுமியிருக்கும் மன்றம் என்ற பொருள்பட வரும் தொடர்கள் திருமுருகாற்றுப்படையில்,

சதுக்கமுஞ் சந்தியும் புதுப்பூங் கடம்பு[73]

எனக் கையாளப்பட்டுள்ளது.

இக்கடம்ப மரம் பற்றிய செய்தி, ஐந்திணை ஐம்பதில்,

செல்வக் கடம்பமர்ந்தான்[74]

எனச் செல்வாக்குப் பெற்றன.

நெய்தலூர்களில் யாழிசைப் போன்று பாடும் வண்டுகளின் இன்னிசைக் கேட்டு அவ்விசைக்கு எக்கர் மணலின் மேல் நின்றும் மயில்கள் ஆடுகின்றன. இக்கருத்துப் பொதிந்த தொடரை,

நிலவெக்கர்ப் பல பெயர[75]

எனப் பொருநராற்றுப் படையில் எடுத்தாளப்பட்டது. இத்தொடர்,

நிலாவெழுந்த வார்மண ணீடி[76]

எனத் திணைமாலையில் செல்வாக்குப் பெற்றன.

**பொய்யுரையாமை**

யான் பொய்சொல்லி வாழுவதை விரும்பவில்லை. மெய்யைச் சொல்லி வாழ்வதுதான் அறவாழ்வுக்கு உகந்தது என்னும் தொடரை,

வாழ்தல் வேண்டிப் ......
பொய் கூறேன் மெய்கூறுவல[77]

எனப் புறநானூற்றில் இடம்பெற்றுள்ளன. இத்தொடர்,

பொய்யுரையான் வையான் புறங்கூறான் யாவரையும்[78]

என ஏலாதியில் எடுத்தாளப்பட்டன. இத்தொடர் இனியது 21ல் இடம்பெற்றுள்ளன.

**மயில்**

சிறு தினையில் புதிது உண்ணும் கடவுளுக்குப் படையலாக விட்டிருந்து சிலவாகிய கதிரைத் தெரியாது உண்டமயில் ஆடுமகளிரைப்போல ஆடியது.

அறியாது உண்ட மஞ்ஞை ஆடுமகள்[79]

என்றக் குறுந்தொகைத் தொடர், கார்நாற்பதில் கையாளப்பட்டுள்ளன.

ஆடுமகளிரின் மஞ்ஞை அணிகொள[80]

என வந்துள்ளது.

**கானவர்**

கொடுந்தொழில் புரியும் வலிய வில்லை உடையவர் கானவர் என்ற தொடர் திருமுருகாற்றுப்படையில்,

கொடு தொழில் வல்வில் கொலைஇய கானவர்[81]

என இடம்பெற்றுள்ளன. இக்கருத்து,

கோட்டமை வலிவிற் கொலையின் பிரியவன் கண்ணார்[82]

எனக் கீழ்க்கணக்கு நூலிலும் ஆட்சிப்பெற்றுள்ளது.

**நிலத்து அணி**

நெல்லும், கரும்பும் நிலத்திற்கு அணியாக விளங்கக் கூடியவை என சங்கநூல் கூறுகிறது. அவை,

வெண்பூக் கரும்பொடு செந்நெனீடி[83]

என்றத் தொடர்,

நிலத்துக் கணியென்ப நெல்லுங் கரும்பும்[84]

என்று நான்மணிக்கடிகையில் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

**காயாமலர்**

காயாச் செடிகள் கரிய மைப் போன்ற மலர்களைப் பூத்துள்ளதைக் கூறும்போது,

செறியிலைக் காயா அஞ்சன மலர[85]

என்று முல்லைப்பாடல் கூறுகிறது. இத்தொடர் திணைமொழி ஐம்பதில்,

அஞ்சனங் காயா மலர[86]

எனத் தாக்கம் பெற்றுள்ளது.

**தாமரை**

தாமரை மலரைக் குறிப்பதற்குச் சங்க இலக்கியம் எச்சொல்லைக் கையாண்டதோ, அந்த சொல் கீழ்க்கணக்கு நூல்களிலும் கையாளப்பெற்றன.

உருகெழு தாமரை வால்முகை வெரூ உம்[87]

என்றத் தொடர்,

வாடாத தாமரை மேற் செந்நெற் கதிர் வணக்கம்[88]

என மேற்கொள்ளப்பட்டன.

**செம்பியன்**

செம்பியன் என்ற மன்னனின் பெருமையைக் கூறும்போது, தொல்குடியில் தோன்றியவன், பகைவருடைய தூங்கெயிலை அழித்தவன், தொடி திகழும் கையுடையோன், கீர்த்தி மிக்கவன், நல்ல தேரினையுடைவனுமாகிய செம்பியன் எனச் சிறுபாணாற்றுப்படை நவில்கிறது.

தூங்கையிலெறிந்த தொடி விளங்கு தடக்கை
நாடா நல்லிசை நற்றோர்ச் செம்பியன்[89]

என்றத் தொடர்கள்,

வீங்குதோட் செம்பியன் சீற்றம் விறல் விசும்பிற்
தூங்கு மெயிலுந் தொலைத்தலால்[90]

எனப் பழமொழியில் ஆட்சிப் பெற்றன.

மேற்குறித்த எடுத்துக்காட்டுகளின்வழி சங்க இலக்கியத் தொடர்கள் கீழ்க்கணக்கு நூல்களில் செல்வாக்குப் பெற்றமை அறியப்பெறும்.

## அடிக்குறிப்புகள்

1. புறம் - 56:4
2. இன்னா - 1
3. கலித் - 25: 27 - 28
4. நான்மணி - 29
5. மேலது - 49
6. அகம் - 185:6
7. நான்மணி - 4
8. புறம் - 380:9
9. ஐந் - எழு - 4
10. புறம் - 28:2
11. நான்மணி - 7
12. கலித் - 142 - 24
13. களவழி - 22
14. கலித் - 64:29
15. இனியது - 1
16. ஐங் - 467
17. கார் - 9
18. ஐங் - 447
19. கார் - 36
20. அகம் - 314
21. திணைமொழி - 25
22. பட்டினப் - 284
23. சிறுபஞ் - 66
24. மலைபடு - 308
25. திணைமாலை - 42
26. குறிஞ்சிப் - 87

27. திணைமாலை - 150
28. மலைபடு - 311
29. நற் - 334
30. திணைமாலை - 10
31. கலித் - 22 - 17
32. ஐந் - எழு - 47
33. கலித் - 60: 1 - 2
34. சிறுபஞ் - 48
35. கலித் - 77:9
36. முதுமொழிக் - 37
37. முல்லைப் - 8
38. பழமொ - 221
39. நற் - 373:6
40. பழமொ - 120
41. கலித் - 46:5
42. திணைமாலை - 26
43. கலித் - 38:18
44. முதுமொழிக் - 50
45. கலித் - 80:11
46. இனியது - 14
47. கலித் - 81:14
48. இனியது - 15
49. அகம் - 9
50. கலித் - 11:20
51. ஐந் - எழு - 41
52. புறம் - 51 - 1
53. பழமொழி - 190
54. பரி - 4:10
55. திணைமாலை - 109
56. கலித் - 41 - 36
57. திணைமாலை - 13
58. குறுந் - 252
59. திரி - 6
60. கலித் - 16:20
61. மேலது - 36:6

62. திரி - 98
63. குறிஞ்சிப் - 55
64. திணைமாலை - 6
65. புறம் - 19: 8 - 9
66. களவழி - 8
67. புறம் - 165: 1 - 2
68. திரி - 16
69. புறம் - 183: 5 - 6
70. நான்மணி - 65
71. அகம் - 138
72. கார் - 20
73. திருமுருகு - 225
74. ஐந் - ஐம் - 1
75. பொருந - 213
76. திணைமாலை - 29
77. புறம் - 139
78. ஏலா - 33
79. குறுந் - 105:3
80. கார் - 4
81. திருமுருகு - 194
82. ஐந் - ஐம் - 34
83. பட்டினப் - 240
84. நான்மணி - 11
85. முல்லைப் - 93
86. திணைமொழி - 21
87. குறுந் - 127 - 2
88. திணைமாலை - 150
89. சிறுபாண் - 81 - 82
90. பழமொ - 156

## அகத்திணைச் செல்வாக்கு

ஒவ்வொரு ஆணும் பெண்ணும் தன் இளையோர் பருவத்தில், தனக்கு ஒத்த பெண்ணை மணக்க வேண்டும் என்ற விருப்பம் ஆணுக்கும், தனக்கு ஒத்த ஆணை மணக்க வேண்டும் என்ற விருப்பம் பெண்ணுக்கும் இருப்பது இயற்கை. மாறாக வாழ்க்கைத் துணையைத் தேர்வு செய்யும் பொறுப்பு பெற்றோர்கள் வசம் இருந்ததால் காதலுரிமை மறுக்கப்பட்டன. இதனால் தலைவன் தலைவியரின் வாழ்வில் ஏமாற்றம் எஞ்சியதை அகநானூறு, குறுந்தொகை உள்ளிட்ட அகஇலக்கியங்களால் அறியலாம். இதற்கு மாறாகத் தலைமக்கள் தாமே கலந்துரையாடிய காலத்தைக் களவாகவும், இருமுது குரவர் போற்ற நிகழுற்ற மணநிகழ்ச்சியை கற்பாகவும் அக்திணைக் கோட்பாடு தமழிகத்தில் எழுந்தது.

> இத்தகு குமுகாய வாழ்நிலையில் சங்ககாலப்
> புலவர்கள் காதலுறவை நாகரீகமிக்கதாகப்
> படைத்தளிக்க விரும்பினர். அன்பு வழிபட்ட
> மனிதகுல ஓர்மைக்கு அகத்திணை ஒழுகலாறே
> வழிகோலுமென நம்பினர். இந்நிலையில் முந்
> நூற்று எழுபத்தெட்டுச் சங்கப் புலவர்கள்
> ஆயிரத்து எண்ணூற்று அறுபத்திரண்டு
> அகப்பாடல்களைப் படைத்தளித்துள்ளனர்[1]

என மு. இளமுருகன் ஆராய்ந்துணர்த்தியவற்றால் அறியலாம்.

**அகத்திணை மரபு**

அகத்திணை அமைப்பு மரபுவழிப்பட்டதாக விளங்குகிறது. அகத்திணைக்கென அமைந்துள்ள இலக்கணத்தை அகத்திணை மரபு என்கின்றனர். இக்கருத்தை,

உலக வளர்ச்சிக்கு அன்பின் தொடர்பு
இன்றியமையாதது. அந்த அன்பானது இரண்டு
உயிர்களின் தனித்த நிலையில் உண்டாவதன்று.
இரண்டின் கூட்டுறவால் நிகழ்வதாகும்

என்றும், இந்த இரண்டு உயிர்களின் அன்பை வெளிப்படுத்துவதற்கு எடுத்தாளப்பட்ட நாகரீகமான முறையை மரபு என்று கூறுகின்றனர் என்று தமிழ்ப்பொழிலில் இரா. சுப்பிரமணியன் விளக்கியுள்ளார்.[2] மேற்குறிப்பிட்ட கருத்துக்களை உளங்கொண்டு ஆராயும்போது அகத்திணை அமைப்பு மரபு வழிபட்டதென்று உணரமுடிகின்றது.

**பெயர் சுட்டாமை**

மக்கள் உள்ளிட்ட அகம் ஐந்து திணைகளில் ஒருவருடைய பெயர் கூட சுட்டப் பெறவில்லை. அப்படிச் சுட்டுவது மரபன்று.

மக்கள் நுதலிய அகணைந் திணையும்
சுட்டி ஒருவர் பெயர்க்கொளப் பெறாஅர்[3]

எனத் தொல்காப்பியர் வரையறுத்துள்ளார். ஐந்திணைகளிலும் தலைவனின் பெயரோ, தலைவியின் பெயரோ கூறப்படவில்லை. இவ்வாறு சங்ககால இலக்கியத்தின் மரபு கீழ்க்கணக்கு நூல்களில் செல்வாக்குற்றதை அறியமுடிகிறது.

இன்பம் எல்லா மனிதர்களுக்கும், உயிர்களுக்கும் பொதுவானதாக இருப்பதனால் தலைவன், தலைவியரின் பெயர் சுட்டவில்லை. தலைவன், தலைவி, தோழி, பாங்கன், நற்றாய், செவிலி, தந்தை, தனையன் என்று பொதுவாகச் சுட்டினர் என்றக் கருத்தை,

இன்பம் எல்லா உயிர்க்கும் பொதுவானது,
இதனை ஒழுக்கத்துடன் கூடிய முறையில்
அனுபவிப்பதையே தமிழ் இலக்கியங்களின்
களவியலும், கற்பியலும் காட்டுகின்றன[4]

என்று இரா. சண்முகம் விளக்கியுள்ளார்.

இவ்வாற்றான் கூறப்படும் இன்பத்தைச் சங்க அகஇலக்கியங்களும், பதினெண்கீழ்க்கணக்கு நூல்களும் மரபு நிலைமாறாது பின்பற்றியுள்ளது இவண் அறியப்படும்.

**சங்க அகப்பாடல்கள்**

அகத்திணை அமைப்பிற்கு உட்பட்டனவாகிய அகநானூறு, நற்றிணை, குறுந்தொகை, குறிஞ்சிப்பாட்டு முதலியவை முழுமையாக விளங்குகின்றன. சங்கப் பாடல்களின் தொகை 2381. அவற்றுள் 1862 அகம்தழுவியன என்று இரா. சாரங்கபாணி குறித்துள்ளார்.[5] இதனைக் கருத்தில் கொண்ட தமிழண்ணல் சங்க இலக்கியத்தைத் 'திணை இலக்கியம்' என்று கூறியுள்ளார்.[6] இவற்றால் அகத்திணைப் பாடல்களை அறியமுடிகிறது.

**கீழ்க்கணக்கு நூல்களில் அகத்திணை**

ஐந்திணை ஐம்பது, ஐந்திணை எழுபது, திணைமொழி ஐம்பது, திணைமாலை நூற்றைம்பது, கார்நாற்பது, கைந்நிலை முதலான அகநூல்கள் ஆறும் சங்க அக நூல்களைப் போன்றே அமைந்துள்ளன. நீதி நூல்கள் எனப்படும் கீழ்க்கணக்கு நூல்களுள் இடம் பெற்றுள்ள இவ்ஆறு அகநூல்களும் வெண்பாயாப்பைப் பெற்றுள்ளன. இருப்பினும் பாடற்பொருளாலும், பாடப்பெற்ற முறையாலும் சங்க மரபைத் தழுவியே இயற்றப்பட்டுள்ளன. கீழ்க்கணக்கு நூல்கள் நூற்பெயர் வைப்பிலும், தனிப்பாடல் நிலையிலும், கூற்றுமரபிலும், பாட்டுடைத் தலைவன், தலைவியர் பெயர் கூறாத நிலையிலும் சங்க மரபையே ஒத்துள்ளன.

முதல் கரு உரிப்பொருள் அமைப்பிலும் அகத்திணை மரபு சங்கம்மருவிய காலத்திலும் இடம்பெற்றுள்ளன. முதற்பொருளாகிய நிலமும் பொழுதும் சங்க நூலைப் படம்பிடித்தது போல் முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல் என்ற ஐவகை நிலங்களையும், பெரும் பொழுது சிறுபொழுதுகளையும் கொண்டு விளங்குகின்றன.

கருப்பொருளாகிய தெய்வம் முதல் சொல்லப்பெற்ற பதினான்கும் கீழ்க்கணக்கு அகநூல்களில் செல்வாக்குற்றன. முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல் என்னும் ஐந்திணைகளுக்குரிய புணர்தல், இருத்தல், ஊடல், இரங்கல், பிரிதல் என்ற உரிப்பொருள்கள் முறைப்படி அமைத்துப் பாடப்பட்டுள்ளன.

சங்க அகப்பாடல்களின் மரபுநிலைத் திரியாமல் வந்துள்ள கீழ்க்கணக்கு அகநூல்களை இவண் ஆராய்வது சாலப் பொருந்தும்.

**ஐந்திணை ஐம்பது**

சங்க அகநூல்களில் முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல் என்று வரும் திணைப் பாடல்கள் கலந்து விரவிக் காணப்படுகின்றன. கீழ்க்கணக்கு அகநூல்களில் காலமாற்றத்திற்கு ஏற்றாற்போல் ஐந்திணைகள் ஒவ்வொன்றும் தனித்தனியாக ஒரு திணைக்கு இத்தனைப் பாடல்கள் என வரையறை செய்யப்பட்டுள்ளன.

ஐந்து திணைகளையும் உள்ளடக்கிப் பாடப் பெற்றதால் இதனை ஐந்திணை என அழைத்தனர். இவற்றில் முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை என்ற ஐந்திணைக்கும் முறையே திணைக்குப் பத்து பாடல்கள் அமைந்துள்ளதனால் இதனை ஐந்திணை ஐம்பது என்று அழைத்தனர். ஐந்திணைக்குமுரிய பாடல்களும் வெண்பா யாப்பால் பாடப் பெற்றன. முதல்கருஉரி என்ற முப்பொருளும் அகத்திணை மரபு வழுவாமல் செல்வாக்குற்றன. இந்நூலில் அன்பின் அமைதியாகிய ஐந்தொழுக்கங்களையும் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் பாங்கும் போற்றுதற்குரியனவாகும். சங்க அகநூல்களைப் போலவே கீழ்க்கணக்கு அக நூல்களிலும் தலைவன், தலைவி, தோழி, பாங்கன், செவிலி, நற்றாய், தந்தை என்று வந்துள்ளன. பெயர் சுட்டப் பெறவில்லை. இதன் கருத்துக்களை ஆராயும்போது, இந்நூல் ஆசிரியரான மாறன் பொறையனார் முன்னோர் மொழியைப் போற்றி அதன் செல்வாக்கை ஏற்றுக்கொண்டது விளங்குகின்றது.

**ஐந்திணை எழுபது**

இந்நூல் அகநூல்களின் இலக்கணத்தில் சிறிதும் மாறுபடாமல் வந்துள்ளது. முதல் கரு, உரிப்பொருளும் அகத்திணை மரபை அப்படியே ஏற்றுக் கொண்டுள்ளன. இந்நூல், ஒவ்வொரு திணைக்கும் பதினான்கு பாடல்களைக் கொண்டு, எழுபது பாடல்களில் அமைந்துள்ளதால் ஐந்திணை எழுபது என்ற பெயர் பெற்றது. இந்நூலினை யாத்தவர்

மூவாதியார் ஆவார். இந்நூலில் உள்ள எழுபது பாடல்களில் முல்லைத் திணையில் (25, 26) இரண்டும் பாடல்களும் நெய்தல் திணையில் (69, 70) இரண்டு பாடல்களும் மறைத்து போயின; 64 பாடல்களே எஞ்சியுள்ளன என்பர்.

**திணைமொழி ஐம்பது**

திணைமொழி ஐம்பது என்னும் இந்நூல் அகப்பொருள் நூல், திணையொன்றுக்குப் பத்துப் பாடல்கள் வீதம் ஐந்திணைகட்கும் ஐம்பது பாடல்களைக் கொண்டுள்ளமையால் இந்நூல் திணைமொழி ஐம்பது என்னும் பெயர் பெற்றது. அவை யாவும் வெண்பாவால் இயற்றப்பட்டாலும், சங்க அகத்திணை மரபை ஏற்றுக் கொண்டுள்ளதை அறிய முடிகிறது. சங்க இலக்கியங்களின் திணைத் துறை கோட்பாடுகளை அப்படியே எடுத்தாண்டுள்ளன.

**திணைமாலை நூற்றைம்பது**

மற்ற திணை அகநூல்களைவிட அளவில் பெரியதாகும். ஐந்திணை ஒழுக்கங்களையும் கோவையாக மாலைபோல் தந்துள்ளமையால் திணைமாலை எனப் பெயர்ப் பெற்றதென்றும் இந்நூல் ஒவ்வொரு துறையிலும் முப்பது பாடல்கள் கொண்டிருத்தலே முறை. ஆனால் முல்லை, குறிஞ்சி, நெய்தல் திணைகள் 32 பாடல்கள் வீதமும், ஏனைய பாலை, மருதம் ஆகிய திணைகள் 30 பாடல்கள் வீதமும் கொண்டிருந்ததால் மொத்தம் 153 பாடல்களைக் கொண்டுள்ளன. இறுதியில் வரும்பாயிரத்தைச் சேர்த்து 154 ஆகின்றது.

**கார்நாற்பது**

கார்நாற்பது என்னும் நூல் அகத்திணையின் ஒரு பகுதியாகிய முல்லைத் திணையின் பாற்பட்டனவாகும். முல்லை நிலமாவது ஒரு தலைமகன் தனக்குரிய ஏதாவது ஒரு காரணத்தால் பிரிந்து செல்வான், அவன் வரும் வரையும் தலைவி அவன் கூறிய சொற்பிழையாது கற்பால் ஆற்றியிருத்தலேயாகும். கார்காலத்தைச் சிறப்பித்திருப்பின் இது கார்நாற்பதாயிற்று என்பாரின் கூற்றுகளும் உள்ளன. இந்நூலில்

முல்லைத் திணைக்குரிய முதற்பொருளும், கருப்பொருளில் பிரிவும், உரிப்பொருளும் சங்க அகமரபுடன் நன்கு பயின்று வந்துள்ளன.

கீழ்க்கணக்கு நூல்களில் அகத்திணைப் பற்றிய அமைப்பும், மரபும் அப்படியே செல்வாக்குற்றிருப்பதும் இவண் உளங்கொளத் தக்கது.

**கைந்நிலை**

மேற்குறிப்பிட்ட ஐந்து அகநூல்களில் இது ஆறாவதாக வைக்கப்பட்டுள்ளன.

> கை என்பதற்கு ஒழுக்கம் என்பது பொருள்
> ஐந்திணை ஒழுக்கத்தைப் பற்றிக் கூறுகின்ற
> நூல் ஆகையினால் இதற்குக் 'கைந்நிலை'
> என்ற பெயர் வந்தது. ஒவ்வொரு திணைக்கும்
> பன்னிரண்டு பாடல்கள் வீதம் மொத்தம்
> அறுபது பாடல்களை இந்நூல் கொண்டுள்ளது[7]

என 'கைந்நிலை' முன்னுரையில் துரை. இராசாராம் கூறியுள்ளார். இந்நூலில் பல பாடல்கள் சிதைந்துள்ளன. பல பாடல்கள் சிதைந்து முழு வடிவமின்றிக் காணப்படுகின்றன. நெய்தல் திணையில் மட்டும்தான் பாடல்கள் எவ்வித சிதைவும் இல்லாமல் பன்னிரண்டு பாடல்களும் முழுமையாகவுள்ளன.

இவ்வாறு ஆராய்ந்ததின் விளைவாகச் சங்க அகநூல்களின் அகத்திணை அமைப்பு அப்படியே, கீழ்க்கணக்கு நூல்களுள் செல்வாக்குற்றிருப்பதை உணர முடிந்தன. இவ்வாறாகப் பாடல் அமைப்பிலும், திணை, துறை அமைப்பிலும் ஒன்றாக விளங்க இருகால நூல்களும் களவு, கற்பு ஒழுக்கங்களில் எவ்வாறு உறவு கொண்டுள்ளன என்பதை ஆராய்வது அவசியமானதொன்றாக அமையும்.

**களவியல்**

தலைமக்கள் தம்முள் நட்புக் கொண்டு ஒழுகிக் காதலித்தலைக் 'களவு' என்று அழைத்தனர். இருவரும் காதலித்து ஒழுகுதல் முதலில் பிறர் அறியாமல் நிகழ்தலின் அதனைக் களவு என்று கூறினர். இவ்வாறாக அன்பின் ஐந்திணைக்குரிய தலைமக்கள் ஒத்த தகுதியுடையவராக இருத்தல் வேண்டுமென்பதை,

> பிறப்பே குடிமை ஆண்மை ஆண்டொடு
> உருவுநிறுத்த காமவாயில்
> நிறையே அருளே உணர்வொடு திருவென
> முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே[8]

என்றுத் தொல்காப்பியர் குறித்துள்ளார். இவ்விலக்கணங்களோடு சங்கத் தலைமக்கள் படைத்தளிக்கப்பட்டுள்ளனர்.

பிறப்பு, ஒழுக்கம், ஆண்மை, வயது, வடிவம், காதல் உணர்ச்சி, நிறை, அருள், அறிவுடைமை, திரு எனும் பத்திலும் இருவரும் ஒத்திருக்க வேண்டும்.

**பிறப்பு**

பிறப்பு என்பது நல்லகுடியில் பிறத்தலாகும். நல்லகுடி என்றவுடன் சாதி வேறுபாடோ என்று ஐயுறுவோர்க்கு:

**குடிமை**

> குடிவேறு சாதிவேறு அன்று சாதி
> கிடையாது. ஒவ்வொரு குடிக்கும் ஒவ்வொரு
> பண்பு இருக்கலாம். அக்குடிப்பிறப்பால்
> ஒழுக்கம் உருவாகும். ஆதலின் அதனை
> அடுத்துக் குடிமையையும் வைத்தார்[9]

என்று சி. இலக்குவனார் விளக்கியுள்ளார்.

**ஆண்மை**

> ஆணுக்கும் பெண்ணுக்கும்
> உடல் வலிமை, உள்ள வலிமை வேண்டும் என்பதாகும்.
> ஆகவே ஆண்மையிலும் ஒத்திருத்தல் வேண்டும்.

**ஆண்டு**

> ஆணுக்குரிய ஆண்டும், பெண்ணுக்குரிய
> ஆண்டும் எனக் கொள்ளலாம். அதாவது வயது
> ஆண்டு எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

உருவு வடிவால் ஒத்தல் என்பது தோற்றப் பொலிவாலும், உருவமைப்பாலும் ஒத்திருத்தலாகும்.

காமவாயில் என்பது காதல் வேட்கையாகும். காதல் வேட்கை அல்லது பாலின்ப விருப்பம் இருவருக்கும் ஒத்திருக்க வேண்டும். இல்லையேல் அமைதி வாழ்வுக்குத் தடை உண்டாகும். நிறை என்பது அதுதான் உள்ளத்தை நிறுத்தும் தன்மை. அதுதான் கற்பு எனப்படுவது, கற்பு இருபாலருக்கும் பொது எனத் தொல்காப்பியர்

வலியுறுத்தியுள்ளார். அருள் என்பது பிறர்துன்பங்கண்டு இரங்குதல். உணர்வு என்பது உலகியலால் செய்யத் தகுவனவற்றை அறிதலாகும். திரு என்பது கண்டவரால் விரும்பப்படும் தன்மையைப் பெற்றிருத்தலையும் குறிக்கும். இவ் அகஒப்புமை கீழ்க்கணக்கு அகநூல்களில் மாறாமல் இடம்பெற்றுள்ளன. இப்பத்து குணங்களும் நிறைந்தவர்களே கீழ்க்கணக்கு அகநூல்களில் தலைவன் தலைவியராகச் சித்தரிக்கப்பட்டுள்ளனர். சங்க அகத்திணை மரபுகள் கீழ்க்கணக்கு அகத்திணையில் மிகுந்த செல்வாக்குற்றுள்ளன. அவை ஒவ்வொன்றையும் விரிவாக ஆராய்ந்து ஒப்பிட்டறிவது அவசியமானதாகக் கருதப்படுகிறது.

**தலைவன் சிறைப்புறமாக இருக்கத் தோழிக்குத் தலைமகள் கூறியது**

அகத்துறை குறிஞ்சித் திணைக்குரியது. களவொழுக்கத்தின்கண் நிகழ்வது. இதனைத் தொல்காப்பியர்,

வந்தவன் பெயர்ந்த வறுங்களம் நோக்கித்
தன்பிழைப் பாகத் தழிஇத் தேறலும்[10]

என்பர். இத்துறையமைப்புடைய பாடல்கள் சங்க நூற்களில் பரவலாகக் காணப்படுகின்றன.[11] அவை,

சிறுதினைப் படுகிளி கடீஇயர், பன்மாண்
குளிர்கொள் தட்டை மதன் இல புடையாச்,
சூரர மகளிரின் நின்ற நீமற்று
யாரையோ? எம் அணங்கியயோய்! உண்கு எனச்
சிறுபுறம் கவையினனாக[12]

என்று அகநானூற்றுப் பாடல் முழுமையும் படித்துணர்வதால் இத்துறையை விளக்கலாம். இதுபோன்ற கீழ்க்கணக்கு நூலாகிய ஐந்திணை எழுபதில் தலைவன் சிறைப்புறத்தானாக இருக்கத் தலைவி தோழிக்குக் கூறியது விளக்கப்பட்டுள்ளது. இவற்றை,

பெருங்கை இருங்களிறு ஐவனம் மாந்திக்
கருங்கால் மராம் பொழில் பாசடைத் துஞ்சும்
கரும்(பு) இமிர் சோலை மலைநாடன் கேண்மை
பொருந்தினார்க்(கு) ஏமாப்(பு) உடைத்து[13]

என்றப் பாடலின் மூலம் அறியமுடிகிறது. மலை நாட்டுத் தலைவனுடைய நட்பானது

அவனை நெருங்கி வாழ்வதற்குப் பாதுகாவலாகப் பொருந்தும் இயல்புடையதாகும் என்றுத் தோழி தலைவனின் அன்பான இயல்பைக் குறித்துப் பேச தலைவி, அவனிடமுள்ள அன்பான இயல்பை எடுத்துக் கூறுவதாக அமைந்துள்ளது. மேலும் இத்துறையிலமைந்த பாடல்கள் பல இடங்களில் அமைந்து காணப்படுகின்றன.[14]

**கையுறை மறுத்தல்**

களவுக் காலத்தில், தலைவன் தலைவியைச் சந்திக்க வருகையில் தழைக் கொண்டு வந்து கொடுப்பதும், அதை வாங்க மறுப்பதுமாக அமைவது இத்துறையாகும். இதனால் தலைவிக்கு அறிவு வழிப்பட்ட ஆர்வம் மிகுமெனத் தோழி நம்புவாள். இத்துறை, குறுந்தொகையில் தோழி தலைவன் தரும் கையுறையை மறுப்பாளாய்,

கழல் தொடிச் சேஎய் குன்றம்
குருதிப் பூவின் குலைக்காந்த தட்டே[15]

என மொழிந்தவற்றால் அறியலாம்.

திணைமாலை நூற்றைம்பதில் தலைவன், தலைவியின் கையில் சேர்க்கும் பரிசாகக் கொண்டு வந்த பொருளை ஏதாவது காரணம் கூறி தோழி முதலியோர் மறுக்கும் இத்துறை பல இடங்களில் இடம்பெற்றுள்ளன.[16]

நாள் வேங்கை பொன்விளையும் நன்மலை நன்நாட!
கோள்வேங்கைபோல் கொடியார் என்ஐயன்மார் – கோள்வேங்கை
அன்னையால் நீயும் அருந்துழையாம் ஏலாமைக்(கு)
என்னையோ நாளை எனது[17]

என்ற வரிகளால் இத்துறையை விளங்கிக்கொள்ள முடியும்.

**பாங்கற்குத் தலைமகன் கூறியது**

இற்செறிக்கப்பட்ட தலைவியைக் காணவேண்டித் தலைவன் பாங்கன் துணையை நாடல் இதன் பாற்படும். இத்துறையமைந்த பாடல்கள் சங்க நூல்களில் காணப்படுகிறது.[18] அவற்றை,

தேனுடை நெடுவரைத் தெய்வம் எழுதிய
வினைமாண் பாவை அன்னோள்
கொலைசூழ்ந் தனளால் நோகோயானே[19]

என்ற நற்றிணைப் பாடலால் அறியலாம்.

தலைமகன் பாங்கற்குக் கூறிய இத்துறை கீழ்க்கணக்கு நூல்களில் சிறப்பாக இடம்பெற்றுள்ளன. தம், குலத்தைச் சேர்ந்த ஒருத்தி என்று எண்ணப்படும் காரணத்தால் எம் தலைவியைத் தினைப்புனத்தைக் காக்க வைத்தார்கள் போலவே என்னைத் தலைவிக்காகக் காக்க வைத்தார்கள் எனக் கூறுகின்ற செய்தியை,

திங்களுள் வில்லெழுதித் தேராது வேல்விலக்கித்
தங்களுள்ளான் என்னும் தாழ்வினால் – இங்கண்
புனங்காக்க வைத்தார் போல் பூங்குழலைப் போந்தென்
மனங்காக்க தைத்தார் மருண்டு[20]

இத்திணைமாலைப் பாடலால் அறியலாம். மேலும் இத்துறை பல இடங்களில் செல்வாக்குற்றதைக் காணமுடிகிறது.[21]

**பாங்கற்குரைத்தல்**

தலைவன் தன் காதல் விருப்பத்தை உற்ற தோழனிடம் கூறல் இத்துறையின் பாற்படும். இதனைக் களவொழுக்கத்தின்கண் தலைவன் கூற்றில் வரும் சங்கப் பாடல்களில் பரவலாகக் காணப்படுகிறது. இத்துறையை,

இளையள் முளைவா ளெயிற்றள்
வளையுடைக் கையளெம் மணங்கியோளே[22]

என்றக் குறுந்தொகைப் பாடலைச் சான்றாகக் கொள்ளலாம். அழகிய கூரிய பற்களையும் வளையினையும் உடைய கையினளுமாகிய தலைவி என்னை வருத்தினாலென தலைவன் பாங்கனிடம் கூறியதாக அமைந்துள்ளது. கணிமேதாவியார் இத்துறையைத் திணைமாலை நூற்றைம்பதில் அமைத்துப் பாடியிருப்பது கவனிக்கத்தக்கது.

எம் தலைவியின் வேற்படை போன்ற நெடிய கண்களின் பார்வையான கருவாட்டினைக் காத்தலில் நினைவு கொள்ளாது என்னையே தன்கைப்படுத்திக் காத்தலில் வன்மை கொண்டுள்ளது என்று தலைவன் தான் தலைவி மீது கொண்டுள்ள காதலினைத் தன் தோழனுக்கு எடுத்துக் கூறிய செய்தியை,

பானைம் தண்கழி பாடறிந்து தன்னைமார்
நூல் நல நுண்வலையால் நொண்டெடுத்த காணல்
படுபுலால் காப்பாள் படைநெடுங்கண் நோக்கம்
கடி(பு) ஒல்லா என்னையே காப்பு[23]

என்ற பாடல் வரிகளாலும் அதற்கடுத்து வரும்,

பெருங்கடல் வெண்சங்கு காரணமாப் பேணா(து)
இருங்கடல் மூழ்குவார் தங்கை – இருங்கடலுள்
முத்தன்ன வெண்முறுவல் கண்டுருகி நைவார்க்கே
ஒத்தனம் யாமே உளம்[24]

என்றப் பாடல் வரிகளினாலும் இத்துறையை அறிய முடிகின்றது. இத்துறை அமைப்பைக் காணும்போது, தமிழில் நிலைப்பெற்றிருந்த களவியல் மரபோடு கணிமேதாவியார் தனது பாடலை அமைத்துள்ள பாங்கு உளங்கொளத் தக்கது.

**குறி: பகற்குறி, இரவுக்குறி**

தலைவனும், தலைவியும், பகலிலும் இரவிலும் சந்திப்பர். பகலில் சந்திக்குமிடத்தைப் பகற்குறி என்பர். இரவிற் சந்திக்குமிடத்தை இரவுக்குறி என்று அழைப்பர். பகற்குறி நிகழும் இடம் வீட்டுக்கு வெளியே அமையும். இரவுக்குறி நிகழுமிடம் வீட்டின் பகுதியிலேயும், வீட்டில் உள்ளோர் சொல்லைக் கேட்கும் தூரத்திலும் அமையும். இவ்வாறு சந்திக்கவரும் இடங்களில் ஏமாற்றம் அடைதலும் இயல்பே. அவற்றை இவண் ஆராய்வது பொருந்தும்.

**பகற்குறி**

தலைவ! பொய்கை ஊருக்கு மிக அண்மையில் உள்ளது. சிறிதான காட்டாறு அப் பொய்கைக்குத் தொலைவிடத்தது அன்று. அதன் அண்மையிலேயே உள்ளது. அங்குள்ள சோலையோ, பொய்கையிலும் ஆற்றிலும் இரை தேடித்திரியும் வெண்நிற நாரையன்றி வேறு எல்லாவுயிரும் அடைகின்றது. கூந்தலில் சூடும் செங்குவளை மலரைக் கொய்வதற்காக அங்கு போவோம் தலைவியும் அவ்விடத்தில் வருவாள் எனத் தோழி கூறுவதாக,

ஊர்க்கும் அணித்தே பொய்கை பொய்கைக்குச்
சேய்த்தும் அன்றே சிறுகான் யாறே
இரைதேர் வெண்குருகு அல்லது யாவதும்
துன்னல் போகின்றால் பொழிலே யாம்எம்
கூழைக்கு எருமணம் கொணர்கம் சேறும்
ஆண்டும் வருகுவள் பெரும்பே தையே[25]

என்றக் குறுந்தொகைப் பாடலால் அறியலாம். மேலும் இத்துறையை ஐயூர் முடவன் தனது பாடலில் கையாண்டுள்ளார்.[26] இத்துறையைச் சங்க அகஇலக்கியங்களில் நிரம்பக் காணலாம்.

இத்துறையைக் கணி மேதாவியார் மனங்கொண்டுள்ளதை அவர் இயற்றிய திணைமாலை நூற்றைம்பதில் காணலாம்.

தலைவனும், தலைவியும் சந்திப்பதற்கு உரிய இடத்தைத் தோழிக் கூறியுள்ளதை அறியமுடிகிறது.

மிகவும் உயர்ந்து காணப்படும் பலா மரங்களின் பக்கத்தில் வருக்கைப் பலாமரங்களால் பகுத்துப் பதிக்கப்பட்ட அப்பலாத் தோப்பின் நடுவே நிலவொளி காணும்படியாக மிகுந்த மணல் உயர்ந்து வட்டமாய்ப் பரவித் தோன்ற அதன் அருகேயுள்ள காட்டாற்றுப் பெருக்கினால் ஒழுங்குபடுத்தப்பட்ட காந்தளம் பூக்கள் மிகுந்து காணும்படியான குளிர்ந்த சோலையே நறுமணங் கொள்ளும்படியாக யானும் என் தலைவியும் பகற்பொழுதில் தங்கி விளையாடிய இடம் இது பகற்குறிக்குரிய இடமாகும் எனத் தோழிக் கூறுவதை,

பலா எழுந்த பால்வருக்கைப் பாத்தி ,அதன்சேர்
நிலா எழுந்த வார்மணல் நீடிச்சுலா எழுந்து
கான்யாறு கால் சீத்த காந்தள்அம்பூந் தண்பொதும்பர்
தான் நாறத் தாழ்ந்த இடம்[27]

என்றப் பாடலால் உணர முடிகின்றது. இந்நூலில் சில இடங்களில் இத்துறை செல்வாக்குப் பெற்றுள்ளது.[28]

**இரவுக்குறியும் அதன் விளையும்**

தலைவனும், தலைவியும் இரவில் சந்திப்பதை இரவுக்குறி என்று மொழிந்தனர். இது சங்க அக இலக்கியங்களில் பல இடங்களில் பல புலவர்களால் இத்துறைக் கையாளப்பட்டுள்ளன.[29] அவற்றை,

ஒலிவெள் அருவி ஒங்குமலைநாடன்
சிறுகட் பெருங்களிறு வயப்புலித் தாக்கித்
தொல் முரண் சொல்லும் துன் அருஞ் சோலை
நடுநாள் வருதலும் வருஉம்
வடுநா ணலமே தோழி நாமே[30]

என்றக் குறுந்தொகைப் பாடலின் மூலம் அறியமுடிகிறது.

கீழ்க்கணக்கு அகநூல்களில் இத்துறை பல காணப்படுகிறது.[31] இக்கருத்தை ஆயும்போது கீழ்க்கணக்கு அக இலக்கியங்கள், சங்க அக மரபுகளைப் போற்றிய பாங்கு வெளிப்படுகின்றன. கடற்கரைச் சோலையையுடைய துறைமுகத்திற்குரிய தலைவனே! எம் இல்லத்தின் முன் உப்பங்கழிகள் சூழப்பட்டு இளமணல் மேல் மீன்களைக் காயவைத்துள்ள உப்பளத்தோடு கூடிய புனைமரங்கள் தழைத்துள்ள பூவிதழ்களையுடைய கடற்கரைச் சோலையில் வாழும் அன்றில் பறவைகள் சேர்ந்து அழைக்கின்ற பனைமரத்தோடு கூடியது யாம் விளையாடுமிடம் என்று தோழி தலைவனுக்கு இரக்குறியிடங் கூறியதை,

கடற்கானல் சேர்ப்ப! கழியுலாஅய் நீண்ட
அடற்கானல் புன்னைதாழ்ந்(து) ஆற்ற – மடற்கானல்
அன்றில் அகவும் அணி நெடும் பெண்ணைத்(து) எம்
முன்றில் இளமணல்மேல் மொய்த்து[32]

என்றத் திணைமாலை நூற்றைம்பதால் விளக்க முடிகின்றது.

**அல்லகுறி**

இரவுக்குறியின் போதும், பகற்குறியின் போதும் சந்திப்பு நிகழாமல் போவது இயற்கை. இதனை 'அல்லகுறி' என்பர். அல்லகுறிப்பட்டு மீளும் தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியதாக அமைந்தது. பரணர்தன் பாடலில் அல்லகுறிகளை எடுத்துரைத்துள்ளார். பொருள் இல்லாத வறுமையாளன் இன்பத்தை விரும்பினாற்போல, பெறுதற்கரிய பொருளை நீ விரும்பினாய் எனத் தன் நெஞ்சோடு பேசுவதாக அமைந்த கதை,

இல்லோன் இன்பம் காமுற்றா அங்கு
அரிது வேட்டனையால் நெஞ்சே காதலி
நல்லல் ஆடுதல் அறிந்தாங்கு
அரியள் ஆகுதல் அறியா தோயே[33]

என்றக் குறுந்தொகைப் பாடல் மூலம் அறியலாம்.

இத்துறையை அல்லகுறிப்பட்டமையைத் தலைவிக்குக் கூறுவதுபோல் தோழி தலைவனுக்குக் கூறினாள்.

குறுந்தொகைப் பாடலில் தலைவன் அல்லகுறிபட்டுத் திரும்பினான். ஐந்திணை ஐம்பதில் தலைவியின் அல்லகுறி பேசப்பட்டுள்ளது எதுவானாலும் 'அல்லகுறி' தான் என விளக்கலாம். ஐந்திணை ஐம்பதில் வரும் அல்லகுறியை,

> தெண்கடல் சேர்ப்பன் பிரியப் புலம்பு அடைந்து
> ஒள் தடங்கண் துஞ்சற்க ஒள்ளிழாற்! – நண்படைந்த
> சேவலும் தன்னருகில் சேக்குமால், என் கொலோ
> பூந்தலை அன்றில் புலம்பு[34]

என்றப் பாடல் வரிகளால் உணரமுடிகின்றது. இத்துறையைக் கண்ணஞ் சேந்தனாரும் திணைமொழியில் கையாண்டுள்ளார்.

ஆராய்ந்து எடுக்கப்பட்ட அணிகளை அணிந்த தலைவியை நோக்கி, தாழைச் செடிகள் வளர்ந்த சோலையிடத்தில் முன்பு நம்மை அவன் கண்ட நாளில் எப்படி அவருக்கு நாம் அருமையராக விளங்கினோமோ அவ்வாறு இன்று நமக்கு அவன் அருமையுடையவனாக விளங்குகின்றான். அவனால் குறிக்கப்பட்ட இரவுக்குறிகளும் பொய்யாயிற்று. அவருடைய நட்பானது ஐயத்திற்கு இடமாகி நிலைத்து நிற்காது போய்விடும் போல உள்ளதே என்று அல்லகுறிப்பட்ட தோழி, தலைவிக்குக் கூறுவதை,

> நெய்தற் படப்பை நிறைகழித் தண்சேர்ப்பன்
> கைதைசூழ் கானலுன் கண்ட நாள் போலானான்
> செய்தகுறியும் பொய் யாயின ஆயிழையாய்!
> ஐயகொல் ஆன்றார் தொடர்பு[35]

என்ற பாடல் வரிகளால் அறிய முடிகின்றது.

மேற்கூறப்பட்டுள்ள இக்குறிகள் மூன்றும் சிறப்பான முறையில் சங்கநூல்களில் செல்வாக்குப் பெற்றுள்ளன.

**மதியுடம் படுத்தல்**

தலைவியும் தோழியும் சேர்ந்திருக்கும் காலத்தில் தலைவன் வந்துவிடுவதும் உண்டு. ஆகவே எங்ஙனமாயினும் தோழிக்கு இந்நிகழ்ச்சி தலைவிக்கும், தலைவனுக்கும் ஏற்பட்டுள்ள தொடர்பு வெளிப்பட்டுவிடும். தோழி உணர்த்துதலால் அறிந்த செய்தி உறுதிப்பட்டு விடுதலை மதியுடம் படுத்தல் என்பர்.

இத்துறையும் சங்க இலக்கியங்களில் பல இடங்களில் புலவர்கள் எடுத்தாண்டுள்ளனர். அவற்றை,

செங்கேழ் ஆடிய செழுங்குரற் சிறுதினைக்
கொய்புனம் காவலும் நுமதோ
கோடு ஏந்தி அல்குல் நீள் தோளீரே[36]

என்ற நற்றிணை வரிகளால் அறியலாம்.

இம்மதியுடம் படுத்தலைக் கீழ்க்கணக்கு அக நூலாசிரியர்களும் திறம்படக் கையாண்டுள்ளனர். அவற்றை,

அவட்காயின் ஐவனம் காவல் அமைந்த(து)
இவட்காயின் செந்தினைகார் ஏனல் – இவட்காயின்
எண்ணுளவால் ஐந்திரண்(டு) ஈத்தான்கொல் என்னாங்கொல்
கண்ணுளவால் காமன் கணை[37]

என்றத் திணைமாலைப் பாவால் உணரலாம்.

**பொழுது கண்டு ஆற்றாாளாய தலைமகள் தோழிக்கு உரைத்தவை**

அந்திமாலைப் பொழுது உடனுறையும் தலைமக்கட்கு மனமகிழ்வையும், பிரிந்துறையும் தலைமக்கட்குத் துயரையும் நல்க வல்லது. அக்காலத் தலைவர்களின் தொழில் பிரிவினைகள் முடிந்து இல்லம் திரும்பும் நேரம் மாலை நேரமாதலால் அப்பொழுது வந்துற்றதும் தன் தலைவர் வரக்காணேன் என்று வருந்துவதும் அவ்வருத்தத்தினின்று தோழி ஆற்றுவதுமாக அகஇலக்கிய மரபினைப் பண்டு உருவாக்கினர் என்பதை சங்கஇலக்கிய முல்லைத் திணைப் பாடல்களில் அறியமுடிகிறது.[38] இத்துறையை மருதன் இளநாகானர்,

சிறுகம்பிடவின் வெண்தலைக் குறும்புதல்
கண்ணியின் மலரும் தண்நறும் புறவில்,
தொடுதோட் கானவன் கலைபொறுத்தன்ன
இருதிரி மருப்பின் அண்ணல் இரவை
செறிஇலைப் பதவின் செங்கோல் மென்குரல்

எனப் பாடியுள்ளார். இப்பாடலை முழுமையாக ஆராய்ந்து பார்த்தால் ஆற்றாய தலைமகனின் நிலை விளங்கும். இக்கருத்துகளையும், இத்துறையையும் கீழ்க்கணக்கு நூலாசிரியர்களும் தானியற்றிய அக நூலில் பிரதிபலித்துள்ளனர்.

மாலை நேரத்தில் நல்ல மணமுடைய வெண்காந்தள் செடிகள் துடுப்புப் போன்ற அரும்புகளை ஏந்தி நிற்கின்றன. வானத்தே வளர்ந்து விளங்கும் மேகங்களிலுள்ள இடிகள் இடித்திட, அவ்விடியோசையைக் கேட்டுக் காதலரைப் பிரிந்த காதலியர் துன்பம் மிகுந்து நடுங்கும்படியாக அம்மாலைப் பொழுது கொலையாளியைப் போன்று வந்தது என தலைவி கார்ப்பருவம் கண்டு தலைவன் வரவில்லையே என்று தோழியிடம் வருந்திக் கூறினாள்.[39] இச்செய்தியை,

குருந்தலை வான்படலை சூடிச் சுரும்பார்ப்ப
ஆயன் புகுதரும் போழ்தினான் ஆயிழாய்!
பின்னொடு நின்று பெயரும் படுமழைகொல்
என்னொடு பட்ட வகை[40]

என்றப் பாடலில் காணமுடிகிறது. இது கார்நாற்பது போன்ற அகநூல்களில் மிகுதியாகக் கையாளப்பட்டுள்ளன.[41]

**பசலைப் பரவுதல்**

களவொழுக்கத்தின்கண் தலைவன் கூறிச் சென்றவாறு வந்து சந்திக்கவில்லை என்றாலும், பிரிவின்கண்ணும் தலைவிக்கு உடம்பின் மீது பசலைப் பரவுதலை அகத்துறையாகக் கொள்வர். இதனைச் சங்க அகப் பாடல்களில் காணமுடிகிறது.[42] இத்தகு பசலை பீர்க்க மலரொத்ததென்பதை அறியமுடிகிறது. அவற்றை,

நுண்கொடிப் பீரத்தின் ஊழ்உறுபூ எனப்
பசலை ஊரும் அன்னோ பல்நாள்
அறிஅமர் வனப்பின் எம்கானம் நண்ண
உண்டு எனும் உணரா வாகி
மலர் மரீஇ வரூஉம் இவள் கண்ணே[43]

என்ற நற்றிணைப் பாடலால் அறியமுடிகிறது.

சங்க இலக்கியங்கள் பசலையைப் பற்றிக் கூறுவதை உளங்கொண்ட மதுரைக் கண்ணங் கூத்தனதனார் கார்நாற்பதில், மேகம் குறிஞ்சிப் பறை போல முழங்குதலைச் செய்ய காட்டின் கண் குருக்கத்தி இகைள் தழைத்தன. நம் தலைவர் பிரிதலை நன்றென்று நினைத்து நாம் அடையும் துயரினைக் கருதாது சென்றார் என்று நாம் ஊடல் கொள்ளுவதால் பசலை நோயானது நம்மைப் படுக்கையில் கிடக்கச் செய்யும் கொடுமையானது என்று கூறியுள்ளார். இதனை,

முருகியம் போல் வானம் முழங்கி இரங்கக்
குருகிலை பூத்தன கானம் – பிரிவெண்ணி
உள்ள(து) அகன்றார் என்(று) ஊடியாம் பாராட்டப்
பள்ளியுள் பாயும் பசப்பு[44]

என்ற வரிகளால் அறியலாம். மேலும் பீர்க்கம்பூ உவமையாகக் கூறப்பட்டுள்ளன. அவை பீர்நீர்மை கொண்டனதோள் என வந்துள்ளன.[45]

**இற்செறிப்பு**

தலைமக்களது களவு வாழ்க்கை எவ்வளவு தான் மறைக்கப்பட்டாலும், நாளடைவில் சிறிது சிறிதாக வெளிப்படத் தான் செய்யும். முதலில் சிலர் அறிவர். இந்நிலை 'அம்பல்' என்று குறிப்பர். நாளாக நாளாகப் பலர் அறிவர். இந்நிலைய 'அலர்' என்றும் கூறுவர். இவ்வம்பலும் அலரும் களவை வெளிப்படச் செய்துவிடும் அம்பலும் அலரும் மிகுதியானவுடன் தலைவி இற்செறிக்கப்படுவாள். காவல் மிகுதியாகும்; திருமணப் பேச்சு ஏற்படும். இந்த இற்செறிப்பைச் சங்க இலக்கியங்களில் பல இடங்களில் காணமுடிகிறது. தலைவியின் இற்செறிப்பைத் தலைவனுக்கு அறிவுறுத்தி திருமணம் செய்து கொள்ளும்படி தோழிக் கூறுவாள். இது,

உள்ளினும் பனிக்கும் ஒள்இழைக் குறுமகள்
பேர்இசை உருமொடு மாரிமுற்றிய
பல்குடைக் கள்ளின் வண்மகிழ்ப்பாரி
பலவுறு குன்றம்போலப்
பெருங்கவின் எய்திய அருங்காப்பினளே[46]

என்ற நற்றிணைப் பாவால் எடுத்தியம்பப்படுகிறது.

இவ்இற்செறிப்பைச் சங்க காலத்திற்குப் பின் தோன்றிய கீழ்க்கணக்கு நூல்களும் கூறுகின்றன. அவை,

சாந்தம் எறிந்துழுத சாரல் சிறுதினைச்
சாந்தம் எறிந்த இதண்மிசைச் – சாந்தம்
கமழக் கிளிகடியும் கார்மயில் அன்னாள்
இமிழக் கிளியெழா ஆர்த்து[47]

என்றுத் திணைமாலையில் கூறப்பட்டுள்ளன.

**வரைவுகடாதல்**

தலைவியைக் களவொழுக்கத்தில் காணும் தலைவனைத் தோழி, கற்பொழுக்கமாக மாற்ற எடுக்கும் அரிய முயற்சியே 'வரைவு கடாதல்' எனப்படும். இயற்கைப் புணர்ச்சிக்

கண் நாளும் வந்து தலைவியிடம் நலம் துய்த்துச் செல்வது மட்டும் காதலன்று. விரைவில் மணத் புரிவதற்குரிய முயற்சிகளிலும் ஈடுபடுகவெனத் தலைவனிடம் தோழிகூறல் இதன்பாற்படும். இதனைத் தொல்காப்பியர்,

களனும் பொழுதும் வரைநிலை விலக்கி[48]

என்று விளக்கியுள்ளார்.

தலைமக்களது களவொழுக்கத்தின் கண் தோழியால் மணவினை வற்புறுத்தப்பட்டுள்ளது. தோழி, தலைவனிடம் இடம், பொருள், சூழ்நிலை தெரிந்து அதற்கு ஏற்ப வரைவுகடாதலை நடத்தினாள் என்பதைச் சங்க அகப்பாடல்களில் காணமுடிகிறது. இவ்வரைவுகடாதல் நிலை கீழ்க்கணக்கு நூல்களிலும் பல இடங்களில் காண முடிகிறது. அவை சங்க இலக்கியத்தின் தாக்கத்தைப் பெற்றுள்ளனவா? என ஒப்பிட்டு ஆராயப்படுகிறது.

**தோழி தலைமகன் முன்னின்று வரைவுகடாதல்**

தலைவன் தலைவியை மணந்து கொள்ளும் முயற்சிகளிலே ஈடுபடாது இரவுக்குறி நேர்தலிலேயே மனஞ் செலுத்துகிறான். அவன் முன்னின்று தலைவியின் மேனி பசலைப் பாய்கிறது. அப்பசலை பீர்க்கின் மலர்போல் உள்ளது எனக்கூறிய தோழி தலைவியை மணம் புரியுமாறு தலைவனை வற்புறுத்துகிறாள். இதுவே தோழி தலைவன் முன்னின்று வரைவுகடாதல் என்ற துறையாகும். இத்துறையைச் சங்க அகஇலக்கியங்கள் பல இடங்கள் விளக்கியுள்ளன.

நற்றிணையில் மதுரை மருதன் இளநாகனார் இத்துறையமைப்பைக் குறிஞ்சிநிலப் பின்னணிகளோடு விளக்கியுள்ளமை,

கொழுஞ்சுளைப் பலவின் பயங்கொழு கவாஅன்
செழுங்கோள் வாங்கிய மாச்சினைக் கொக்கின்
மீன்குடை நாற்றம் தாங்கல் செல்லாது
துய்த்தலை மந்தி தும்மும் நாட
நினக்கும் உரைத்தல் நாணுவல் இவட்கே
நுண்கொடிப் பீரத்தின் ஊழ்உறு பூ எனப்
பசலை ஊரும் அண்ணோ பல்நாள்
அறிஅமர் வனப்பின் எம் கானம் நண்ண

உண்டு எனும் உணரவாகி
மலர் மரீஇ வரூஉம் இவள்கண்ணே[49]

என்ற பாடல் வரிகளால் அறியலாம். இத்துறைகளை ஏற்றுக்கொண்ட மாறன் பொறையனார், தலைமகனைத் தோழி வரைவுகடாயது என்று அப்படியே அமைத்துள்ளதை,

எக்கர் இடுமணல்மேல் ஓதம் தரவந்த
நித்திலம் நின்றிமைக்கும் நீள்கழித்தண்சேர்ப்ப
மிக்க மிகுபுகழ் தாங்குபவோ தற்சேர்ந்தார்
ஒற்கம் கடைப்பிடியாதார்[50]

என்று ஐந்திணை ஐம்பது பாடல் வரிகளால் அறியலாம். இத்துறையைக் கீழ்க்கணக்கு அகநூல்கள் பெரும்பாலானவற்றிலும் காணமுடிகிறது.

வேடர்கள் தேனடைகளைக் கவர்ந்து சென்றபோது கீழே நழுவி வீழ்ந்த தேனடைகளை மான்கன்றுகள் கால் குழம்புகளால் சிதைக்கும் மலைநாட்டுத் தலைவனே! நீ தலைமகளை விரைவில் மணந்து கொள்வாய். அங்ஙனமில்லாது நீ களவுப் புணர்ச்சியை விரும்பினால் எம் தலைவி துன்பத்தினால் இறந்துபடவும் நேரும் என்று தோழி, தலைவனிடம் வரைந்துகொள்ளும் படி வேண்டினாள் என்பதை அறியமுடிகிறது.[51] மேலும் இத்துறை திணைமொழி ஐம்பதிலும் அமைந்துள்ளதை,

முத்தம் அரும்பும் முடத்தாள் முதுபுன்னை
தத்தம் திரைதயங்கும் தண்ணங் கடற்சேர்ப்ப!
சித்திரைப் பூங்கொடி அன்னாட்(கு) அருள்ஈயாய்
வித்தகப் பைம்பூணின் மார்பு[52]

என்றப் பாவால் உணரமுடிகிறது. இத்துறைபல இடங்களில் இடம்பெற்றமையால்53 சங்க அகஇலக்கியங்களின் துறையைக் கீழ்க்கணக்கு நூல்கள் மாறாமல் ஏற்றுப் போற்றியதெனலாம்.

**வெறிவிலக்கல்**

களவொழுக்கத்தின்கண் ஏற்படும் இடர்ப்பாட்டால் தலைவி மெய் வேறுபடுவாள். இவ்வேறுபாட்டை அறிய நற்றாய், தோழி உள்ளிட்டோர் வேலனைக் கொண்டு வெறியாட்டு நிகழ்த்துவர். அப்போது தலைவிக்குற்ற நோயினைத் தோழி முன்னிலையாக்கிக் கூறி வெறியாடி விலக்குவர். இதனால் தலைவி விரும்பிய

அகத்தோழமை அறியவரும். அவ்வழி தலைவியின் காதல் நிலைபெற முயற்சி மேற்கொள்வர். இத்தகு பொருண்மைகளை 'வெறியாட்டு', 'வெறிவிலக்கல்' என்று கூறுவர். இவற்றைத் தொல்காப்பியர்,

அவன்விலங்கு குறினும் களம் பெறக் காட்டினும்
வெறியென இருவரும்[54]

என்னும் நூற்பாக்களின் வரிகளில் எடுத்தியம்பியுள்ளார்.

இத்துறையை விரும்பிப் பாடியதால் (அகம் - 22:98, நற் - 268) வெறிபாடிய காமக்கண்ணியார் என்ற சிறப்புப் பெற்றார் என்பர்.[55] இத்துறையைப் பற்றிய பல சங்கப் பாக்கள் இடம்பெற்றுள்ளன. அவற்றை,

முருகு அயர்ந்து வந்து முதுவாய் வேல
சினவேல் ஓம்புமதி வினவுவது உடையேன்
பல்வேறு உருவின் சில்அவிழ் மடையொடு
சிறுமறி கொண்டு இவள் நறுநுதல் நீவி
வணங்கினைக் கொடுத்தி ஆயின் அணங்கிய
விண்தோய் மாமலைச் சிலம்பன்
ஒண்தார் அகலமும் உண்ணுமோ பலியே[56]

என்ற பாடலால் அறியலாம்.

இவ்வெறிவிலக்கல் துறையை மூவாதியார் மனங்கொண்டு ஏற்றுள்ளதை ஐந்திணை ஐம்பதில் அறியலாம்.

தோழி, நீண்ட தினைக்கதிர்களை வளைந்த பாயினையுடைய கிளிகள் கவர்ந்து செல்லாதிருக்க என ஐயன்மார் தினைப் புனக் காவலில் நிறுத்தினர். அப்பொழுது சோலைகள் சூழ்ந்த மலைநாடனின் நட்பு ஒன்றையே கொண்டு காதலுடன் அவனை ஆரத்தழுவினேன், அதனால் என் மேனியில் சிறிது மாற்றம் ஏற்பட்டது. அம்மாற்றம் தெய்வத்தால் உண்டானது என எண்ணி வேலனைக் கொண்டு ஆடும் தேவராளனும் ஆட்டுக்குட்டியை முருகனுக்குப் பழியாகத் தந்து வெறியாடத் துணிந்துவிட்டான். எனவே நீ செவிலியிடம் உண்மையைக் கூறி வெறியாட்டெடுத்தலைத் தலைவி தோழியிடம் கூறினாள் என்பதால் இத்துறையை உய்த்துணரமுடிகிறது.[57] இக்கருத்துக்கள் ஆராயுமுகத்தான் இவ்வெறிவிலக்கல் கீழ்க்கணக்கு நூல்களில் செல்வாக்குற்றதை அறியமுடிகிறது.

**நிமித்தம்**

அவர் வரவிற்கு நிமித்தமாயின கண்டு ஆற்றாலாகிய தலைமகட்குத் தோழி சொல்லியது:

தலைவன் வருகைக்கு ஏற்ப நல்ல நிமித்தங்கள் பார்த்தல் சங்ககால வழக்கமாயிருந்தது.

வண்தேர்த் தொண்டையர் வழைஅமல் அடுக்கடுத்துக்
கன்றுஇல் ஓர்ஆ விலங்கிய
புன்தாள் ஓமைய சுரன் இறந்தோரே[58]

எனக் கல்லாடனார் கூறுவதினால் நன்நிமித்தத்தை அறியமுடிகிறது. நிமித்தங்கள் பார்க்கும் வழக்கம் சங்க இலக்கியங்களில் பெருமளவில் இடம்பெற்றுள்ளன. இவ்வழக்கம் ஐந்திணை எழுபது உள்ளிட்ட நூல்களில் இடம்பெறுவது இவண் மனங்கொளத் தக்கது. அவற்றை,

மலைவழியாகச் சென்று பாலை நிலத்தூர்களைத் தலைவன் சென்றான். பொதுவிடத்தில் உள்ள முதுமையான ஆலமரத்தில் வாழ்கின்ற ஆந்தையானது அலறுவதாலும், அடிக்கடி நலமிக்க தும்மல்கள் தோன்றுவதாலும் களவொழுக்கத்தில் நம்மிடம் கொண்ட அன்புபோல தோழியின் கலக்கம் நீங்க மீண்டும் வருவார் எனத் தலைமகனின் வருகையினை எதிர்ப்பார்த்துக் கலங்கி நின்ற தலைமகட்குத் தோழி நன்னிமித்தங்கள் பல கூறி ஆறுதல் சொல்வதாக அமைந்துள்ளது.[59] இக்கருத்து வருவதுபோலவே இதற்கு பின்வந்த பாடல்,

பூங்கண் இடமாடும் கனவும் திருந்தின
ஓங்கிய குன்றம் இறந்தாரை யாம்நினைப்ப
வீங்கிய மென்தோள் கவினிப் பிணைதீரப்
பாங்கத்துப் பல்லிபடும்[60]

என விளக்கி நிற்கின்றன.

**காமம் மிக்க கழிபடர்கிளவி**

களவொழுக்கத்தின்கண் பிரிவு நேர்ந்தபோது தலைவிக்கு ஏற்படும் மிகையான துன்பப் பெருக்கைக் 'காமம் மிக்க கழிபடர்கிளவி' என்பர். இவ்வேளையில் தலைவியர் புல்லினத்தை விளித்து மொழிவது மரபு. இத்துறையமைப்புடைய பாடல்களைச் சங்க

அகநூல்கள் கொண்டு விளங்குகின்றன. சேவலை, குருவிகளை விளித்துக் கூறுவர். வெள்ளிவீதியாரின்,

சிறுவெள்ளாங் குருகே சிறுவெள்ளாங் குருகே
துறைபோகு அறுவைத் தூமடி அன்ன
நிறங்கிளர்க்தூவிச் சிறுவெள்ளாங் குருகே
எம்மூர் வந்து எம் ஒண்துறைத் துழைஇச்
சினைகெளிற் றார்கையை அவரூர்ப் பெயர்தி
அனையஅன் பினையோ பெருமற வியையோ
ஆங்கன் தீம்புனல் ஈங்கன் பரக்கும்
கழனி நல்லூர் மகிழ்நர்க்கென
இழை நெகிழ் பருவரல் செப்பாதோயே[61]

என்னும் பாடலில் தலைவி குருகைப் பார்த்துத் தன் காமமிகையால் பெருவருத்தமுற்றுக் கூறுவதைக் காணமுடிகிறது.

இவ் அகத்துறைப் பாடல்களைப் புல்லங்கடனாரின்,

அன்னையும் இல்கடிந்தாள் யாங்கு இனியாம் என்செய்கம்
புன்னையங் கானனுள் புக்கருந்தும் – நின்னை
நினையான் துறந்த நெடுங்கழிச் சேர்ப்பற்கு[62]

‘உரையனோ பட்டபழி’ என்ற பாடல் வரிகளால் நாரையை விளித்துக் கூறப்பட்டுள்ளன.

தலைவி நண்டைநோக்கிக் கூறுவதாக அமைந்துள்ளன. வளைந்த கால்களையிடைய நண்டே! ஒரு வேண்டுகோளை நாம் உன்னிடத்தில் கேட்டுக் கொள்கிறோம் என்று தலைவி கூறுவதாக அமைந்ததை,

கொடுந்தாள் அலவ! குறையாம் இரப்பேம்
ஒடுங்கா ஒலிகடல் சேர்ப்பன் – நெடுந்தேர்
கடந்த வழியையெங் கண்ணாரக் காண
நடந்து சிதையாதி நீ[63]

என்றப் பாடலால் அறியலாம். இவை மட்டுமின்றி இத்துறையைச் சார்ந்த பாடல்கள் பல (கைந் - 50, 51, திணைமாலை - 38, ஐந்-ஐம் - 43) கீழ்க்கணக்கு நூல்களில் செல்வாக்குப் பெற்றுள்ளன.

**உடன்போக்கு**

அலர் தூற்றல், வெறியாட்டு முதலியவற்றால் தலைவன் தலைவியரின் காதல் வெளிப்பட்டு விடும். தலைவனுக்கு மணஞ் செய்து கொடுத்தல் இயலாது போயின் அவள் காதலனுடன் வீட்டைவிட்டு வெளியேறிவிடுவாள். இவ்வாறு காதலனுடன்

காதலி பெற்றோர் அறியாமல் புறப்பட்டுச் செல்வதை 'உடன்போக்கு' என்பர். அவ்வாறாகத் தலைவனுடன் சென்ற தலைவியை நினைத்து தாய் புலம்புவாள்.

**மகள் போக்கிய நற்றாய் சொல்லியது**

தலைவனுடன் உடன்போக்குச் சென்ற தலைமகள் எப்படி இருக்கிறாளோ என்று தாய் வருந்துவது இத்துறையின் பாற்படும். இத்துறை பெரும்பாலும் பாலை நிலத்தின் தன்மைகளைச் சித்தரிப்பதாகவே அமைந்து காணப்படுகிறது. இத்துறையைக் கயமன் என்னும் புலவர்,

பாலும் உண்ணாள் பந்துடன் மேவாள்
விளையாடு ஆயமொடு அயர்வோள் இனியே
........................................................
மழை முழங்கு கடுங்குரல் ஓர்க்கும்
கழைதிரங்கு ஆர்கிடை அவனொடு செலவே[64]

என்று தன் பாடலின் மூலம் தாயின் புலம்பலை விளக்கியுரைத்துள்ளார். இத்துறையை மனங்கொண்ட கண்ணந்சேந்தனார், தான் இயற்றிய அகநூலில் புகுத்தி இருப்பது உணரத்தக்கது.

தலைவனுடன் உடன்போக்குச் சென்ற என்மகள் நாணை ஏற்றி அம்பு தொடுக்கப்பட்ட வில்லினையுடைய வேட்டுவர் வாழுகின்ற கொடிய பாலைநிலத்தில் எவ்வாறு நடந்து செல்வாளோ என கவல்கிறாள். அவற்றை,

ஏற்றிய வில்லின் எயினர் கடுஞ்சுரம்
பாற்றினம் சேரப் படுநிழல் கண்டஞ்சிக்
கூற்றன வல்வில் விடலையோ(டு) என்மகள்
ஆற்றுங் கொல் ஐயநடந்து[65]

என்ற வெண்பாவால் அறியமுடிகிறது.

**சிறைப்புறத்தானாகத் தலைமகனை இயற்பழித்துத் தோழிக்குத் தலைவி இயற்படமொழிந்தது**

தலைவன் சிறைபுறமாக இருக்க தலைவி தோழியை நோக்கிக் கூறுகிறாள். தோழி, மூங்கிலை வேலியாகவுடை மலைகளைக் கொண்டுள்ள தலைவனை நினைத்து கைவளையல்கள் நெகிழ்ச்சியுற்று நழுவின என்றும், தோள்களும் மெலிந்தன என்று தலைவி கூறுவதாக அமைந்துள்ளது. அவற்றை,

தொடிநெகிழ்ந்தனவே தோள்சாயினவே,
விடும் நாண் உண்டோ தோழி விடர்முகைச்
சிலம்புடன் கமழும் அலங்குகுலைக் காந்தள்
நறுந்தாது ஊதும் குறுஞ்சிறைத் தும்பி
பாம்புஉமிழ் மணியின் தோன்றும்
முந்தூழ் வேலிய மலைகிழ வோற்கே[66]

என்றக் குறுந்தொகைப் பாடலால் அறியமுடிகிறது.

இத்துறையைச் சிறிதும் மாறுபடாமல் மாறன் பொறையனார் என்ற புலவர்,

காகை நாடன் கலவான் என் தோளென்று
மானமர் கண்ணாய்! மயங்கல் நீ – நானம்
கலந்திழியும் நன்மலைமேல் வாலருவியாடப்
புலம்பும் அகன்றுநில்லா[67]

என்று ஐந்திணை ஐம்பதில் விளக்கியுள்ளார்.

**வினைமுற்றி மீளுகின்ற தலைவன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது**

வினையின் காரணமாகப் பிரிந்திருந்த தலைவன் வினை முடிந்து திரும்பிவரும் வழியில் தன் நெஞ்சோடு பேசுகிறான். இதனை 'நெஞ்சொடு கிளத்தல்' என்றும் கூறுவர். தலைவன், சுரநெறியாலும் பிரிவாலும் பட்டதுயரங்கள் தீர்ந்தன; இனி தலைவியுடன் பிரியாது இன்புருவோம் எனத் தன் நெஞ்சுக்குக் கூறுகிறான். தலைவன் வருந்தி வழி நடக்கும் காலத்தில் தலைவனுடைய நெஞ்சு, தலைவியையே நினைத்துக் கொண்டுள்ளது.

என் நெஞ்சமே என்னோடு நீ துணைநிற்காமல் அவளையே நினைத்தயோ? எனத் தன் நெஞ்சுடன் பேசுவதாக இத்துறை அமைக்கப்பட்டுள்ளது. இத்துறையை மதுரை பேரலவாயர் விளக்கியுள்ளார். இவற்றை,

தீந்தயிர் கடைந்த திரள்கால் மத்தம்
..........................................................
..........................................................
நனிநீடு உழந்தனை மனனே! அதனால்
உவஇனி – வாழிய நெஞ்சே மைஅற
வைகுசுடர் விளங்கும் வான்தோய் விபனகர்ச்
சுணங்கு அணி வனமுலை நலம்பாராட்டித்
தாழ் இருங்கூந்தல் நம் காதலி
நீள் அமை வனப்பின் தோளுமார் அணந்தே[68]

என்ற அகநானூற்றுப் பாடலால் அறியமுடிகிறது.

இத்துறை சங்க இலக்கியங்களில் நல்ல இடத்தைப் பெற்றது போலவே கீழ்க்கணக்கு நூல்களிலும் செல்வாக்குற்றதை அறியமுடிகிறது. இவற்றை,

எல்லா வினையும் கிடப்ப எழுநெஞ்சே
கல்லோங்கு கானம் களிற்றின் மதநாறும்
பல்லிருங் கூந்தல் பணிநோனாள் கார்வானம்
மெல்லவும் தோன்றும் பெயல்[69]

என்ற வெண்பா விளக்கி நிற்கின்றது. இத்துறையை மற்றொரு பாடலும் விளக்குகிறது. அவை,

ஒலிக்கும் இசையினையுடைய மேகங்கள் முழங்க, குமிழின் பூக்கள் பொன்னால் செய்யப்பட்ட காதணிகள் போல் கொத்துக் கொத்தாய்த் தொங்கிக் காட்சியளிக்கிறது. தலைவியின் ஊருக்குச் செல்லும்வழி பதமுடையனவாக உள்ளன என்று தலைவன் தன்நெஞ்சிற்குக் கூறியதை,

இமிழிசை வானம் முழங்கக் குமிழின்பூப்
பொன்செய் குழையின் துணர்தூங்கத் தண்பதம்
செல்வியுடைய சுரம் செஞ்சே காதலியூர்
கவ்வை யழுங்கச் செலற்கு[70]

என்ற வழி அறியலாம்.

### அறத்தொடு நிற்றல்

தலைமக்களது களவொழுக்கத்தைப் பெற்றோர் அறியுமாறு அகமாந்தர்கள் கூறுதல் அறத்தொடு நிற்றல் என்பர். அறம் என்பது உள்நோக்கமின்றி பிறருக்கு உதவுவது. அவ்வாறு தலைமக்களது களவொழுக்கத்தைப் பெற்றோருக்குத் தெரிவிப்பர். அவை, தோழியால் செவிலியும், செவிலியால் பெற்றதாயும் தாயால் தந்தையும் தலைவியின் காதல் பற்றி அறிவர்.[71] இதுவே அறத்தொடு நிற்றலாகும். பெற்றோர்க்கு வெளிப்படுத்துதல் எனவும், இத்துறையைச் சார்ந்த பாடல்கள் சங்கநூல்களில் 51 செய்யுட்கள் உள்ளனவென்பர்.[72]

இத்துறை குறிஞ்சிப்பாட்டில் பெருமளவு காணப்படுகின்றன. களவிற்கும், கற்புக்கும் இடையே அறத்தொடு நிற்றல் பாலமாக அமைந்துள்ளதாக அறிஞர்கள் கூறுவர். இத்துறை சங்க இலக்கியங்களில் அமைந்துள்ள இடங்களை ஆராய்வது பொருத்தமானது.

இத்துறை வேலன் வெறியாட்டினாலும் வேலனை முன்னிலைப்படுத்தியும் வெளிப்படுவதாக பாடல்கள் அமைக்கப்பட்டுள்ளன. இதனை,

அகவன் மகளே! அகவன் மகளே
மனவுக்கோப்பு அன்ன நன்நெடுங்கூந்தல்
அகவன் மகளே பாடுக பாட்டே அவர்
நன்னெடங் குன்றம் பாடிய பாட்டே

என்றக் குறுந்தொகைச் செய்யுளாலும்,[73]

நின்மகள் உண்கண் பன்மாண் நோக்கி
சென்றோன் மன்ற அக்குன்று கிழவோனே

என்னும் அகநானூற்றுச் செய்யுளாலும்[74] அறியலாம். இவை மட்டுமின்றி இத்துறையைப் பற்றிய பாடல்கள் (அகம் - 82, ஐங் - 205, 250) பல அமைந்துள்ளன.

இவ்வாறு முருகனை முன்னிறுத்திப் பாடுவதற்குக் காரணம் குறிஞ்சி நிலத்துக்குரிய கடவுள் சேயோனாகிய முருகனாக இருப்பதும், களவொழுக்கத்தில் பெரும்பான்மை குறிஞ்சி நிலத்தில் நிகழ்வதாலும் என எண்ண முடிகிறது.

இம்மரபினைக் கீழ்க்கணக்கு அகநூல் ஆசிரியர்கள் ஏற்றுப் போற்றியுள்ளனர்.

**நொதுமலர் வரைவுழித் தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்றல்**

தலைவி தான் விரும்பிய தலைவனைத் தவிர வேறொரு ஆடவனை மணம் முடிக்க உடன்பட்டாள். அதனை மீறி மணம் முடிக்க எண்ணினால் தலைவி இறந்துபடுவள் என்று இத்துறை கூறுகின்றது. இத்துறையை,

கண்டல் வேலிக் கழிசூழ் படப்பை ..........
.....................................................................
.....................................................................
கொலை வெஞ்சிறாஅர் பாற்பட்டனளே[75]

எனத் தொடங்கி முடியும் நற்றிணைப் பாடலினால் அறியமுடிகிறது. கீழ்க்கணக்கு நூல்களுக்குத் துறையை மரபு மாறாமல் தோழி, செவிலிக்கு அறத்தொடு நிற்றலை எடுத்தியம்புகிறது. அவற்றை,

தந்தார்க்கே ஆமால் தம ரென்றோள் இன்ன நாள்
வந்தார்க்கே ஆம் என்பார் யாம்காண்பாம் – வந்தார்க்கே
காவா இளமணல் தண் கழிக் கானல் வாய்ப்
பூவா இளஞாழல் போது[76]

என்றத் திணைமாலைப் பாடல் சுட்டுகின்றது. இத்துறை மேலும்,

சுள்ளிச் சுனைநீலம் சோபாலிகை செயலை
அள்ளி அளகத்தின் மேலாய்ந்து – தெள்ளி
இதணால் கடியொடுங்கா ஈர்ங்கடா யானை
உதணால் கடிந்தான் உளன்[77]

என்று விளக்குவதிலிருந்து உணரமுடிகின்றது. தலைமகன் வரைவு வேண்டி சான்றோரை விடுத்த இடத்துத் தன் மகளின் தந்தைக்கும், தனயன்மார்க்கும் நற்றாய் அறத்தொடு நிற்பதும் கூறப்பட்டுள்ளன. இத்துறையை,

வாடாா சான்றோர் வரவெதிர் கோண்டிராய்க்
கோடாது நீர்கொடுப்பின் அல்லது – கோடா
எழிலும் முலையும் இரண்டிற்கும் முந்நீர்ப்
பொழிலும் விலையாமோ போந்து[78]

என்று திணைமாலை நூற்றைம்பது விளக்குகிறது. இன்னும் பல இடங்களில் அறத்தொடு நிற்றல் பேசப்பட்டுள்ளன.[79]

சங்க இலக்கியங்களில் காணப்படும் 'அறத்தொடு நிற்றல்' போன்ற துறைகளும், பிற்கால நீதி இலக்கியங்களில் அறம் பற்றிய கருத்துக்களை விளக்கியுரைப்பதற்குச் சிற்சிறு காரணமாயின் எனத் துணியமுடிகிறது.

**மடலூர்தல்**

மடல் ஏறுதல் என்பது ஐந்திணைக்கும் அடங்காத பெருந்திணையின் பாற்படும். தலைவி தன்னை விரும்பவில்லை எனத் தெரிந்தால் மடலூர்வது வழக்கமாகும். இது ஆண்களுக்கு மட்டுமே உரியதாக இருந்தது. பெண்கள் மடல் ஏறமாட்டார்கள் என்பதை,

எத்திணை மருங்கினும் மகடூஉ மடல்மேல்
பொற்புடை நெறிமை இன்மையான

என்றுத் தொல்காப்பியர் வரையறுத்துள்ளார்.[80] இக்கருத்தைத் திருவள்ளுவர்,

கடலென்ன காமம் உழந்தும் மடலேறாப்
பெண்ணின் பெருந்தக்க தில்

என்று விளக்கியுள்ளார்.[81]

இவ்வாறு ஆண்களுக்கு மட்டும் உரிய மடல் ஏறுதல் இவண் விளக்கப்படுகிறது. பனைமடலாகிய கருக்கினால் குதிரையொன்று செய்து அதன்கண் தலைவன் மெய்யெல்லாம் நீறுபூசி, எலும்பு மாலை அணிந்து தலைவியின் வடிவமெழுதிய,

ஓவியத்தைக் கையில் பிடித்துக் கொண்டு அமர்ந்திருக்க, தலைவனைச் சார்ந்தோர் அக்குதிரையினைச் சிறுவண்டியில் சேர்த்துத் தலைவி வீடு இருக்கும் வீதிவழியே இழுத்துச் செல்வர். இதனைக் கண்ணுற்ற தலைவியின் உற்றார் தலைவன் காதலை உணர்ந்து வியந்து தலைவியை அவனுக்கு மணம் முடிப்பர்.

இம்மடலேறும் துறை சங்க இலக்கியங்களில் பல இடங்களில் காணப்படுகின்றன. இச்செய்யுட்கள் பெரும்பாலும் மடல்பாடிய மாதங்கீரனாரால் பாடப்பட்டுள்ளன. மடலேறுதல் பற்றிய செய்திகளையே இவர் பாடியிருத்தலால் இவ் அடைமொழிக் கொடுத்து அழைக்கப்பட்டார். மடல் ஏறல் பற்றியக் கருத்துக்களைப் பிறபுலவர்களும் பாடியுள்ளனர்.

விழுத்தலைப் பெண்ணை விளையல் மாமடல்
மணிஅணி பெருந்தார் மரபின் பூட்டி
..........................................................................
தெருவின் இயலவும் தருவது கொல்லோ
கலிங்கு அவிர் அசைநடைப் பேதை
மெலிந்திலள் நாம் விடற்கு அமைந்த துதே[82]

என்றப் பாடலில் மடல் ஏறுவதாகத் தலைமகன் தன்நெஞ்சிற்குக் கூறியதுவே விளக்கப்பட்டுள்ளன. மடலேறும் செய்தியைப் பேரெயின் முறுவலார் என்ற புலவர்,

மாஎன மடலும் ஊர்ப் பூஎனக்
குவிமுகிழ் எருக்கங் கண்ணியும் சூடுப
மறுகின் ஆர்க்கவும் படுப
பிறிதும் ஆகுப காமம் காழ் கொனினே

என்றுப் பாடியுள்ளார்.[83] இப்பாக்களால் தலைவனின் பிடிவாதக் குணமும் அவனது சூளுரைக்கும் தன்மையும் விளங்குகிறது.

இம்மடலேறுதலைக் கீழ்க்கணக்கு அகநூல்களும் விளக்கியுள்ளன. தலைவி என்னை மணக்கவில்லை என்றால் இனி நான் மடலூர்வேன். மடலேறியாவது நான் தலைவியையும் அவளது அணிகலன்களோடு கூடிய மார்பினையும் அடைவேன் எனத் தலைமகன் கூறியதை,

நாள் நாகம் நாறும் நனைகுழலாள் நல்கித்தன்
பூண் ஆகம் நேர்வளவும் போகாது – பூணாகம்
என்றேன்; இரண்டாவ(து) உண்டோ? மடல்மேல்
நின்றேன் மறுகிடையே நேர்ந்து[84]

என்ற பாடல் நவில்கின்றது.

இத்துறையை ஆராயும்போது, சங்க நூற்களில் இடம்பெறும் இம்மடலூர்தலை, கீழ்க்கணக்கு அகநூல் ஆசிரியர்களும் கையாண்டுள்ளனர். இதனால் இவர்கள் சங்க இலக்கிய அறிவும் பயிற்சியும் நிரம்பப் பெற்றவர்கள் எனத் துணிய முடிகிறது.

சங்க அகப்பா வடிவின்றும் வேறுபட்டு புதிய இலக்கிய வகையாகக் கீழ்க்கணக்கு நூற்கள் தோன்றினாலும், சங்க அகப்பா களவியல் துறையமைப்பினின்று விலகாது செல்வாக்குற்றதை மேற்கண்டவாறு அறியலாம்.

## கற்பியல்

### கற்பு

கற்பு என்பது பெண்களுக்குரியது என்று இன்று கருதப்படுகின்றது. சங்க காலம் முதல் இன்றுவரை கற்புக்குப் பலர் பல விளக்கங்களைத் தந்துள்ளனர். கற்பு என்றால் என்ன? என்பதற்கு எங்கோ பிறந்த ஆடவனும் எங்கோ பிறந்த பெண்ணும் கணவனும் மனைவியுமாக வாழ்வதற்கு உள்ளம் ஒன்றிக் கற்பித்துக் கொள்ளுதலினால் கற்பு எனப்பட்டது என்று சி. இலக்குவனார் கற்புக்கு இலக்கணம் கூறியுள்ளார்.[85] கற்பு என்பது,

இருமுது குரவர்கள் தம் பெண்ணை
மணஞ்செய்து கொடுங்குங்கால் கொண்டானிற்
சிறந்த தெய்வம் இன்றெனவும், அவனை
இன்னவாறு வழிபடுக எனவும் அவற்கு
இன்னவாறு குற்றேவல் செய்தொகுழுகவெனவும்
தம் பெண்ணிற்குக் கற்பிப்பர்

இதுவே கற்பாகும் என்று வன்மீகநாதன் கற்பித்துள்ளார்.[86] இவை எல்லாவற்றிற்கும் மேலாகத் தொல்காப்பியர் கற்புக்குத் தனி இலக்கணம் வரையறுத்துள்ளார். தாமே எதிர்ப்பட்டுப் பழகிய தலைமக்கள் இருமுதுகுரவரும் உவப்ப ஊரறிய திருமணம் செய்துகொண்டு வாழ்வதைக் கற்பு வாழ்வெனக் குறிப்பர்.

கற்பெனப்படுவது கரணமொடு புணரக்
கொளற்குரி மரபின் கிழவன் கிழத்தியை
கொடைக்குறி மரபினோர் கொடுப்ப கொள்வதுவே[87]

என்பர் தொல்காப்பியர். தலைமக்களது காதல் பெற்றோரால் மறுக்கப்படும்போது உடனபோக்கு நிகழும். அப்போது பெற்றோரின்றி மணம் நிகழலும் உண்டென்பதை,

கொடுப்போர் இன்றியுங்கரணம் உண்டே
புணர்ந்துடன் போகிய காலையான[88]

என்பார் தொல்காப்பியர்.

'கரணம்' என்ற சொல்லுக்குக் கணக்கு எழுதுவோரைக் குறிப்பதால், எழுதுதலையும் குறித்தாலும். ஆதலின்,

இன்ன ஆடவனுக்கு இன்ன பெண் மனைவி
என்று எழுதிக் கொள்ளும் பழக்கமும்
இருந்திருக்கலாமென்றோ, அவ்வாறு
எழுதியதையே தொல்காப்பியர்
கரணம் என்று குறித்திருக்கலாமன்றோ?
இன்றும் பழங்கால முறைப்படி திருமணம்
கொள்வோர், திருமணத்திற்கு முன்னால்
மணமகன் வீட்டாரும், மணமகள் வீட்டாரும்
மணமகள் வீட்டில் கூடி இவ்வாறு
எழுதி உறுதிப்படுத்திக் கொள்வதைக்
காணலாம். இந்நிகழ்ச்சியை
மணவோலை எழுதுதல் என்றும்
நிச்சயதார்த்தம் என்றும் அழைப்பர்[89]

என்று சி. இலக்குவனார் விளக்கியுள்ளார்.

**மணவாழ்வு**

அகவொழுக்கத்தில் ஏற்பட்ட வாய்மையின்மையால் தலைமக்களது அன்புறவை வரையறுத்துக் கொள்ள ஏற்படுத்தப்பட்ட நிகழ்ச்சியே மணவாழ்வாகும். மணவாழ்வால்தான் கற்பு உறுதி செய்யப்படுகின்றது. திருமணம் செய்து கொள்ளவில்லை என்றால் வாழ்வு நெறியற்றதாகக் கருதப்படுகின்றது.

சங்க காலத்தில் நிகழ்ந்த காரணத்திற்குச் சான்றாக அகநானூற்றுப் பாடலை விளக்கலாம். இவற்றில் பந்தல் அமைப்பு, திருமணமுறை, உணவுமுறை என இன்னபிற செய்திகள் கூறப்பட்டுள்ளன.

**நன்னாள் குறித்தல்**

மணவினை நிகழ்த்துதற்குரிய நல்ல நாளாகத் திங்கள் உரோகினினய கூடிய நாளைத் தேர்ந்து எடுப்பது சங்க கால வழக்கம். இதனை,

புள்ளுப் புணர்ந்தினிய வாகத் தெள்ளொளி
அங்கண் இருவிசும்பு விளங்கத் திங்கள்
சகட மண்டிய துகள்தீர் கூட்டம்[90]

என்னும் அகப்பாட்டு வரிகளால் அறியலாம். இம்மரபைக் காரியாசான் தன்னுடைய சிறுபஞ்சமூலத்தில் ஏற்றுப் போற்றியுள்ளார். அவை, நாள் பொருத்தமும் முழுத்தமும், அவற்றுடன் தோளின் பொருத்தமும், யோகமும் இவற்றால் உண்டாகிற நன்மையும் ஆராய்ந்துஅறிந்து பொருந்திய நாளைப் பெற்றால் நற்செயல்களைச் செய்வோனும், ஒருவன் ஒருத்தியைத் திருமணம் கொள்வோனும் நல்லநாளாகக் கொள்ளவேண்டும் என்பதை,

நாள்கூட்டம் மூர்த்தம் அவற்றோடு நன்றாம் அக்
கோள் கூட்டம் யோகம் குணனுணர்ந்து – தோள்கூட்டல்
உற்றானும் அல்லானும் ஐந்தும் உணர்வானால்
பெற்றால் நாற்கொள்க பெரிது[91]

என்ற வரிகளால் உணரலாம்.

**நாள்பொருத்தம்**

வாரம், திதி, நட்சத்திரம் ஆகியன முழுத்தம் மூன்றே முக்கால் நாழிகை கொண்ட வேளை. அஃதாவது இராகுகாலம், எமகண்டம், குளிகை காலம் போன்றவை.

**கோள்**

ஞாயிறு, திங்கள் முதலான ஒன்பது கோள்கள் யோகம், அமிர்தயோகம், சித்தயோகம், மரணயோகம் போன்றன.

இவைகளை ஆராய்ந்து பார்க்கும்போது காரியாசானின் சங்க நூற்புலமை, சோதிட அறிவும் புலப்படுகின்றது.

**மணமகள் கேட்டல்**

ஆண் வீட்டார் பெண் வீட்டிற்குச் சென்று பெண்கேட்டுத் திருமணம் செய்யும் முறை இருந்ததை,

தண்டுடைக் கையர் வெண்தலைச் சிதலவர்
நன்று நன்றெனும் மாக்களொடு
இன்று பெரிதென்னு மாங்கண தவையே[92]

...றுத் தோழி கூறியவற்றால் அறியலாம்.

இவ்வாறே திணைமாலை நூற்றைம்பதிலும் தலைவியைப் பெண்கேட்டு தலைவன் அனுப்பிய சான்றோர்களது வருகையினை ஏற்றுக் கொண்டவர்களாய், நீர்வார்த்துக் கொடுக்க வேண்டும் என்று நற்றாய் தன் கணவனுக்கும், மகன்களுக்கும் அறத்தொடு நிற்கின்ற செய்தியை,

வாடாத சான்றோர் வரவெதிர் கொண்டிராய்க்
கோடாது நீர் கொடுப்பின்[93]

என இப்பாடல் வரிகள் விளங்குகின்றது.

**மணவிழா பந்தல்**

மணப்பந்தல் போட்டுக் கீழே மணல்பரப்பி மணவிழா அரங்கினை அமைக்கும் மரபு சங்க காலந்தொட்டுத் தொடர்கிறது.

தண்பெரும் பந்தர்த் தருமணல் ஞெமிரி[94]

என அகநானூறு குறித்துள்ளது. இச்செய்திகளைக் கீழ்க்கணக்கு நூல்களிலும் காணமுடிகிறது. கீழ்க்கணக்கு அகநூல்கள் மட்டுமின்றி நீதியைக் கூறும் ஆசாரக் கோவையும் பந்தல் எப்படி இருக்கக் கூடாது என்ற முறையைச் சுட்டுகின்றது. சங்ககால திருமண முறையை முழுமையாகப் பின்பற்றவில்லை என்றாலும், அவ்வப்போது நடந்த திருமணத்திற்கு எவ்வாறு பந்தல் அமைக்கப்பட்டது என்பதை எடுத்தியம்புகின்றது. பந்தலில் வைக்கக்கூடாதப் பொருள்களாக ஆசாரக்கோவை சுட்டுவதை இவண் அறியத்தக்கது.

திருமணப்பந்தலின் கீழ் துடம்பம் (விளக்குமாறு), தூசியுடன் கூடிய செத்தை, பூவின் புறவிதழ், பழங்கரிப்பானை, கிழிந்த கட்டில் ஆகிய இவ்வைந்தையும் பரப்பலாகாது என்பதை,

துடைப்பம் துகள்காடு புல்லித்ழச் செத்தல்
கருங்கலம் கட்டில் கிழிந்ததனோடு ஐந்தும்
பரப்பற்க பந்த ரகத்து[95]

என விளக்குகின்றது.

**தோழிவாயில் மறுத்தது**

தலைவியின் பால் அன்பில்லாத தலைவன் பிரிந்து சென்றான். பின்பு தலைவன்,

தலைவியைக் கூடுவதற்குப் பாணனை வாயிலாக அனுப்பி வைக்கின்றான். அப்பாணனின் வாயிலை மறுத்துத் தோழி மொழிவதாக அமைந்துள்ளது.

யாரினும் இனியன் பேர்அன்பினனே
உள்ளூர்க் குரீஇத் துள்ளுநடைச் சேவல்
சூல்முதிர் பேடைக்கு ஈனில் இழைஇயர்
தேம்பொதிக் கொண்ட தீம்கழைக் கரும்பின்
நாறா வெண்பூக் கொழுதும்
யாணர் ஊரன் பாணன் வாயே[96]

என்றப் பாடலில் ஊர்க்குருவி தன் கருவுற்றப் பெண் பறவையிடம் காட்டும் அன்பும், அருளும் கூறப்பட்டுள்ளன.

இத்துறையைக் கீழ்க்கணக்கு நூல்களும் கையாண்டுள்ளன. அவற்றை,

கடையாயார் நட்போல் காஞ்சிநல் ஊர!
உடைய இளநலம் உண்டாய் – கடையக்
கதிர் முலை ஆகத்துக் கண்ணன்னார் சேரி
எதிர்நலம் ஏற்றுநின் றாய்[97]

என்றப் பாடலால் அறியலாம்.

**தலைமகள், தோழிக்கு வாயில் மறுத்தது**

முன்பு தன்னுடன் கூடியிருந்தது இன்பம் செய்தானாகிய தலைவன் இப்பொழுது பரத்தை ஒழுக்கத்தால் துன்பம் செய்தவனாக மாறிவிட்டான் என்பதை நெருஞ்சியின் பூவையும் முல்லையும் காட்டிக் கூறுகிறாள் தலைவி,

நோம்என் செஞ்சே சோம்என் செஞ்சே
புன்புலத்து அகன்ற சிறியிலை நெடுஞ்சிக்
கட்குஇன் புதுமலர் முட்பபந்தா அங்கு
இனிய செய்தநம் காதலர்
இன்னா செய்தல் நோம்என் நெஞ்சே[98]

என்றுத் தோழிக்கு வாயில் மறுத்துரைத்தாள். இதற்கு அடுத்த பாடலும் இத்துறையின் பாற்பட்டதாகும்.[99]

கீழ்க்கணக்கு அகநூல்களின் ஆசிரியர்களும் இத்துறையைத் தனது நூல்களில் பிரதிபலித்துள்ளனர். அவற்றை,

தன்மகன் தெருவில் விளையாடும் போது தேரில் சென்ற தலைவனைப் பார்த்து விரும்பி நின்றான். அப்போது தலைவன் தேரை நிறுத்தாமல் விரைந்து பரத்தையர்

வீட்டிற்குச் சென்றுவிட்டான். அதனால் தலைவியின் மனமானது தலைவனிடம் இரக்கம் காட்டாது என்று தலைமகள் தோழிக்கு வாயில் மறுத்தாள். இச்செய்தியை,

ஒல்லென்(று) ஒலிக்கும் ஒலிபுனல் ஊரற்கு
வல்வென்ற(து) என்நெஞ்சம் வாட்கண்ணாய் – நில்லென்னா(து)
ஏக்கற்றாங்(கு) என்மகன் தான் நிற்ப என்னானும்
நோக்கான் தேர் ஊர்ந்தது கண்டு[100]

என்று ஐந்திணை ஐம்பது பாடல் வரிகள் சுட்டுகின்றது.

**தோழி வாயில் நேர்வாள் கூறியது**

தோழி தலைமகன் வாயில்களுக்கு உரைத்ததாக அமைந்துள்ளது. இத்துறையை,

தச்சன் செய்த சிறுமா வையம்
ஊர்ந்துஇன் புறாஅர் ஆயினும் கையின்
ஈர்த்துஇன் புறூஉம் இளையோர் போல
உற்றுஇன் புறேஎம் ஆயினும் நற்றேர்ப்
பொய்கை ஊரன் கேண்மை
செய்துஇன் புற்றனெம் செறிந்தன வளையே[101]

என்றக் குறுந்தொகைப் பாடலால் அறியமுடிகிறது.

தோழி வாயிலை ஒப்புக்கொள்ளும் துறை திணைமொழி ஐம்பதில் காணப்படுகின்றன. சங்க இலக்கிய மரபு மாறாமல் இத்துறையில் இடம்பெற்றுள்ளன. இச்செய்தியை,

செந்தாமரை மலரும் செய்வபல் நல்லூர!
நொந்தான் மற்(று) உன்னைச் செய்பபப்படுப(து) என்னுண்டாம்
தந்தாயும் நீயே தரவந்த நன்னலம்
கொண்டாயும் நீ ஆயக்கால்[102]

என்றுக் கூறியுள்ளது.

மேற்கூறிய துறைகள் களவியல், கற்பியல் என்ற இரு பகுதிகளும், கீழ்க்கணக்கு நூல்களிலும், சங்க இலக்கியம் செல்வாக்குப் பெற்றுள்ளதை அறியமுடிகின்றது.

## அடிக்குறிப்புகள்

1. மு. இளமுருகன், தமிழ்ப் பெருங்காப்பியங்களில் சங்க இலக்கியத்தின் செல்வாக்கு, ப. 117

2. தமிழ்ப்பொழில், துணர் 49, மலர் 8

   க.ஆ. இராமசுப்பிரமணியன்,

   க.த. அகத்திணை மரபுகள்

3. தொல், பொருள், அகத் நூ. 52

4. மூன்றாம் கருத்தரங்கு தமிழ் இலக்கிய ஆய்வுக்கோவை, தொகு. - 1

   க.ஆ. இராசண்முகம், க.த. அறத்தொடுநிற்றல் - துறைவிளக்கம், ப. 35

5. சங்க இலக்கியக் கட்டுரைகள் (கருத்தரங்கம்), ப.83

   க.ஆ.இரா. சாரங்கபாணி, க.த. சங்க இலக்கியத்தில் அறிவியல் நோக்கு

6. தமிழண்ணல், சங்க இலக்கிய ஒப்பீடு முதற்பாகம், ப. 26

7. தொ.ஆ.துரை. இராசாராம், பதினெண்கீழ்க்கணக்கு பகுதி - 2, 149

8. இளம், தொல், பொருள், நூ. 269

9. சி. இலக்குவனார், தொல்காப்பிய ஆராய்ச்சி, ப. 160

10. தொல், பொருள், இளம், நூ. 109

11. அகம் - 32, 102, நற் - 388

12. மேலது - 32

13. ஐந் - எழு - 12

14. ஐந் - எழு - 4, 7, 12

15. குறுந் - 1

16. திணைமாலை - 42

17. மேலது - 20

18. குறுந் - 291

19. நற் - 185
20. திணைமாலை - 30
21. மேலது - 60
22. குறுந் - 119
23. திணைமாலை - 32
24. மேலது - 33
25. குறுந் - 113
26. குறுந் - 123, நற் - 187, 188, 223
27. திணைமாலை - 29, 58
28. மேலது - 44
29. குறுந் - 261
30. மேலது - 88
31. ஐந் - எழு - 59, திணைமாலை - 6, 7
32. திணைமாலை - 56
33. குறுந் - 120
34. ஐந் - ஐம் - 41
35. திணைமொழி - 41
36. நற் - 213
37. திணைமாலை - 8
38. நற் - 130, குறுந் - 122, அகம் - 44, 54
39. ஐந் - எழு - 17
40. மேலது - 28
41. மேலது - 15, 16, 18, 19, 20, 21, 22, 23, 24, 25, 26, 27
42. குறுந் - 98, நற் - 197
43. நற் - 326
44. கார் - 27
45. ஐந் - ஐம் - 2, திணைமொழி - 47
46. நற் - 253
47. திணைமாலை - 3
48. இளம், தொல், பொருள், நூ. 24

49. நற் - 326

50. ஐந் - ஐம் - 48

51. ஐந் - எழு - 10

52. திணைமொழி - 42

53. திணைமாலை - 36, 43, 50, 52, திணைமொழி - 44

54. இளம், தொல், பொருள், நூ. 112, 113

55. மு. இளமுருகன், தொல்காப்பியங்களில் சங்க இலக்கியத்தின் செல்பாக்கு, ப. 135

56. குறுந் - 362

57. ஐந் - எழு - 13

58. குறுந் - 260

59. ஐந் - எழு - 40

60. மேலது - 41

61. நற் - 70

62. கைந் - 52

63. ஐந் - ஐம் - 42

64. குறுந் - 396

65. திணைமொழி - 20

66. குறுந் - 239

67. ஐந் - ஐம் - 13

68. அகம் - 87

69. கார் - 24

70. மேலது - 28

71. சி. இலக்குவனார், தொல்காப்பிய ஆராய்ச்சி, ப. 169

72. வ.சு.ப மாணிக்கம், தமிழ்க்காதல், ப. 83

73. குறுந் - 23

74. அகம் - 48: 21 - 22

75. நற் - 207

76. திணைமாலை - 39

77. மேலது - 2

78. மேலது - 15

79. மேலது - 12, 14

80. தொல், பொருள், இளம், நூ. 35

81. குறள் - 1137

82. குறுந் - 182

83. மேலது - 17

84. திணைமாலை - 16

85. சி. இலக்குவனார், தொல்காப்பிய ஆராய்ச்சி, ப. 173

86. வன்மீகநாதன், பண்டைத் தமிழரின் நித்திய வாழ்க்கை, ப. 107

87. தொல், பொருள், இளம், நூ. 140

88. மேலது - 141

89. சி. இலக்குவனார், தொல்காப்பிய ஆராய்ச்சி, ப. 178

90. அகம் - 36: 3 - 5

91. சிறுபஞ் - 44

92. குறுந் - 146

93. திணைமாலை - 15

94. அகம் - 86:3

95. ஆசாகோ - 45

96. குறுந் - 85

97. திணைமொழி - 33

98. குறுந் - 202

99. மேலது - 203

100. ஐந் - ஐம் - 28

101. குறுந் - 61

102. திணைமொழி - 36

# புறத்திணைச் செல்வாக்கு

புறம் என்பது அகம் தவிர்ந்த எல்லாம் புறம் என்று அழைக்கப்பட்டது. புறம் என்பதற்கு,

> எல்லோராலும் ஒருங்கு துய்த்து
> உணரப்படுவதும், இவ்வாறு இருந்ததெனப்
> பிறருக்குக் கூறப்படுவதுமாகிய பொருளைப்
> புறம் என்று கூறுகின்றார் நச்சினார்க்கினியர்.[1]

இவ்வாறு உணரப்படுவதாகிய புறம், வீரம், கொடை முதலியன பற்றிய பாட்டுக்களைப் பெற்று விளங்குகின்றன. சங்க காலத்தில் புறம் பற்றிய செய்திகளைத் தொகுத்துக் கூறும் நூல்கள் பல இருந்தன. அவை புறநூல்கள் என அழைக்கப்பட்டன. எட்டுத்தொகை நூல்களில், பதிற்றுப்பத்து, பரிபாடல், புறநானூறு என்ற மூன்று புறநூல்கள் இருந்தன. பத்துப்பாட்டில் திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, கூத்தராற்றுப்படை என்ற ஐந்தும் ஆற்றுப்படை நூல்களாகும். மதுரைக்காஞ்சி நிலையாமையைக் கூறும் புறப்பாட்டாகும். எஞ்சியவை அகநூல்களாகும். ஆற்றுப்படை, நூல்களில் மன்னர்களின் வீரம், கொடைச் சிறப்பு, நாட்டுச் சிறப்பு போன்ற பல புறச் செய்திகள் காணப்படுகின்றன. சங்ககால மக்கள் போரில் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்தனர். அதனால் புறப்பொருள் பற்றிய பாட்டுக்கள் போர் நிகழ்ச்சிகள் பற்றியனவாகவே அமைந்தன. அவற்றை,

தொல்காப்பியர் காலத்தில் வாழ்க்கையில்
நிகழ்ந்தவற்றை நிகழ்த்தவாறே கூறாமல்
மக்களின் நடைமுறை ஒழுக்கங்களையும்
ஆய்ந்து அவற்றை அடிப்படையாகக் கொண்டு
இலக்கியங்கள் படைத்தனர்[2]

என்று எம். நாராயண வேலுப்பிள்ளை கூறியுள்ளார்.

**திணைப் பெயர்கள்**

வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, உழிஞை, நொஞ்சி, தும்பை, வாகை, பாடாண் என்று பூக்களின் பெயர்களையே புறத்திணைக்குத் தொல்காப்பியர் குறித்துள்ளார்.[3]

**சங்கப் புறப்பாடல்களில் இடம் பெற்றுள்ள துறைகள்**

சங்க காலத்துப் புறநூல்களில் திணைகளையும், அவற்றின் துறைகளையும் அடிப்படையாகக் கொண்டு பாடல்கள் இயற்றப்பட்டன. அவைகளாவன,

அரசவாகை, ஆனந்தப்பையுள், இயன்மொழி,
உடனிலை, உண்டாட்டு, உவகைக் கலுழ்ச்சி,
எருமை மறம், ஏர்க்களவுருவகம், ஏறாண்முல்லை,
கடவுள் வாழ்த்து, கடைநிலை, கடைநிலைவிடை,
களிற்றுனிலை, குடிநிலையுரைத்தல், குடைமங்களல்,
குதிரை மறம், குறுங்கலி, கையறுநிலை,
கொற்றவள்ளை, செருமலைதல், செருவிடைவீழ்தல்,
செவியறிவுறூஉ, தலைத்தோற்றம், தாபதநிலை,
தாபதவாகை, தானைநிலை, தானைமறம்,
துணைவஞ்சி, தொகை நிலை, நல்லிசை வஞ்சி,
நிண்மொழி, நூலிலாட்டு, நெடுமொழி,
பரிசில் கடாநிலை, பரிசில் விடை, பரிசில் துறை,
பழிச்சுதல், பாண்பாட்டு, பாணாற்றுப்படை,
பார்ப்பணவாககை, பிள்ளைப்பெயர்ச்சி, புலவராற்றுப்
படை, பூக்கோட்காஞ்சி, பூவைநிலை, பெருஞ்காஞ்சி,
பெருஞ்சோற்றுநிலை, பேய்க்காஞ்சி, பொண்மொழிக்
காஞ்சி, மகட்பாற்காஞ்சி, மகண்மறுத்தல், மழபுல வஞ்சி,
மறக்களவழி, மறக்கள வேள்வி, மனையறந்துறவறம், முதல் வஞ்சி,
முதுபாலை, முதுமொழிக்காஞ்சி, முதின் வஞ்சி,
முதுபாலை, வஞ்சினக் காஞ்சி, வல்லாண்முல்லை, வாண்
மங்கலம், வாழ்த்தியல் வாழ்த்து, விறலியாற்றுப்படை
வேத்தியல்[4]

என வரும் திணைகளையும், துறைகளையும் புறநானூறு சாமிநாதையர் பதிப்பு, முன்னுரையில் விளக்கியவற்றான் அறியப்படுகிறது.

மேற்குறிப்பிட்டுள்ள சங்க புறத்திணைகளிலும், துறைகளிலும் மறக்களவழி என்ற ஒரு துறை மட்டுமே கீழ்க்கணக்கு நூலாகிய களவழி நாற்பதில் இடம் பெற்றுள்ளன.

இக்களவழி நாற்பது என்னும் புறநூலில் நாற்பது பாடல்கள் மட்டுமே பாடப்பட்டுள்ளன. இக்கருத்துக்களை ஒப்பிட்டு ஆராயும்போது, கீழ்க்கணக்கு நூல்களில் சங்க புறத்திணை குறைந்த அளவே செல்வாக்குப் பெற்றுள்ளன. அவற்றிற்கான காரணங்கள் இவண் ஆராயப்படுகிறது.

சங்ககால மக்களும், மன்னர்களும் போர் செய்வதை வீரமென்று கருதினர். போரால் ஏற்பட்ட அழிவுகளைப் புறநானூற்றுச் செய்யுட்கள் எடுத்துரைக்கின்றன. புறநானூற்றுப் போர்கள் பெரும்பாலானவை நிலஎல்லை விரிவிற்கும், எல்லையை எதிரிகளிடமிருந்து பாதுகாக்கவும் நடந்தன. போரில் புறப்புண் நாணி தாய்நாட்டைக் காப்பவனே வீரனென்று போற்றப்பட்டான். போர்க்களங்களில் வீரர்கள் கொல்லப்பட்டு இறந்து கிடப்பதைப் புறநானூற்று பாடல்கல் கூறுகின்றன. போர் காரணமாக மன்னரும் படைவீரரும் மாண்டனர். இக்காரணங்களால் மகளிர் பலர் விதவைகளானார்கள் என்பர்.[5] இக்கொடுமைகளால் மக்களின் மனம் அமைதியை நாடியது. நீதியை விரும்பி வரவேற்றது. இக்காலத்தில் எழுந்த இலக்கியங்கள் மக்களின் தேவைக்கு ஏற்ப நீதிக் கருத்துக்களைப் பரப்பின. நீதியை நிலைநாட்டுவதற்கு என்றே பல நூல்கள் எழுதப்பட்டதால் இதனை நீதிநூல் காலம் என்றழைத்தனர். மேலும் இந்நீதி நூல்களின் நோக்கை ஆராயும்போது,

> சங்க கால வாழ்க்கைமுறையிற் காணப்பட்ட
> குறைபாடுகளால் மனம் நொந்த மக்களுக்கு
> வேறு வாழ்க்கை முறை தேவைப்பட்டது
> பொறியாலும், புலனாலும், கவர்ச்சியுற்று காதல்
> வாழ்க்கை, வீர வாழ்க்கைகளில் ஊக்கம்,
> மேலிட்டு நின்று வாழ்ந்தனர். அவ்வாழ்க்கையிலே
> துன்பத்தைக் கண்ட தமிழ் மக்கள் கட்டுப்
> பாடுகள் நிறைந்த வாழ்க்கையையும்
> ஒழுக்கத்தையும் அளாவினர்[6]

என்று ஆ. வேலுப்பிள்ளை குறித்துள்ளார்.

இக்காரணங்களால் நீதிநூல்களாகிய கீழ்க்கணக்கு நூல்களில் புறநூல்கள் அதிக இடம்பெறவில்லையோ என ஐயுறத் தோன்றுகிறது. மேலும் இவ்வீர யுகப்பாடல்களைப்

போற்றிய வீரயுகம் தமிழில், தமிழ்நாட்டில் மட்டுமின்றி உலகெல்லாம் நிகழ்ச்சி நிகழ்ந்துள்ளன. அதனால்தான் உலக மக்கள் அனைவரும் அறத்தை விரும்பினார்கள். இதனடிப்படையில் ஆராயும்போது வீரயுகப் பாடல்களைத் தொடர்ந்து அறநெறிப் பாடல்கள் ஏற்றம் பெற்றன என்பதை,

> உலக இலக்கியங்கள் அனைத்தையும்
> நோக்கும்போது வீரயுகப் பாடல்களைத்
> தொடர்ந்து அறநெறிப் பாடல்கள் அதிக
> அளவில் ஏற்றம் பெருவதை எங்கும் காண
> முடிகிறது. அறநெறி இலக்கியங்கள் ஆதிக்கம்
> பெற்ற இக்காலக் கூட்டத்தில் போர்ச்சிறப்பைப்
> பாடும் களவழி நாற்பது போன்ற நூல்களும்,
> காதலின் மாட்சியைப் பாடும் திணைமாலை
> நூற்றைம்பது போன்ற நூல்களும்,
> தோன்றாமல் இல்லை. இருப்பினும் இக்காலத்தில்
> அறநெறிப் பாடல்களே தலைமையிடம்
> வகுக்கின்றன[7]

என்பது தெளிவு.

இக்காலத்தில் போர் சிறப்பைப் பாடும் களவழி நாற்பது தோன்றினாலும் நீதிக் கருத்துக்களுக்கே முதலிடம் கொடுக்கப்பட்டது. இதனால் போர் பற்றிய நூல்களும் செய்திகளும் சங்க இலக்கியச் செல்வாக்கைக் குறைந்தளவே பெற்றுள்ளன. அவ்வாறு செல்வாக்குப் பெற்ற செய்திகளை இவண் ஒப்பிட்டு ஆய்வது சிறந்தது.

சங்க காலத்தில் நிகழுற்ற வகைகளில் களவழி நாற்பதில் காண முடிகிறது.

**சிங்கம்**

மன்னர்களின் வீரத்தைக் குறிப்பிடும்போது சிங்கத்திற்கு ஒப்பிடுவது வழக்கமாக இருந்தது. பட்டினப்பாலையில் திருமாவளவனின் வீரத்தை, உருத்திரங்கண்ணனார் சிங்கத்திற்கு உவமையாக எடுத்துரைத்திருக்கிறார். அவை,

> அரிமா அன்ன அணங்குடைத் துப்பின்
> திருமா வளவன்[8]

என சிங்கத்தை யொத்த பகைவரை வருத்துதலுடைய வலிமையை உடையவன் என்றார்.

இவ்வீரத்தைப் பற்றிய கருத்து, சோழன், செங்கணானின் வீரத்தைக் கூறும்போது பொய்கையார்,

செவ்வரைச் சென்னி அரிமானோடு அவ்வரை
ஒல்கி உருமிற்கு உடைந்தற்றால்[9]

என யானைப்போர் செய்வதை எடுத்துரைத்துள்ளார்.

**யானைப்போர்**

பதிற்றுப்பத்தில் களவழி என்னும் துறையில் அமைந்த பாடல், களவழி நாற்பதில் செல்வாக்கை ஏற்படுத்தியுள்ளன. களவழியாவது போர்க்கள நிகழ்ச்சிகளை வியந்து கூறி வாழ்த்துதல் என்பர். இத்துறையில் அமைந்த பாடல் போர்க்கள அமைப்பு, யானையின் வீரம், யானையின் உறுப்புகள் துண்டிக்கப்படுவது, பிணக்குவியலின் நிலை போன்ற செய்திகளைக் குறிப்பிடுகின்றன.

**பனங்காடு**

வளமான நெஞ்சுரத்தோடு பகைவரைப் போரில் எதிர்கொள்ளும் காட்சியை, களிறுகள் பலவற்றின் துதிக்கைகள் துண்டிக்கப்பட்டு வீழ்ந்ததனை

பனைத்தடி புலத்தின், கைத்தடி பலவுடன்
யானை பட்ட[10]

என்றுக் கூறியுள்ளார்.

களவழி நாற்பதில் பகைவரின் தலைகள் போர்க்களத்தில் உருளும் காட்சி,

பைந்தலை பாரில் புரள்பவை நன் கெனைத்தும்
பெண்ணையந் தோட்டம் பெருவளி புக்கற்றே
..........................................................................
நண்ணாரை அட்டகளத்து[11]

எனச் சித்தரிக்கப்பட்டுள்ளன.

**குருதிப்புனல்**

பிணங்கள் வெட்டப்பட்டதால் அவற்றிலிருந்து பாயும் குருதியைச் செம்புனல் ஆற்றொழுக்கைப் போல் பாய்ந்து சென்றனர் என்று வருணிக்கிறது. அவற்றை,

குருதிச் செம்புனல் ஒழுகச்
செருப்பல செய்குவை[12]

எனப் பதிற்றுப்பத்து விளக்கியுள்ளது. குருதி பாயும் போர்க்களத்தைப் பொய்கையார்

போர்க்களத்தின் உள்ளே யானைகளின் இரத்தம் அவற்றின் கீழ்க்கிடக்கும் முரசின் வழியே வெளி வருவது, பொருத்து பெய்த மழை உடன் செங்குளத்தின் நீர் தூம்பு வழிச் செய்தலை ஒத்துள்ளது என்பதை,

ஞாட்பினுள் எஞ்சிய ஞாலம் சேர் யானைக்கீழ்க்
போர்ப்பு இல் இடிமுரசின் ஊடுபோம் – ஒண்குருதி
கார்பெயல் பெய்த பின் செங்குளக் கோட்டுக் கீழ்
நீர்த்தூம்பு நீருமிழ்வ போன்ற'[13]

எனக் குறிப்பிட்டுள்ளார். மேலும் மழைநீர் மலைகளை மடக்கியும், தேக்கியும், உருட்டியும் வருவதுபோல இரத்த வெள்ளம் யானைகளை இழுத்துச் சென்றது என்பதை,

மடங்க எறிந்து மலையுருட்டு நீர்போல்
தடங்கொண்ட ஒண்குருதி சொல்களி(று) ஈர்க்கும்
மடங்கா மறமொய்ம்பின் செங்கண் சினமால் அடங்காரை
அட்ட களத்து[14]

என்றக் களவழியால் உணரமுடிகிறது.

**கழுகும் பிணமும்**

வாட்கள் ஒன்றோடு ஒன்று கலந்து முன்னணிப் படைப் போரிலேயே வீரர்களும், யானைகளும் பிணங்களாக வீழ்ந்து கிடக்கின்றன. வீழ்ந்த பிணங்களை உண்ணும்பொருட்டு, பொறித்து வைத்தாற்போன்ற புள்ளிகளையுடைய கழுத்தினையும், புல்லிய மேற்புறத்தினையுமுடைய கழுகினது பெட்டைகளோடு எழாஅல் என்னும் பறவைகளோடு சேர்ந்து உண்டன. இக்கருத்தை,

யானைப்பட்ட வாண்மயங்கு கடுந்தார்
மாவும் மாக்களும் படுபிணம் உணீஇயர்
பொறித்த போலும் புள்ளி எருத்திற்
பின்புற எருவைப் பெடைபுணர் சேவல்
குடுமீ எழா அலொடு கொண்டு கிழக்கு இழிய[15]

எனப் பதிற்றுப்பத்து எடுத்துரைக்கிறது. பதிற்றுப்பத்தில் இடம்பெறும் இப்போர்கள் களக்காட்சியைப் பொய்கையார் பின்பற்றிப் படைத்திருப்பதை அறியமுடிகிறது.

போர்க்களத்தில் கழுகுகள் சிறகைப் பரப்பிக் கொண்டு, இரத்தத்தோடு பிணங்களைத் தின்னும் காட்சி முழவு வாசிப்பவனை ஒத்திருக்கிறது என்பதை,

இருசிறகர் ஈர்க்கு பரப்பி, எருவை
குருதி பிணம் கவரும் தோற்றம் – அதிர் விலாச்

கீர் முழாப் பண் அமைப்பான் போன்ற புனல்நாடன்
நேராரை அட்ட களத்து[16]

என்றுக் களவழி விளக்குகிறது.

மேலும் வீரர் வெட்டிய கைகளைப் பருந்துகள் தூக்கிச் செல்லும் காட்சி, பாம்புகளைக் கருடன் கவ்விக் கொண்டு பறப்பதை ஒத்திருக்கிறது. இக்கருத்து,

எவ்வாயும் ஓடி வயவர் துணித்திட்ட,
கைவாயில் கொண்டெழுத்து செஞ்செவிப் புன்சேவல்
ஐவாய விடநாகம் கவ்வி விசும்(பி) இவரும் செவ்வாய்
உவணத்தில் தோன்றும், புனல் நாடன்
தெவ்வரை அட்டகளத்து[17]

என்றுக் களவழியில் தாக்கம் ஏற்பட்டுள்ளது.

அறமேவிய நீதி நூற்காலத்தில் சிற்சில போர்கள் நிகழுற்றபோதும், சங்க புறத்திணை மரபைப் போற்றி ஏற்றுள்ளனர் என்பதை மேற்கண்டவாறு துணியலாம்.

## அடிக்குறிப்புகள்

1. தொல், பொருள், நச்சி, ப. 1
2. எம். நாராயணவேலுப்பிள்ளை, சங்க இலக்கியம் வழங்கும் பத்துப்பாட்டு, ப. 18
3. தொல், பொருள், புறத்திணை
4. புறநானூறு மூலமும் உரையும், உ.வே.ச. பதிப்பு, ப. 2
5. ஆ. வேலுப்பிள்ளை, தமிழ் இலக்கியங்களில் காலமும் கருத்தும்
6. மேலது, ப. 40
7. ஜி. ஜான் சாமுவேல், இலக்கிய ஒப்பாய்வுக் களங்கள், ப. 25
8. பட்டினப் - 298 - 99
9. களவழி - 35
10. பதிற் - 36: 6 - 7
11. களவழி - 24
12. பதிற் - 36: 13 - 14
13. களவழி - 2
14. மேலது - 30
15. பதிற் - 36: 6 - 10
16. களவழி - 20
17. மேலது - 26

## வாழ்வியல் செல்வாக்கு

மனிதர்களின் வாழ்க்கையைப் பற்றிக் கூறுவது வாழ்வியலாகும். மக்களின் அன்றாட வாழ்வில் சந்திக்கும் ஒவ்வொரு நிகழ்ச்சிகளும் வாழ்வியலுக்குள் அடங்கும். மக்களின் பழக்கவழக்கங்களும், பண்பாட்டுக் கூறுகளும் வாழ்வியலின் அடிப்படை அம்சங்களாக அமைந்துள்ளன. மனிதகுல வாழ்க்கையே இலக்கியங்களுக்குத் தேவையான பாடுபொருளைத் தருகிறது. இக்கருத்தை,

> இலக்கியத்திற்கும், வாழ்க்கைக்கும்,
> மிகவும் நெருக்கமான தொடர்பு இருந்து
> வருகிறது. இலக்கியம் மக்களின் வாழ்க்கையில்
> மலர்கிறது. உண்மை இலக்கியத்தின் பாடுபொருளாக
> இலக்கியத்திற்குத் தேவையான பாடுபொருளைத்
> தருகிறது[1]

என அ.ச. ஞானசம்பந்தன் கூறியுள்ளார்.

இக்கருத்தை உளங்கொண்டு ஆராயும்போது, சங்க கால இலக்கியங்களில் காணப்படும் வாழ்வியல் கோட்பாடுகள் கீழ்க்கணக்கு நூல்களில் வாழ்வியல் அறமாகப் போற்றப்பட்டுள்ளது. எனவே தன் முன்னோர் கருத்தைக் கீழ்க்கணக்கு நூல்கள் உளங்கொண்டுள்ளன என்பதை உணரமுடிகிறது.

மக்களிடம் பலவிதமான பழக்கவழக்கங்கள் இருந்து வந்துள்ளன. பழக்கவழக்கம் என்பது தொன்றுதொட்டு வழங்கிவரும் மரபாகும்.[2]

இவ்வடிப்படையில் ஒப்பிடும்போது,

1. நாளும் கோளும்

2. பண்டிகையும், விழாவும்

3. திருமணம்

4. குழந்தைப்பேறு

5. விருந்தோம்பல்

6. நம்பிக்கை

    1. நிமித்தம் பார்த்தல்

    2. பேய்ப்பற்றிய கருத்து

7. தொழில்

8. வணிகம்

எனவரும் எல்லா நிலைகளிலும் கீழ்க்கணக்கு நூல்கள் சங்க இலக்கியச் செல்வாக்குப் பெற்றிருப்பதை உணரமுடிகிறது. வாழ்வியல் செல்வாக்கைப் பற்றிய கருத்துக்கள் வருமாறு,

**1. நாளும் கோளும்**

**சங்க காலம்**

சங்ககால மக்களிடம் நல்ல நாள், கெட்ட நாள் பார்க்கும் வழக்கம் இருந்திருக்கிறது. இப்பழக்கம், காதலன், காதலியர் சந்திக்கும்போதும், வெளியில் செல்லும்போதும், நல்ல செயல்களைச் செய்யத் தொடங்கும்போதும், மன்னனிடம் பரிசில் பெற விழையும் புலவர்களும் நல்ல நாள் பார்த்தே சென்றனர். அவை,

நாளன்று போகிப் புள்ளிடைத் தட்பப்
பதனன்று புக்குத் திறனன்று மொழியினும்,
வறிது பெயர்க்குநர் அல்லர்[3]

என புறநானூறு கூறியுள்ளது. நாளும் நல்லநாள் இல்லை, புள்நிமித்தமும் தீதாகத் தோன்றுகிறது. எனவே இது மன்னனைச் சந்திக்கும் சமயமும் அன்று எனக் கூறப்பட்டது.

வானத்திலிருந்து ஓர் எரி நட்சத்திரம் கீழ்நோக்கி வீழ்ந்தது கண்ட இரவலர்கள் அஞ்சினார்கள். மன்னன் நோயுறாமல் இருக்க வேண்டுமென வேண்டிக் கொண்டார்கள். ஆனால் அவர்கள் அஞ்சிய ஏழாவது நாள் மன்னனின் வாழ் நாள் முடிந்ததாகக் கூறுகின்றனர். இக்கருத்தை,

ஆடுஇயல் அழல் குட்டத்து
ஓர் இருள் அரை இரவில்
முடப் பனையத்து வேர் முதலாக்
..............................................
தலைநாண்மீன் நிலைதிரிய
நிலை நாண்மீன் அதன் எதிர் ஏர்தரத்
தொல் நாண் மீன் துறைபடிய[4]

என்றப் புறநானூற்று வரிகளால் உணரலாம்.

மைம்மீன் புகையினும் தூமம் தோன்றினும்
தென்திசை மருங்கின் வெள்ளி ஆடினும்[5]

(புறம் - 55) எனப் பல இடங்களில் வந்துள்ளன. இச்செய்தி அகத்திணை இலக்கியமாகிய அகநானூறு,

அறுமீன் சேறும் அகல் இருள் நடுநாள்[6]

எனக் கூறுகிறது.

**கீழ்க்கணக்கு**

ஆசாரக்கோவையில் சற்று மாறுதலாக வந்துள்ளன. அதாவது, ஒருவர் புறப்பட்டுச் செல்லும்போது பின்னே நின்று அழைக்கக் கூடாது, தும்மக் கூடாது, மறந்தும் எங்கு செல்கிறீர்கள் என கேட்கக் கூடாது, வெளியில் செல்வோர் முன்பு நிற்கக் கூடாது என நேரம் பார்த்து, அனுப்பி வைப்பார்கள். ஏனெனில் செல்லும் செயல் நல்லபடியாக முடிவதற்கு இத்தனைப் பழக்கங்களையும் கையாண்டுள்ளனர். இதனை நோக்கும்போது தாய் இலக்கியச் செல்வாக்கு சேயிடம் தாக்கம் பெற்றுள்ளதை அறிய முடிகிறது. இதனை விளக்கும் பாடல் வரிகள்,

எழுச்சிக்கண் பின் கூவார் தும்மார் வழுக்கியும்
எங்குற்றுச் சேறீரோ என்னாரே முன்புக்(கு)
எதிர் முகமா நின்று உரையார் இரு சார்பும்
கொள்வர் குரவர் வலம்[7]

எனச் சுட்டி நிற்கின்றன.

அட்டமியும் ஏனை உவாவும் பதினான்கும்[8]

எனக் கோள்கள் பற்றிய கருத்துச் செல்வாக்குப் பெற்றுள்ளது.

**விழாக்கள்**

உழைப்பால் அயர்வுற்ற மக்கள், அயர்வைத் தனித்துக் கொள்ளவும், பொழுதுபோக்கிற்காகவும், காலங்காலமாக விழாக்களைக் கொண்டாடி இன்புற்றனர். இவ்விழாக் கொண்டாட்டத்தை அகத்திணை இலக்கியங்கள் நவில்கிறது.

**கார்த்திகைத் திருவிழா**

தோழி நான் சொல்வதனைக் கேள், நீ வாழ்வாயாக? இரவு தோறும், கனாவும் மிக்க இனிய வாகின்றன. நனவிடத்தும் சித்திரத் தொழிலினால் அலங்கரிக்க இல்லத்தில் புள் நிமித்தம் நல்ல இடத்தில் உண்டாகின்றன. அதனால் சந்திரன் நிறைந்தவனாகி, உரோகினி தன்னுடன் சேரும் இருள்கன்று நடுஇரவில் அதாவது திருக்கார்த்திகைத் திருவிழா நாளின் இரவில் விளக்கு வைப்பாயாக எனக் கூறுகிறாள். இவற்றை,

அறுமீன் சேறும் அகல் இருள் நடுநாள்
மது விளக்குறுத்து, மாலை தூக்கிப்
பழவிறல் மூதூர்ப் பலருடன் துவன்றிய
விழவு உடன் அயர வருகதில் அம்ம[9]

என்ற பாடல் வரிகள் கூறுகின்றன.

கலித்தொகையில் (59) தை நீராடல் சிறப்பாகக் கூறப்பட்டுள்ளன.10 இக்கருத்தைக் கீழ்க்கணக்கு நூல்களில் காண்பது பொருத்தமாகும்.

**களவழி நாற்பது**

ஆரவாரத்தோடு தோன்றும் போர்க்கலத்தில் வீரர்கள் எதிர் எதிர்ச் சென்று போரிடும் காட்சி, கார்த்திகை விழாவில் மிகுதியான விளக்குகளை வரிசையாக ஏற்றிவைத்தது போல் இருந்ததெனக் கூறுகையில்,

கார்த்திகைச் சாற்றில் கழி விளக்கைப் போன்றனவே[11]

எனக் கூறப்பட்டுள்ளது. இதன்மூலம் கார்த்திகை நாளில் நிரைநிரையான விளக்கு வைத்து விழாக்கோலம் கொண்டாடும் வழக்கம் இக்காலத்திலும் இருந்தது என்பதை இச்செய்யுள் விளக்குகிறது.

**திருமணம்**

திருமணம் எவ்வாறு நடக்க வேண்டும் என்ற நியதியை அகநானூறு கூறுகின்றது. தீய கோள்களின் தொடர்புநீங்கிய நாளில் மங்கல சடங்குகளைச் செய்து மக்கள மகளிர்கள் கூறியிருந்தனர் எனத் திருமணத்தின்போது செய்ய வேண்டியவைப் பற்றிக் கூறப்பட்டுள்ளன. தீய கோள்களைப் பற்றிக் கூறுவதால் செய்யத் தகாதவையும் எடுத்தியம்பப்படுகிறது.

உழுந்து தலைப் பெய்த கொழுங்களிமிதவை
பெருஞ்சோற்று அமலை நிற்ப, நிரைகால்
தண்பெரும் பந்தர்த் தருமணல் ஞெமிரி
மனைவிளக் குறுத்து, மாலை தொடரிக்
கனை இருள் அகன்ற கவின் பெறு காலைக்
கோள்கால் நீங்கிய கொடுவண் திங்கள்12

என்ற பாடல் வரிகளால் உணரமுடிகிறது.

**ஆசாரக்கோவை**

ஆசாரக்கோவையில் திருமணத்தின்போது என்னென்ன செய்யக்கூடாது என்பதை தெளிவாக விளக்குகிறது. இவை,

துடைப்பம் துகள்காடு புல்லிதழ்ச் செத்தல்
கருங்கலம் கட்டில் கிழிந்ததனோடு ஐந்தும்
பரப்பற்க பந்த ரகத்து[13]

எனத் திருமணப்பந்தலின் கீழ் துடைப்பம் (விளக்குமாறு) தூசியுடன் கூடிய செத்தை, பூவின் புறவிதழ், பழங்கரிப்பானை, கிழிந்த கட்டில் ஆகிய இவையனைத்தையும் பரப்பலாகாது எனக் கூறுகிறது.

இக்கருத்துக்களை உளங்கொண்டு, பார்க்கும்போது மணவிழா மாண்புடைச் செயலாகச் சங்கப் புலவர்கள் கருதியவாறே ஆசாரக்கோவையும் போற்றியதைக் காணலாம்.

**குழந்தைப்பேறு**

மனிதகுலம் தொடர, தழைக்க குழந்தைப் பிறப்பு இன்றியமையாதவையாகும். குழந்தை இல்லை என்றால் தன் வாழ்நாள் பயனற்றதாகக் கருதப்படுகிறது.

பலவற்றையும் படைத்துப் பலரோடும் 'அமர்ந்து உண்ணும் உடைமை' எனப்படும் பெருஞ் செல்வம் பெற்றவராயினும் 'குழந்தை இல்லை' என்றால் அவர்களது வாழ்நாள் பொருளற்றவையாக இலக்கியங்கள் (புறநா - 188) கூறுகின்றன.

குழந்தைகளின் தளர்நடையைக் குறிப்பிடும்போது, அந்நடையைத் தேருருட்டும்போதுக் காண்பது இன்பத்தைத் தருகிறது என்பதை,

தளர்நடை காண்டலினிது[14]

எனக் கலித்தொகையும் (கலி - 81: 12 - 13)

தேரொடு தளர்நடைப் புதல்வனை யுள்ளி[15]

என்றும்,

சிறுதேருருட்டுந் தளர்நடை[16]

என்றும் ஐங்குறுநூறு நவில்கிறது.

இக்காட்சியை இனியவை நாற்பதில்,

குழவி தளர் நடையைக் காண்டலினிதே
அவர் மழலைக் கேட்டல் அமிழ்தினும் இனிதே[17]

என அமிழ்தினுமினிய தன்மை சுட்டப்படுகிறது. இதனை முதுமொழிக்காஞ்சி (51) குறிப்பிடுகிறது.

மன்னர்கள் தன்னைத் தேடிவந்தவர்களுக்கு விருந்தளித்து மகிழ்ந்தனர். மன்னர் இல்லாதபோது அவரது துணைவி தன்னிடமுள்ளது சிறியதாயினும் கொடுத்து மகிழ்ந்தாள் என்ற கருத்துக் கூறப்பட்டுள்ளன. அவை,

புல்லென் மாலைச் சிறுதீ ஞெலியும்,
கல்லா விடையுன் போலக் குறிப்பின்
இல்லது படைக்கவும் வல்லன்: உள்ளது
தவச்சிறிதாயினும் மிகப்பலர் என்னாள்
நீள் நெடும் பந்தர் ஊண்முறை ஊட்டும்[18]

என்ற வரிகளால் அறியலாம்.

சிறுபாணாற்றுப்படையிலும், விருந்தோம்பல் பண்பு பேசப்பட்டுள்ளன. பீமனின் சமையல் நூல் நெறியில் மாறாமல் சமைத்த பல்வேறு சுவையுடைய அடிசிலை

பொன்னால் செய்த உண்களத்தில் தன்னைக் காண வந்தவர்களுக்குத் தானே கொடுத்தான் என்ற செய்தி கூறப்பட்டுள்ளது.

பனிவரை மார்பன் பயந்த நுண்பொருட்
பனுவலின் வழா அப் பல்வேறு அடிசில்
வாணிற விசும்பிற் கோண்மீன் சூழ்ந்த
இளங்கதிர் ஞாயிறு உள்ளுந் தோற்றத்து
விளங்கு பொற் கலத்தில் விரும்புவன பேணி
ஆனா விருப்பின் தான் நின்றூட்டி[19]

என்பவனவாகும்.

விருந்தோம்பல் பண்பு நற்றிணையில்,

எமக்க வருகதில் விருந்தே[20]

என வந்துள்ளது.

**கீழ்க்கணக்கு நூல்களில் விருந்தோம்பல் செல்வாக்கு**

விருந்தோம்பல் பற்றிய பண்பு திரிகடுகம், ஏலாதி, ஆசாரக்கோவை, இனியவை நாற்பது போன்ற கீழ்க்கணக்கு நூல்களில் அதிக அளவு இடம் பெற்றுள்ளன.

விருந்தினர் பசித்திருக்க தான் மட்டும உண்ணாமல் அவர்களுக்கும் கொடுத்துவிட்டு உண்பவன் பிறர்க்கு உதவி செய்பவனாவான்.

வேளாளன் என்பன் விருந்திருக்க உண்ணாதான்[21]
விருந்தஞ்சும் ஈர்வளையை இல்லத்(து) இருத்தலும்[22]

என்றும்,

நல்விருந்தோம்பலின் நட்டானாம்[23]

எனவும் திரிகடுகம் கூறுகிறது.

விருந்தினர்களை முகமலர்ச்சியோடு வரவேற்று விருந்தளிக்க வேண்டும்[24]

என ஆசாரக்கோவை கூறுகிறது.

சிறுபஞ்சமூலம் சுற்றத்தினர் பயந்து ஒதுங்காமல் தம்மை விரும்பும்படி தழுவிக் கொள்ளுதல் விருந்தோம்பல் என்று கூறியுள்ளது.

சுற்றம் வெறுவாமை வீழ்ந்து விருந்தோம்பி[25]

என்றும், விருந்தினரைப் போற்றுதலை 'பேணடக்கம்'[26] என்றும் சிறுபஞ்சமூலம் கூறுகிறது.

இவற்றை நோக்கும்போது விருந்தோம்பல் பண்பாடு தமிழகத்தில் தொடர்ந்து போற்றப்பட்டு வந்துள்ளதை இலக்கியங்கள் பதிவு செய்துள்ளதை அறியமுடிகிறது.

**6. நம்பிக்கை**

**1. நிமித்தம் பார்த்தல்**

பல்லி கத்துதல், இடது கண் துடித்தல் போன்றவை நடந்தால் நன்மை நடக்கும் என நம்பி நிமித்தம் பார்த்தனர். கோழி கூவியது, ஆந்தை அலறியது என்பனவற்றைத் தீய நிமித்தங்களாகக் கொண்டனர். இவ்வாறு மக்கள் பல நம்பிக்கைகளைக் கொண்டிருந்தனர்.

தலைவியைப் பிரிந்து சென்ற தலைவன், கார்காலம் வந்தும் வராமையால் பல சகுனங்களையும் - நிமித்தங்களைத் தலைவியும் தோழியும் பார்க்கின்றனர்.

**நல்நிமித்தங்கள்**

தோழி: நாரைகளும் கரிய வானத்தின்கண் உயரப் பறக்கும் புதலிடத்து உள்ள போதுகளும் கோடுகளையும் உடைய வண்டுகள் ஊதுதலினாலே இதழ்களின் வாய் மலர்ந்தன. சுழித்துச் சங்கினால் செய்யப்பெற்ற வளையினால் விளங்கிய தோள்களும் நெகழ்ச்சி நீங்கி வளையோடு செறியும், அதனால் வரும் தலைவன் வந்துவிடுவார் போலும் என தலைமகட்குத் தோழி கூறியதாக அமைந்துள்ளது. இதனை,

குருகும் இருவிசும்பு இருவரும் புதலும்,
வரிவண்டு ஊத வாய்நெகிழ்ந்தனவே
சுரிவளைப் பொலிந்த தோளும் செற்றும்
வருவர் கொல் வாழிதோழி[27]

என்றுக் குறுந்தொகைக் கூறுகிறது.

குருந்த மரங்களின் மலர்கள் மலர, பெருமைமிக்க ஆண் மான்கள் பெண் மான்களைத் தழுவி இன்பம் அடையக் காடுகள் செழிக்குமாறு கார்மேகம் இடிந்து பெரும் மழை பெய்யலாயிற்று எனக் கூறியதால் தலைவர் வந்து விடுவார் என்று கூறுவதாகக் கொள்ளலாம் என்பதை,

குருந்தலரப்
பீடு ஆர் இரலை பிணைதழுவக் காடாரக்
கார்வானம் வந்த முழங்க[28]

எனக் கைந்நிலை கூறுகிறது.

**நிமித்தங்கள் - பல்லி**

அன்பின் ஐந்திணைகளில் நிமித்தம் பார்க்கும் பழக்கம் இருந்தது. பொருவயிற் பிரிந்து தலைவனின் வரவுக்காகக் காத்திருக்கும் தலைவி பல்லியின் குரலுக்காக காத்திருந்தாள். அவை அகத்தில் மட்டுமன்றி புறத்திலும் விரிச்சிகேட்டல் என்று துறையாக விளங்குகிறது. இதன் தாக்கம் பிற்காலத்திலெழுந்த நூல்களிலும் காணப்படுகிறது.

அரும்பொருட் ககன்ற காதலர் முயக்கெதிர்ந்து
திருந்திழைப் பணைத்தோள் பெருநர் போலும்
நீங்குக மாதோனின் வைலம் ஓங்குமிசை
உயர்புகழ் நல்கி ஒண்சுவர்ப் பொருந்தி,
நய வரு குரல பல்லி
நள்ளென் யாமத்துள்தொறும் படுமே[29]

என்று நற்றிணையிலும்,

ஓங்கிய நல்லி லொருசிறை நிலைஇப்
பாங்கர்ப் பல்லி படுதொறும் பரவி[30]

என்றும்,

கள்ளி முள்ளரைப் பொருந்திச் செல்லுநர்க்
குறுவது கூறுஞ் சிறுசெந் நாவின்
மணியோர்த்தன்ன தெண் குரல்
கணிவாய்ப் பல்லியங் தாடிறந்தாரோ[31]

எனவும்,

பகுவாய்ப் பல்லி படுதொறும் பரவி
நல்ல கூறென நடுங்கிப்
புல்லலென் மாலையோடு பொருங்கொறானே[32]

என்றும்,

வருந்துதோட் பூசல் சுளையுமருந்தென
உள்ளுதொறு படூஉம் பல்லி
புள்ளுத்தொழு துறைவி செவிமுதலானே[33]

என்றும் பல்லி பற்றிய குறிப்புகள் வந்துள்ளன. இது மட்டுமின்றி கலித்தொகையிலும் காணப்பெறுகின்றன.

பல்லியும் பாங்கொத்து இசைத்தன.[34]

பல்லி பற்றிய இக்கருத்துக்கள் நற்றிணையிலும் இடம்பெற்றுள்ளன.

நெடுஞ்சுவர்ப் பல்லியும் பாங்கிற் றேற்றும் – ரம்பல நீந்திச்
செய் பொருட் ககன்ற ராயினும் பொய்யலர் வருவர் வாழி தோழி.[35]

பதினெண் மேற்கணக்கு நூல்களில் பல்லி பற்றிய செய்திகள் இடம்பெற்றுள்ளன. இதுபோல் பதினெண்கீழ்க்கணக்கு நூல்களிலும் இக்கருத்துக்கள் தாக்கம் பெற்றுள்ளன. அவை,

பூங்கணிட மாடுங் கனவுந் திருந்தின
வோங்கிய குன்ற மிறந்தாரை யாநினைப்ப
வீங்கிய மென்றோள் கவினிப் பிணி தீரப்
பாங்கத்துப் பல்லி படும்[36]

என்று ஐந்திணை எழுபதிலும்,

ஆமா சிலைக்கு மணிவரை யாரிடை
யேமாண் சிலையார்க் இனிமா விருந்தோடுங்
தாமாண்பில் வெஞ்சுரஞ்சென்றார் வரக்கண்டு
வாய் மாண்ட பல்லி படும்[37]

'காட்டுப் பசுக்கள் கதறுகின்ற அழகிய மலையையடுத்த அருமையான வழியில் அம்பும் மாட்சிமைப்பட்ட வில்லும் உடைய வேடர்களைக் கண்டு, கூட்டமாகிய விலங்குகள் முறிந்தோடுகின்ற, பெருமையில்லாத கொடிய பாலை நிலத்துப் பிரிந்து சென்ற நம் தலைவர் வரவினையறிந்து, பெருமை பொருந்திய வாயையுடைய பல்லி ஒலிக்கின்றது. அதனால் நம் தலைவர் இப்பொழுதே வந்துவிடுவார் வருந்தாதே என்றுத் தோழி கூறினள்'

என்று பல்லியின் குரல் பல இலக்கியங்களிலும் பேசப்பட்டுள்ளன.

**இடது கண் துடித்தல்**

கண் துடித்தலில் இடது கண் துடிப்பதுதான் நன்னிமித்தமாகக் கருதப்பட்டது. தலைவி என் இடது கண் துடிக்கிறது. ஆதனால் ஒற்றைச் சக்கரத்தையும் உடைய தேரில் ஊர்ந்து செல்லும் சூரியனால் கண்டாற்று அச்சம் உண்டாகும்படி மடிந்து அவிந்துபோன நெடிய பாலை நில வழியாகப் பொருள்தேடும் பொருட்டு பிரிந்து சென்ற தலைவர் இன்றே வருவார் என்று தோழி கூறுகிறாள்.

சிறந்த பொருள் தருவான் சேண் சென்றார் இன்றே
இறந்து கண் ஆடும் இடம்[38]

என்றுத் திணைமாலை கூறுகிறது. இவ்வாறு நிமித்தம் பார்க்கும் வழக்கத்தில் சங்க இலக்கியத் தாக்கத்தைக் கீழ்க்கணக்கு நூல்களில் காணமுடிகிறது. ஆந்தை அலறல்

பற்றி (ஐந். எழு - 40) திணைமாலை கூறுகிறது. இவ்வாறு நிமித்தம் பார்க்கும் வழக்கத்திலும் சங்க இலக்கியத் தாக்கத்தைக் கீழ்க்கணக்கு நூல்களில் காணமுடிகிறது.

**பேய்ப் பற்றிய நம்பிக்கை**

மக்களிடையே பல நம்பிக்கைகள் இருந்தது. அதில் பேய்ப் பற்றிய நம்பிக்கையும் குறிப்பிடத்தக்கதாகும். போர்க்கலத்தில் நிகழும் நிகழ்ச்சியைப் பற்றிக் கூறும்போது பேய் கருங்கண்களை உடையவளான பேய் மகள் திரிந்து கொண்டிருப்பாள் எனக் கூறப்பட்டுள்ளது. இதனை,

> கழல்கட் கூகைக் குழறுகுரந் பணிக்
> கருங்கட் பேய்மகள் வழங்கும்[39]

எனக் கூகை குழறுவதையும் பதிற்றுப்பத்து கூறுகிறது.

இப்பேய்ப் பற்றிய நம்பிக்கையை ஆசாரக்கோவை வேறுவிதமாகக் கூறுகிறது. மக்கள் நோயில்லாமல் வாழ்வதற்கு வழி கூறும்போது, பாழடைந்த வீட்டிலும், பாழடைந்த கோவிலுக்குள்ளும், சுடுகாட்டிலும், ஊரில்லாத இடத்திலுள்ள காய்ந்த ஒற்றை மரத்திடத்தும் தனியாரகப் போகக்கூடாது என்று கூறுகிறது. இதனை,

> பாழ்மனையும், தேவகுலனும் சுடுகாடும்,
> ஊரில் வழியெழுந்த ஒற்றை முதுமரனும்
> தாமே தமியர் புகாஅர் பகல் வளரார்
> நோயின்மை வேண்டுபவர்[40]

எனக் கூறப்பட்டுள்ளது.

**வானிலை நம்பிக்கை**

மனிதன் தன்னம்பிக்கையுடன் வாழ்ந்தபோதிலும், தனது எதிர்காலம் என்ன ஆகுமோ என்ற அச்சம் தோன்றியது. அதன்விளைவாக நல்ல நாள், கெட்ட நாள் பார்க்கும் பழக்கம் இருந்தது. எந்த நாளில் எது செய்ய வேண்டும், எது செய்யக்கூடாது என்று கணித்து அதன்படி செயல்பட்டனர். இது சங்க காலந்தொட்டு இன்றுவரை இருந்து வருவதாகும். 'வெற்றிகொண்ட மன்னனின் வாழ்நாள் நிலைக்கும், பகை மன்னனின் வாழ்நாள் அற்றுப்போகும்' எனக் கூறும்போது,

நின்றுநிலைஇயல் நின் நாண்மீன்: நில்லாது
படாஅச் செலீஇயர், நின்பகைவர் மீனே[41]

எனப் புறநானூறு கூறுகிறது.

மனிதன் எப்படி வாழவேண்டும், எவ்வாறு வாழக்கூடாது என்ற ஒழுக்க நெறிகளைக் கூறுவது ஆசாரக்கோவை. அக்கோவையில் இக்கருத்து மிளிர்கிறது.

அட்டமியும் ஏணை உவாவும் பதினான்கும்,
அப்பூமி காப்பார்க்கு உறுகண்ணும் மிக்க
நிலத்துளக்கு விண்ணதிர்ப்பு வாலாமை பார்ப்பார்
இலங்கு நூல் ஓதாத நாள்[42]

இக்கருத்துக்களை உளங்கொண்டுப் பார்க்கும்போது இருகால இலக்கியங்களின் ஒற்றுமையும், செல்வாக்கும் புலனாகின்றது.

**பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் தொழில்**

சங்க கால இலக்கியங்களில் இடம் பெற்ற தொழில்களைக் கீழ்க்கணக்கு நூல்கள் அப்படியே கையாண்டுள்ளது.

**மருத நில மக்கள்**

உழவுத் தொழில் செய்தனர். செந்நெல் விளையும் வயல்களைக் கொண்டது மருதநிலம். மருத நிலத்தின் தொழிலாகச் செந்நெல் விளைவித்தல் விளக்கியதை அறிய முடிகிறது.

செந்நெல் விளைவயல் ஊரன்[43]

என வந்துள்ளது.

**நெய்தல்**

நெய்தல் நில மக்கள் மீன் பிடித்தலைத் தொழிலாகக் கொண்டு வாழ்ந்தனர். நெய்தல் மலர்கள் பூத்துள்ள குளிர்ந்த உப்பங்கழிகளிடத்தே மீன்கள் அகப்படும் வழிகளை அறிந்துகொண்டு, தன் தனயன்மார்கள் நல்ல நூலால் பின்னப்பட்ட நுட்பமான வலைகளிலேயே முகந்து பிடித்துக் கொண்டு வந்து காயவைத்துள்ள கருவாட்டினை, கடற்கரைச் சோலையிலிருந்து, பறவைகள் பற்றிக் கொண்டுப் போகா வண்ணம் காக்கின்றனர். இச்செய்தியை,

பானைம் தண் கழிப் பாடறிந்து தன்மையார்
நூல் நல நுண்வலையால் நொண்டெடுத்த கானல்
படுபுலால் காப்பான்[44]

என்றப் பாடல் வழி அறியலாம்.

**பாலை**

பாலை நிலத்தொழில் கொள்ளை கொள்வதாகும். கொள்ளை கொள்வதற்குரிய பொருளைப் பெற்றிலராயினும் வன்கண்மை மிக்க மறவர்கள் திடீரென்று வெளிவந்து வழிச் செல்வோர் மேல் அம்பெய்திக் கொள்ளும் பாலைநில வழி கள்ளிகளைக் கொண்ட காடாகும். இக்கருத்தை,

கள்ளியங் காட்ட கடமா இரிந்தோடத்
................................................ கொள்ளும்
பொருளில ராயினும் பொங்கெனப் போந்(து) எய்யும்
அருளில் மறவர் அதர்[45]

என்ற வரிகள் இவண் உளங்கொளத்தக்கது.

**குறிஞ்சி**

குறிஞ்சி நில மக்கள், திணைப்புனம் காத்தலையே தொழிலாகக் கொண்டுள்ளனர். வேட்டையாடும் தொழிலைக் கொண்டிருந்தனர். அவை, இம்மலையின் பக்கத்தில் திணைப்புனத்தைக் காவல் காத்துக் கொண்டிருந்ததையும் அப்பொழுது வேட்டையாடுவதை மேற்கொண்டதும், தாம் தப்பவிட்ட விலங்கு ஒன்றைத் தேடி வருவதும்,

............................................. சாரல்
தினைக்காத் திருந்தோம் யாம் ஆக – வினைவாய்த்து
மாவினவு வார்போல்[46]

எனக் கூறப்பட்டுள்ளன.

**முல்லை**

முல்லைத் திணைக்குரிய தொழில் ஆடுகளையும், பசுக் கூட்டங்களையும் மேய்ப்பதாகும். இக்கருத்து ஆயன் பசுக்கூட்டங்களை மேய்த்து வீட்டில் சேர்க்கின்ற மாலை நேரம் என,

ஆயன் புகுதரும் போழ்தினான்[47]

இவ்வரி முல்லை நிலத் தொழிலை எடுத்தியம்புகிறது.

மேற்குறிப்பிட்ட தொழில்களை ஆராயும்போது சங்ககாலத் தொழில்முறை வளர்ச்சியாகக் கீழ்க்கணக்கு நூல்களில் பிரதிபலிப்பதை அறியமுடிகிறது.

தமிழ் மக்களின் வாணிபம் பற்றிய செய்திகள் மேற்கணக்கு நூல்களில் நிரம்பக் (குறுந் - 221: 3 - 4, 269: 4 - 6, 100: 3 - 5, ஐங்: மருதம் புலவிப்பத்து 47:49:48, பாலை செலவழுங்குவித்துப்பத்து - 10, நற் - 183: 239 -3, 118: 8 - 11, 97: 6 - 9, 189:5, 273: 7 - 9, 295, அகம் - 140: 5 - 8, 340: 14 - 15, 60:4, 320: 2 - 5, 265: 4 - 6, 61: 8 - 10, 245: 8 -13, 363: 6 - 8, 75: 18 - 20, 350: 6 - 7, 120: 10 - 11, 343: 12 - 15, 207: 1 - 6, 245: 5 - 7, 147, புறம் - 58, 353: 1 - 2, 343: 1 - 2, 33: 1 - 8, பதிற் - 66: 7 - 8, 71: 6 -7, பரி - 10: 38 - 39, முல்லை - 55 -50, 85, பெரும்பா - 316 - 317, 77 - 82, மதுரைக் - 375 - 379, 318 - 323, நெடு நல்வாடை - 101 - 103, பட்டினப் - 28 - 30, 216 -218) காணப்படுகின்றன. இவ்வகையில் வணிகத்தைப் பெரிய அளவில் கூறியுள்ள சங்க இலக்கியங்கள் போலவே கீழ்க்கணக்கு நூல்களும் அச்சாயலுடன் பதிவு செய்துள்ளன.

கீழ்க்கணக்கு நூல்களிலும் வாணிபம் பற்றிக் கருத்துக்கள் இடம்பெற்றுள்ளன. கடல் வாணிகம் பற்றி பேசப்படுகிறது. இக்கருத்தை,

'கண்திரள் முத்தம் பயக்கும் இரு முந்நீர்ப்
பண்டம் கொணாவாய் வழங்கும்'[48]

என்ற வரிகளால் உணரமுடிகிறது. இவ்விலக்கியங்களில் யானையின் தந்தம், கடலில் தோன்றும் முத்து ஆகியவற்றை வாணிகத்திற்குப் பயன்படுத்தினரெனக் கூறுகிறது.

சங்ககால போர்ச்சூழல் கட்டுப்பாட்டில் வணிக மேம்பாடு பாடுபாருளாகி, தமிழகத்திற்குச் சமணசமய நுழைவு நேரடி வேளாண்மைத் தொழிலில் ஈடுபடாமல் உற்பத்திப் பொருட்களை வணிகஞ்செய்யும் முயற்சி மேற்கொள்ளப்பட்டதை நீதி நூற்காலத்தில் அறியமுடிகிறது.

சங்க கால வாழ்வியலின் பதிவுகள் அமைதி வாழ்வை வலியுறுத்திய நீதி நூற்காலத்தில் தொடர்ந்து கால தேவைக்குரிய வளர்ச்சிகளும் உடன் பதிவாகியுள்ளன. இத்தகு பதிவில் வாழ்வியல் வளர்ச்சியும், இலக்கிய வகைமை வளர்ச்சியும் ஒருசேர எழ சங்க நூற்பதிவுகள் தன் பாதிப்பை ஏற்படுத்தின என்பது துணிவு.

## அடிக்குறிப்புகள்

1. அ.ச. ஞானசம்பந்தன், இலக்கியக் கலை, ப. 86
2. க.ஆ.வெ. விஜயரெங்கன், மூன்றாம் கருத்தரங்கு தமிழ் இலக்கிய ஆய்வுக்கோவை, க.த. சங்ககாலச் சமுதாயப் பழக்கவழக்கங்கள்
3. புறம் - 124: 1 - 3
4. மேலது - 229: 1- 9
5. மேலது - 117: 1 - 2
6. அகம் - 141:8
7. ஆசாகோ - 58
8. மேலது - 47
9. அகம் - 141: 8 - 11
10. கலித் - 59:13
11. களவழி - 17
12. அகம் - 86:1
13. ஆசாகோ - 45
14. கலித் - 80:11
15. ஐங் - 66
16. மேலது - 403
17. இனியது - 14
18. புறம் - 331: 4 - 8
19. சிறுபாண் - 240 - 45
20. நற் - 120:10
21. திரி - 12

22. மேலது - 63

23. மேலது - 64

24. ஆசாகோ - 54

25. சிறுபஞ் - 43

26. மேலது - 45

27. குறுந் - 260: 1 - 4

28. கைந் - 29

29. நற் - 333

30. அகம் - 9

31. மேலது - 151: 12 - 15

32. மேலது - 186: 15 - 17

33. மேலது - 351

34. கலித் - 11:20

35. நற் - 246: 2 - 3

36. ஐந் - எழு - 41

37. கைந் - 18

38. திணைமாலை - 80

39. பதிற் - 22: 36 - 37

40. ஆசாகோ - 57

41. புறம் - 24:24:25

42. ஆசாகோ - 47

43. திணைமொழி - 34

44. திணைமாலை - 32

45. மேலது - 84

46. ஐந் - ஐம் - 14

47. ஐந் - எழு - 28

48. ஐந் - எழு - 61

## அறக்கருத்துச் செல்வாக்கு

இலக்கியம் மனிதனுக்கு நல்வழிகாட்டுகிறது. இது உயர்ந்த நோக்கங்களையும், கொள்கைகளையும், எடுத்தியம்புகிறது. இலக்கியம் என்பதற்கு இலக்கு எனத் தொல்காப்பியம் பொருள் கூறுகின்றது.

> இலக்கியம் என்ற சொல்லை இலக்கு
> இயம் என்று பிரிப்பதாக இருந்தால்
> இலக்கம் (இலக்கு) என்ற சொல் தொல்காப்
> பியத்தில் காணப்படுகிறது. இலக்கு, விளக்கம்,
> நோக்கம், கொள்கை, குறிக்கோள், எனப்
> பொருள் கொள்ளின் உயர் குறிக்கோள்களையும்,
> கொள்கைகளையும் இயம்புகிறது[1]
> விளக்குவது இலக்கியம் என்று கொள்ளலாம்

என ச. வே. சுப்பிரமணியன் கூறியுள்ள கருத்து உளங்கொள்ளத் தக்கது. மனிதர்கள் தம் வாழ்க்கையில் கண்டவற்றையும், உயர்ந்தவற்றையும் அனுபவத்தின் மூலம் பதிவு செய்வது இலக்கியமாகும். இக்கருத்துக்களை வைத்து ஆராயும் போது, சங்க இலக்கியங்களும், கீழ்க்கணக்கு நூல்களும் எவ்வகை இலக்கியமென அறியமுடியும்.

சங்க காலத்தில் காதலும், வீரமும், இலக்கியத்தின் பாடுபொருளாக அமைந்துள்ளன. கீழ்க்கணக்கு நூல்கள் நீதியை வலியுறுத்துவதற்காகவே எழுந்தன. அதனால் இதனை நீதி நூல்கள் என்று கூறுகின்றனர். கீழ்க்கணக்கு நூல்களில் பெரும்பாலானவை நீதி நூல்களாக அமைந்துள்ளன. நீதி நூல்கள் தோன்றுவதற்கான காரணங்களை இவண் அறிவது அவசியமாகும்.

**நீதி நூல்கள் எழுந்த சூழல்**

நீதி நூல்கள் மனிதன் மனிதனாக வாழ்வதற்கு வழி காட்டுகின்றன. அவை குறிப்பிட்ட நோக்கங்களை அடிப்படையாகக் கொண்டு இயற்றப்பெற்றன. இந்நீதி நூல்கள் சங்கம் மருவிய காலத்தில் தோன்றியது.

சங்க காலப் பாடுபொருளின் ஒரு பகுதியாக விளங்கும் வீரத்தினால் போர் ஏற்பட்டது. அப்போரினால் ஏற்பட்ட அழிவுகளைப் புறநானூற்றுச் செய்யுட்கள் எடுத்தியம்புகிறது. புறநானூற்றில் காணப்படும் போர்களுள் பெரும்பாலும் தமிழ் மன்னர்களிடையே நடைபெற்றன. கொலையையும், கொள்ளையையும் உள்ளடக்கியதே போர். போரில் கொலையையும், கொள்ளையையும் உள்ளடக்கி நிறைய செய்பவனே வீரன் எனப் போற்றப்பட்டனர். போர் தேவை காரணமாக மன்னரும் படைவீரரும் மாண்டனர். இக்காரணங்களால் மகளிர் பலர் விதவையானார்கள்.[2]

இக்கொடுமைகளால் மக்களின் மனம் அமைதியை நாடியது. நீதியை விரும்பி வரவேற்றது. இக்காலத்தில் எழுந்த இலக்கியங்கள் மக்களின் தேவைக்கு ஏற்ப நீதியைப் பாடுபொருளாகக் கொண்டு விளங்கின. நீதியை நிலை நாட்டுவதற்கென்றே பல நூல்கள் எழுதப்பட்டதால் இதனை நீதி நூல்கள் என்றழைத்தனர். இக்கருத்தை,

> சங்க கால வாழ்க்கை முறையிற்
> காணப்பட்ட குறைபாடுகளால் மனம்
> நொந்த மக்களுக்கு வேறு வாழ்க்கை முறை
> தேவைப்பட்டது. பொறியாலும், புலனாலும்
> கவர்ச்சியுற்று, காதல் வாழ்க்கை, வீர
> வாழ்க்கைகளில் 'ஊக்கம் மேலிட்டு நின்று
> வாழ்ந்து, அவ்வாழ்க்கைகளிலே துன்பத்தைக்
> கண்ட தமிழ் மக்கள் கட்டுப்பாடுகள்
> நிறைந்த வாழ்க்கையையும் ஒழுக்கத்தையும்
> அவாவினர் [3]

என வேலுப்பிள்ளை கூறுகிறார்.

தமிழ் இலக்கியங்களில் வீரநிலைப்பாடல்களைப் போற்றிய வீரயுகக் காலத்தைப் போன்று உலகெல்லாம் வீரயுகம் நிகழ்ந்துள்ளன. அதனால்தான் உலக மக்கள் அனைவரும் அறத்தை விரும்பினார்கள். இதனடிப்படையில் ஆராயும்போது, வீரயுகப் பாடல்களைத் தொடர்ந்து அறநெறிப் பாடல்கள் ஏற்றம் பெற்றன என்பதை,

'உலக இலக்கியங்கள் அனைத்தையும் நோக்கும்
போது வீரயுகப் பாடல்களைத் தொடர்ந்து அற
நெறிப்பாடல்கள் ஏற்றம் பெறுவதை எங்கும்
காண முடிகிறது. அறநெறி இலக்கியங்கள்
ஆதிக்கம் பெற்ற இக்காலக் கட்டத்தில்
போர்ச் சிறப்பைப்பாடும் களவழி நாற்பது
போன்ற நூல்களும், காதலனின் மாட்சியைப்
பாடும் திணைமாலை நூற்றைம்பது போன்ற
நூல்களும் தோன்றாமல் இல்லை. ஆயினும் இக்காலத்தில்
அறநெறிப் பாடல்களே தலைமையிடம்
வகுக்கின்றன என்பது தெளிவு[4]

என்றும்,

அறநெறி இலக்கியங்களின் தோற்றத்திற்கு
வீரயுகக் கோட்பாடுகளில் மனிதன் கொண்டே
வெறுப்புணர்வு காரணமாக அமைந்தது[5]

என்றும் ஜான். சாமுவேல் விளக்கியுள்ளார்.

மேற்குறிப்பிட்ட காரணங்களால் தோன்றிய நீதி இலக்கியங்கள், நீதியை வலியுறுத்துகிறது. இதனைப் பதினென் கீழ்க் கணக்கு நூல்கள் என்றழைத்தனர்,

நீதி இலக்கியம் என்றவகையில் அமையும் இலக்
கியங்கள் மனித வாழ்க்கையில் பின்பற்ற வேண்டிய
அறங்களை வெளிப்படையாகவே வற்புறுத்துகின்றன.
இவ்விலக்கிய வகையில் பதினென் கீழ்கணக்கு
நூல்களும், பிற்கால நீதி நூல்களும் அடங்கம்[6]

என எடுத்தியம்பினார்.

## நீதி – சொற்பொருள் விளக்கம்

நீதி என்பதன் சொற்பொருளை ஆராயும்போது நியாயமானவற்றைச் செய்தல், முறைதவறாமை உண்மை போன்ற பொருளில் வழங்குவதை,

நீதி – நியாயம் முறைமை, மெய்
என்ற பொருள் வழங்கப்பெறுகின்றன[7]

எனத் தமிழ் மொழியகராதி கூறுகின்றது.

நீதி என்ற சொல் தமிழ்ச் சொல் அன்று. அது நீ என்னும் விளைச் சொல்லடியாகத் தோன்றியது. இது வடமொழியில் அழைத்துச் செல், ஆட்சி செய் என்று பல பொருளில் வழங்கப்படுகிறது.

**இன்னா நாற்பது**

நற்குடியில் பிறந்தவன் கல்லாதிருந்தால் பெருந்துன்பமாகும் என்றும், கல்வி அறிவில்லாதவன் சொல்கின்ற சொல்லின் பொருளும் துன்பத்தைத் தரும் என்பதை,

குலத்துப் பிறந்தனன் கல்லாமை இன்னா[52]
கல்லாதான் ஊரும் கலிமாப் பரிப்(பு) இன்னா[53]

என்ற எடுத்துக்காட்டுகளால் உணரமுடிகின்றது.

**முதுமொழிக்காஞ்சி**

அரிய உண்மைகளைக் கற்றலை விட கற்றறிந்த பெரியாரைப் போற்றுதல் நன்மை பயக்கும் என்றும், கற்ற கல்வி உடைமையை அறிவினால் அறிந்தறிவரென்றும், கற்பிக்கும் ஆசிரியருக்கு ஒன்றைக் கொடுக்காமல் கற்பது கல்வியாகாது என்று முதுமொழிக்காஞ்சி விளக்குகின்றது. இக்கருத்துக்களை,

கற்றலின் கற்றாரை வழிபடுதல் சிறந்தன்று[54]
கற்றது உடைமை காட்சியின் அறிப[55]
நேராமல் கற்றது கல்வி அன்று[56]

என்றத் தொடர்களால் உய்த்துணர முடிகின்றது.

**பழமொழி**

அதிக அளவில் நூல்களைக் கற்றுத் தேர்ந்தவர்களே அறிவுடையவர்கள் என மதிக்கப்படுவர். அப்படிப்பட்ட மிகுந்த அறிவுடைய சான்றோர்களின் புகழ் நான்கு திக்கும் சென்று பரவியிருக்கும் எல்லா நாடுகளிலும் அவர்களுடைய பெயர் பரவும் என்பதை,

ஆற்றவும் கற்றார் அறிவுடையார், அஃதுடையார்
நாற்றிசையும் செல்லாத நாடில்லை – அந்நாடு
வேற்று நாடாகா, தமவேயாம்! ஆயினால்
ஆற்றுணா வேண்டுவது இல்[57]

என்றுப் பழமொழி கற்றவரின் மாண்பை எடுத்துரைக்கின்றது.

**அன்பும் நட்பும்**

நட்பு கொள்வதற்கு அடிப்படை அன்பு தேவைப்படுகின்றது. சங்க காலத்தில் சமுதாய அமைப்பில் மக்களிடத்திலும் மற்ற உயிர்களிடத்திலும் அன்பு வேண்டும் என்று சிறந்த கொள்கையைச் சங்கப்புலவர்கள் வற்புறுத்தியுள்ளனர். அக்கால மக்கள்

ஒருவருக்கு கொருவர் உயிரையே விடுவதற்குரிய பண்புடையவர்களாக இருந்தனர். பிசிராந்தையார், பொத்தியார் என்ற இரு புலவர்களும் கோப்பெருஞ்சோழனுடன் மிகுந்த நட்பு கொண்டு, அவர் வடக்கிருந்து உயிர் விடத்துணிந்தபோது தாங்களும் வடக்கிருந்து உயிர்விடத் துணிந்தனர். இவ்விருவருள் பிசிராந்தையாரின் அன்புடைமை பற்றிக் கோப்பெருஞ்சோழன்,

> தென்னன் பொருப்பன் நன்னாட்டுள்ளும்
> பிசிரோன் என்ப என் உயிரோம் புநனே
> செல்வக் காலை நிற்பினும்
> அல்லற்காலை நில்லலன் மன்னே[58]

என்றும்,

> இகழ்விலன் இனியன் யாத்த நண்பினன்
> புகழ் கெட வரூஉம் பொய்வேண்டலனே
> தன் பெயர் கிளக்குங்காலை என் பெயர்
> பேதைச் சோழன் என்றும் சிறந்த
> காதற் கிழமையும் உடையன் அதன்தலை
> இன்னதோர் காலை நில்லலன்
> இன்னே வருகுவன் ஒழிக அவற்கு இடமே[59]

என்றுக் கூறிய சொற்கள் பொத்தியார் அன்புப் பற்றியதாகும். பொத்தியார் சோழன் நடுகல் நின்ற இடத்திற்குச் சென்ற மக்கள் மகன் பிறந்தவுடன் வா என் நண்பனே இதோ வந்துவிட்டேன் இடம் தா என்று கேட்டதாக,

> புகழ்சால் புதல்வன் பிறந்தபின் வாவென
> என்னிவன் ஒழித்த அன்பிலாள[60]

எனக் கூறுகிறது.

ஆதனுங்கன் என்ற குறுநில மன்னனிடம் கள்ளில் ஆத்தியனாள் என்ற புலவர் அன்பு கொண்டிருந்தார். அவருடைய அன்பு அத்தகையது என்பதை அப்புலவரே பின்வருமாறு வெளிப்படுத்தியுள்ளார். இறைவ நீ எப்போதும் என் நெஞ்சில் இடம் பெற்றுள்ளாய், என் நெஞ்சை யாராவது திறந்து பார்த்தால் அதனுள் உன்னையே காண்பர், நான் உன்னை எப்பொழுதும் மறக்கவே மாட்டேன், என்னுயிர் என் உடம்பை விட்டுப் பிரிந்து போகும் காலத்தில் தான் நான் உன்னை மறந்திட முடியும் (புறம் - 175) என்று அன்பு நிலையை அறியமுடிகின்றது.

ஒருவற்கு ஒரு துன்பம் உண்டானால் அவ்வூரில் இருக்கும் மக்கள் அனைவரும் துன்புறுவது இயல்பாகும். ஒல்லையூர்க்கிழான் மகன் சாத்தன் இறந்தபொழுது கீரத்தனார் ஒரு முல்லைக் கொடியை நோக்கி,

இளையோர் சூடார் வளையோர் கொய்யார்
நல்லியாழ் மருப்பின் மெல்ல வாங்கிப்
பாணன் சூடான் பாடினி அணியாள்
ஆண்மை தோன்ற ஆடவர்க் கடந்த
வல்வேல் சாத்தன் மாய்ந்த பின்றை
முல்லையும் பூத்தியோ ஒல்லையூர் நாட்டே[61]

என்றுக் கூறிய செய்யுள் நம்முடைய நெஞ்சை உருக்குவதாகும்.

சங்கப் புலவர்கள் மறுமையிலும் தங்களுடைய நட்பும் அன்பும் தொடர வேண்டுமென்று விரும்பினர். வேள் பாரி இறந்ததன் பிறகு அவன் மகளிரைப் பாதுகாப்பில் வைத்துவிட்டு, கபிலர் பாரியை தன் மனக்கண்ணில் கண்டு, இப்பிறப்பில் நம் இருவரையும் கூட்டி ஒன்றிய நட்பால் உயிர்வாழ்வு வாழச் செய்த நல்வினை மறுபிறவியிலும் உன்னோடு கூடிவாழும் வாழ்வை நல்குவதாக எனப் (புறம் - 236) பாடினார்.

புறநானூற்றில் மட்டுமின்றி எல்லா சங்க இலக்கியங்களும் அன்பும் நட்பும் பற்றிப் பேசுகின்றன. தம்மால் அன்பு செய்யப்பட்ட கண்ணோட்டமுடைய நண்பர்க்கு எதிரே சென்று இதனை நீ உண்க என்று விடத்தைக் (நஞ்சு) கொடுத்தாலும், நட்பின் மிக்கக் கண்யோட்டமுடையார் கொடுத்தது நஞ்சு என்று தெரிந்தும் அதனை உண்பர். இதனை,

முந்தையிருந்து நட்டோர் கொடுப்பின்
நஞ்சும் உண்பர் நனி நாகரிகர்[62]

என நற்றிணைக் கூறுகின்றது. இதனை ஆராயும்போது,

சங்க காலத்தில் நட்பும் அன்பும் வாழ்வியலோடு பின்னிப் பிணைந்துள்ளது. அது கோட்பாடாகவோ கொள்கையாகவோ போற்றப்படவில்லை. ஆனால் கீழ்க்கணக்கு நூல்களில் கட்டளையிடுவதாகவும், இது நன்மை, தீமை என்று சுட்டப்பட்டுள்ளதையும் இவண் அறியலாம்.

கொள்ள வேண்டிய நட்பு, கூடா நட்பு என இரு பிரிவாகப் பிரித்தனர். இவ்வடிப்படையில் நட்பு ஆராயப்படுகிறது.

நகையாய நண்பினார் நாரின்மை இன்னா[63]

முகத்தால் நகுதலைச் செய்யும் நண்பினர் அகத்தாலும் அன்பில்லாதிருப்பின் அது துன்பத்தை விளைவிக்கும் எனக் கூறப்படும் கருத்து,

முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்து
அக நக நட்பது நட்பு[64]

எனத் திருக்குறளும் கூறியுள்ளது நினைக்கத்தக்கதாகும்.

அன்பு இல்லாதவர்கள் தொடர்பு உறவுமில்லை, நட்புமிலை என்பதை,

ஈரமில்லாதது கிளை நட்பன்று[65]

என்றும், ஒற்றுமைப்படாத நெஞ்சத்தோன் நல்ல நண்பனாக மாட்டான் என்பதை,

நேரா நெஞ்சத்தோன் நட்டோன் அல்லன்[66]

என்பதை முதுமொழிக்காஞ்சி நட்பு பற்றி விளக்கி நிற்கின்றன என நட்பின் தன்மையைப் பற்றி,

யாணர் அகல் வயல் ஊரன் அருளுதல்
பாண பரிந்துரைக்க வேண்டுமோ – மாண
அறிவ(து) அறியும் அறிவினார் கேண்மை
நெறியே புரையாதோ மற்று[67]

என ஐந்திணை ஐம்பது கூறுகின்றது.

மேற்குறிப்பிட்டக் கருத்துக்களினின்று நோக்கும்போது அன்பும் நட்பும் காலங்காலமாகச் செல்வாக்குற்றதை உணர முடிகின்றது.

**செய்ந் நன்றி அறிதல்**

சங்க கால இலக்கியங்களில் புலவர்கள், மன்னர்கள், வெகுமக்கள் என்ற அனைத்துத் தரப்பினரும் நன்றியுணர்ச்சி மிக்கவர்களாக இருந்தனர். நன்றி என்பது பிறர் தமக்குச் செய்த உதவியையும், நன்மையையும், மறவா மறவாதிருந்ததலாகும். சங்க கால மக்கள் நன்றியுணர்ச்சியை வெகுவாகப் போற்றினர்.

மன்னர்கள், தன்னைப் புகழ்ந்துப் பாடும் புலவர்களுக்குப் பரிசில் கொடுத்ததுக்கூட நன்றியின் பாற்படுமெனக் கொள்ளலாம். தன்னைப் பாடியவர்களுக்குத் தன்னால்

முடிந்ததைப் பரிசாகத் தந்தனர். அப்படி பரிசு பெற்றுச் சென்றதை (புறம் - 34) கூறுகின்றது.

வளவனின் இயல்பை வியந்து பாராட்டிக் கூறியதால் தன்னைப் பாடிய ஆளத்தூர்க் கிழார் என்னும் புலவருக்குப் பரிசளித்தான். பின்னர் என்னை இனியும் நினைத்து வருவாயோ என்று புலவரிடம் வளவன் கேட்க, அதற்கு ஆளத்தூர்க் கிழார்,

செய்தி கொன்றோர்க்கு ய்தியில்லென
அறம் பாடிற்றே யாயிழை கணவ[68]

என்று செய்ந்நன்றியின் அருமையைக் கூறினார்.

செய்ந்நன்றி அறிதல் அறங்களுள் தலைசிறந்த அறமாகலின் அவ்வள்ளலின் புகழுக்கு அதனை முடிமணியாக முன் வைத்தார். வேறு அறத்தின் வழுவினார்க்குக் கழுவாய் உண்டென்றும், செய்ந்நன்றி அறிதலில் திறம்பினார்க்கும் மன்னிப்பு கிடையாதென்றும் தமிழ்ச் சான்றோர் கூறுவர்.

செய்ந்நன்றி அறிதலும் சிற்றினமின்மையும்,
இன்முகம் உடைமையும் இனியன் ஆதலும்[69]

என்ற வரிகளுக்குப் பொருள் கூறியவர். மேலும்,

இன்முகமாவது நட்டோர் விருந்தினர்
முதலியோரைக் கண்டவழி அகத்தே
தோன்று உவகை முகத்தின்கண்
வெளிப்பட்டுத் தோன்றுதல் ஆம்[70]

என பொ.வே. சோமசுந்தரனார் விளக்கம் தந்துள்ளார்.

இவ்வாறு போற்றப்பட்ட செய்ந்நன்றியின் தன்மை கீழ்க்கணக்கு நூல்களில் எவ்வாறு செல்வாக்குற்றன என்பதை அறியமுயல்வது நன்மை பயக்கும்.,

ஒருவன் செய்த நன்றியைப் பயனைக் கருதி வாழ்வது இனிமையுடையதாகும் என்றக் கருத்து,

நன்றிப்பயன் தூக்கி வாழ்தல் நனிஇனிதே[71]

எனக் குறிப்பிடுகிறது.

நல்லது ஒன்றையே நினைத்து அதன்படியே நடப்பவர்கள், தனக்குப் படியரிசி தந்தவர்கள் என்றாலும் அவர்களுக்கு நல்லதே நடக்க நினைப்பார்கள். இப்படிச் செய்த

உதவியை மறவாத பண்பு செய்ந்நன்றி அறிதல் ஆகும். இச்செய்ந்நன்றி கடல் வியாபாரத்திற்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளன. இக்கருத்தை,

நன் கொன்று அறிபவர் நாழி கொடுப்பவர்க்கு
என்றும் உறுதியே சூழ்க – எறிதிரை
சென்று உலாம் சேர்ப்ப அதுபோல நீர் போயும்
ஒன்று இரண்டாம் வாணிகம் இல்[72]

என்ற பழமொழியால் அறியமுடிகின்றது.

**மானம்**

மறத்தமிழர்கள் மானம் மிக்கவர்கள். உயிரைக் கொடுத்து மானத்தைக் காக்கும் உறுதியுடையவர்கள். தன் மானத்திற்குப் பங்கம் வந்தால் புலியெனப் பாய்வார்கள். பொருத்திருக்க மாட்டார்கள் என சங்க இலக்கியங்கள் கூறுகின்றன. சோழன் செங்கணாணோடு போர்புரிந்து தோற்ற கணைக்கால் இரும்பொறை, குணவாயிற் கோட்டத்துச் சிறையில் கிடந்து, தண்ணீர் கேட்டுப் பெறாது, பின் பெற்று அதனை உண்ணாதுதபோது துஞ்சிப் பாடிய பாடலாகும். தன் வம்சத்தில் பிறக்கும் குழந்தை இறந்து பிறந்தாலும், தசைப் பிண்டமாகப் பிறந்தாலும், அதனை வாளால் கீறிய பின்னரே புதைப்பது வழக்கம். ஆதலால் நான் பகைவர் வளால் சாகாது சங்கிலியால் கட்டப்பட்டு நாய் போல நடத்தப்படுகிறேன். என்னைச் சிறையிலிட்டனர், அதனால் நான் தண்ணீர் குடிக்காது இறப்பதே நல்லது எனக் கூறியதை,

தொடர்புடு ஞமலியின் இடர்படுத்து இரீஇய
கேளல் கேளிர் வேளாண் சிறுபதம்,
மதுகை இன்றி, வயிற்றுத் தீத் தணிபத்
தாம் இரந்து உண்ணும் அளவை
ஈன்மரோ இவ் வுலகத்தானே[73]

என்றப் புறப்பாடலின் மூலம் மானங்காத்தத் தமிழனின் மாண்பு புலனாகின்றது. மானம் பற்றியக் கருத்தினை ஆராயும்போது, தம்முடைய மானங்கெட்டபின் உயிர் வாழாதிருத்தல் இனியதென்றக் கருத்தை,

மானம் அழிந்தபின் வாழாமை முன்னினிதே[74]

என இனியவை நாற்பது நவில்கின்றது.

**இரத்தல் இழிவானது**

இரந்து உயிர் வாழ்வோரை சங்க இலக்கியங்கள் கண்டித்துள்ளன. தனக்கு வேண்டியவற்றைப் பிறரிடம் கேட்டுப் பெறுவது இழிந்தசெயல் என்பதை சங்க நூல்கள் விளம்பியுள்ளன.

ஈயென இரத்தல் இழிந்தன்று அதனெதிர்
ஈயேன் என்றல் அதனினும் இழிந்ததன்று[75]

ஈயென்று கேட்டலைவிட தரமாட்டேன் என்று மறுத்தல் இரத்தலைவிட இழிந்த செயல் என்பதை புறநானூறு விளக்குகிறது. இக்கருத்தைக் கீழ்க்கணக்கு நூல்களும் பின்பற்றியுள்ளன.

இரத்தலைவிட ஒருவனுக்கு இகழ்ச்சி வேறு எதுவும் இல்லை என்றக் கருத்தை,

இரத்தலின் ஊஉங்கு இளிவரவு இல்லை[76]

என்று முதுமொழிக்காஞ்சி மொழிகின்றது.

**ஈகை**

ஈகையைப் பற்றிக் குறிப்பிடும்போது 'ஈதல் இசைபட வாழ்தல்' எனக் குறள் சொல்வதைப்போல் பிறர்க்குக் கொடுத்து மகிழவேண்டும். கொடுத்து வாழும் வாழ்க்கையே சிறந்தது என்பதற்கு சங்க இலக்கியங்கள் பல சான்றுகளைத் தருகின்றது.

ஒருவர் செல்வம் பெற்றதன் பயன் (ஈவது) கொடுப்பது தான் எனப் புறநானூறு போதிக்கின்றது.

செல்வத்துப்பயனே ஈதல்
துய்ப்போ மெனினே தப்புநபலவே[77]

எனவும்,

கொள்ளெனக் கொடுத்தல் உயர்ந்தன்று – அதனெதிர்
கொள்ளேனென்றால் அதனினும் உயர்ந்தன்று.[78]

கொள் எனப் பிறர்க்குக் கொடுத்தல் உயர்ந்த செயலாகும். அதற்கு மாறாக அதனை நான் வாங்கிக் கொள்ளமாட்டேன் என்பது ஈவதைவிட உயர்ந்ததாகும் எனப் புறநானூறு உணர்த்துகின்றது.

ஈயெனக் கேட்போர்க்கு ஈய வேண்டும், கொடுத்துதவ வேண்டும் என்ற கொள்கையில் கீழ்க்கணக்கு நூல்கள் உறுதியாய் இருக்கின்றன. விருப்பமில்லாமல் செய்கின்ற ஈகை நல்லது அல்ல என்பதை,

பேணில் ஈகை மாற்றலில் துவ்வாது[79]

எனவும், ஈயாத கையுடையவன் புகழ் எய்த மாட்டான் என்பதை,

சோராக் கையன் சொல்மலை அல்லன்[80]

அறவழியில் பிறர்க்குக் கொடுப்பதே ஈகை என்பதை,

அறத்தாற்றின் ஈயாதது ஈகையன்று[81]

என்றும்,

கொடுத்தற்கு இயலக்கூடியதைக் கொடாது
மறைத்தலின் கொடுமை வேறில்லை என்ற கருத்தை,
இயைவது கரத்தலின் கொடுமை இல்லை[82]

எனவும் முதுமொழிக்காஞ்சி கூறுகின்றது.

இரப்போர்க்கு ஈதலின் எய்தும் சிறப்பில்லை[83]

மீண்டும் முல்லைக்குத் தேரும், மயிலுக்குப் போர்வையும் கொடுத்த சங்க காலச் செய்தியைப் பழமொழி (75) நானூறு கூறுகின்றது.

**சான்றாண்மை**

ஒரு செயலைச் செய்து பின்பு அதனால் வரும் துன்பங்களை நினைத்து வருந்துவதில்லை என்பதை,

செய்திரங்காவினை[84]

எனவும்,

செய்து பின் னிரங்கா வினையோடு[85]

எனவும் வந்துள்ளது. இக்கருத்தை,

கற்றார்முன் தோன்றா கழிவிரக்கம்[86]

என நான்மணியும் கூறுகின்றன. சான்றோர் இதைப் போற்றி ஒழுகும் தன்மையை ஆசாரக்கோவை நவில்கின்றது. புதிய சுற்றத்தார் சாப்பிடும்போது உயர்ந்த பீடத்தின்மேல் அமரார். முறை கடந்து இன்னாதன செய்தது போல் அவர்கள் மனம் நோகும்படி எதையும் செய்ய மாட்டார்கள் என்ற கருத்தை,

உயர்ந்ததின் மேல்இரார் உள்அழிவு செய்யார்,
இறந்தின்னா செய்தக் கடைத்தும் குரவர்
இளங்கிளைஞர் உண்ணுமிடத்து[87]

எனக் கூறப்பட்டுள்ளது.

பிறர்க்குத் துன்பம் வந்த காலத்தில் அதற்காகத் தான் துன்புற்று வருந்துதலும், இன்பம் உண்டான காலத்தில் மற்றவர்களுக்கு இன்பம் உண்டாகும் வகையில் நடத்தலும், அன்பற்றவர் வீட்டில் நுழையாதிருத்தலும் ஆகிய இம்மூன்றும் சான்றோரிடம் இருக்கக்கூடிய பண்புகளாகும். இதனை,

துன்பத்துள் துன்புற்று வாழ்தலும் இன்பத்துள்
இன்ப வகையான் ஒழுகலும் – அன்பில்
செறப்பட்டார் இல்லம் புகாமை இம்மூன்றும்
திறப்பட்டார் கண்ணே உள[88]

என்றும், தம் உயிர்க்கு நன்மையை உணர்ந்த சான்றோர் கோபங் கொண்டாலும் தம்முன் பெரியவரின் பெயரின்னவாயால் சொல்லார் மனைவியைச் சினந்து நீண்ட நேரம் அங்கேயே இரார். பெரியவர்களை எப்பொழுதும் முறைமைப் பாராட்டி இழிவாகக் கூறார் (ஆசார - 80) எனவும் கூறுகின்றது. மேலும் சான்றோர்கள் செய்யத்தகாதவை இவை என வலியுறுத்தும்போது,

புழக்கடைபுகார் அரசன் கோட்டி உரிமை
இவற்றுக்கண் செவ்வியார் நோக்காரே – அவ்வத்
தொழிற்குரியர் அல்லாதவர்[89]

என்று ஆசாரக்கோவை விளக்கி நிற்கின்றது.

சான்றாண்மையைப் பற்றிக் கூறுமிடத்து மற்றவர் தன்னைப் பெருமைப்படுத்திப் பேசும்பொழுது நாணம் அடைதலும், தன்னை விரும்பாதவர் இகழுமிடத்து கோபிக்காது பொறுத்துக் கொள்ளுதலும், அறச் செயல்களை மேகம் போன்று கைமாறு கருதாது கொடுத்தலும் ஆகிய இம்மூன்றும் சிறந்ததென,

பிறர்தன்னைப் பேணுங்கால் நாணலும் பேணார்
திறன்வேறு கூறில் பொறையும் – அறவினையைக்
காரண்மை போல ஒழுகுதலும் இம்மூன்றும்
ஊராண்மை என்னும் செருக்கு[90]

எனத் திரிகடுகம் கூறுகின்றது.

**புறங்கூறாமை**

ஒருவரைப் பற்றி அவருக்கு நேராகக் கூறாமல் அவர்கள் இல்லாவிடத்தில் அவர்களை இழிவாகப் பேசுதல் புறங்கூறுதலாகும். புறங்கூறுதல் கொலை செய்வதற்குச் சமமானதாகும். இப்புறங்கூறுதலைச் சங்க இலக்கியங்கள் கண்டித்திருக்கின்றன. பல இடங்களில் புறங்கூறாமைப் பேசப்பட்டு எழுதப்பட்டுள்ளது. வாழ்வியலறங்களில் புறங்கூறாமையும் போற்றப்பட்டது. அவை இவ்வாறு கூறியுள்ளன என்பதை ஆராய்வது பொருத்தமாகும்.

கொண்டு நீ மாறிய கவின்பெறல் வேண்டேன்[91]

எனக் கலித்தொகை கூறுகின்றது. 'கொண்டுகண்மாறல்' என்பது புறங்கூறுவதாகுமென கலித்தொகையில் கூறப்பட்டு உள்ளது. இதுபோன்ற சங்க இலக்கியங்களில் வரும் கருத்துக்கள் நீதி நூல் காலத்தில் பெருஞ்செல்வாக்குப் பெற்றன.

பிறனைக் கொலையொக்குங் கொண்டு கண் மாறல்[92]

என நான்மணிக்கடிகையும் விளக்குகின்றது.

**பொய் கூறாமை**

ஒருவன் பொய்யைச் சொல்லவில்லை என்றால் அவன் அறச்செயல்களைச் செய்யாமல் இருந்தால்கூட அவனுக்குக் கெடுதல் ஏற்படாது. தன் நெஞ்சு அறிவதனை பிறர் அறியாரெனப் பொய் சொல்லி விட்டால் தன் நெஞ்சமே தன்னைச் சுட்டெரித்துவிடும். ஒருவன் தன் உள்ளத்தால் பொய் கூறாமல் இருந்தானென்றால் உலகத்திலுள்ளோர் நெஞ்சங்களில் வாழ்வதற்குரியப் பெருமையுடையனாக விளங்குவான்.

தனக்குக் கிடைத்தற்கரிய வாழ்வு கிடைத்தாலும் அதனை வாழ்வதற்காகப் பொய்யைக் கூறமாட்டேன் என்று புறநானூறுக் கருத்து இவண் காணலாம்.

வாழ்தல் வேண்டிப்
பொய்கூறேன் மெய் கூறுவல்[93]

இமயமலையைத் தானமாகக் கொடுத்தாலும் தான் பொய்யை என் நாவிலும் உரைக்கவே மாட்டேன் என்று புலவர்களும், மன்னர்களும், வெகுமக்களும் உறுதியுடன் இருந்தனர்.

புலவர்களைப் பற்றிக் கூறும்போது,

செறுத்த செய்யுள் செய்செந் நாவின்
வெறுத்த கேள்வி விளங்குபுகழ்க் கபிலன்[94]

என்றும்,

பொய்யாச் செந்நா நெளிய வேத்திப்
பாடுப வென்ப பரிசிலர் நாளும்[95]

என்றப் புறநானூற்றை ஆராயும்போது,

பீடின் மன்னர்ப் புகழ்ச்சி வேண்டிச்
செய்யா கூறிக்கிளத்தல்
எய்யா தாகின்றெஞ் சிறு நாவே[96]

எனக் கூறுவதிலிருந்து பொய் சொல்லாத நா என்றப் பொருளின் கூறுப்படுகின்றது எனப் பொய் கூறாமையைப் பற்றி சங்க நூல்கள் கூறும் கருத்துக்களை நாற்பது, சிறுபஞ்சமூலம், ஏலாதி போன்ற பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் எவ்வாறு எடுத்தியம்புகின்றன என்பது இவண் ஆராயப்படுகிறது.

ஒருவன் பொன்னைப் பெற்றாலும், கிடைத்தற்கரிய பொருள் கிடைத்தாலும் பொய் செல்லக்கூடாது என்பதை,

பொய்யாமை பொன்பெறினும்[97]

எனவும்,

பொய்யாமை நன்று[98]

எனவும் சிறுபஞ்சமூலம் குறிப்பிடுகின்றது.

பொய் சொல்லாதவனும் புறங்கூறாதவனும் எவரையும் இகழ்ந்து பேசாதவனும் விண்ணோர்க்கு வேந்தனாய் விளங்குவர் என்ற கருத்தை,

பொய்யுரையான் வையான் புறங்கூறான் யாவரையும்[99]

என்றும் பொய் சொல்வோனுக்கு உடன்படாமலும் வாழவேண்டும் என்றக் கருத்தை

பொய்யான் பொய் மேவான்[100]

எனவும் ஏலாதி சிறப்பித்துரைக்கின்றன. இவ்வாறாக இடம் பெற்றக் கருத்துக்களை ஆராய்வதோடு நின்றுவிடாமல் தத்துவக் கருத்துக்களின் தாக்கங்களைக் காண்பது இன்றியமையாததாகும்.

**தத்துவம்**

தத்துவம் என்பது விளங்கிக் கொண்டு எளிதில் புரிய முடியாததாக இருப்பது. தத்துவத்தைப் பற்றி அறிஞர் பெருமக்கள் பலர் பல கருத்துக்களைக் கூறியுள்ளனர்.

உயிர்கள் வாழ்வு பெறுதற்பொருட்டு ஐம்பெரும் பூதங்களின் திரட்சியாகிய உலகினைப் படைத்தும், உயிர்கள் இளைப்பாறுதல் பொருட்டு உலகினைத் தன் கண் ஒடுக்கியும் உலகிற்கு நிமித்த காரணமாகத் திகழ்பவன் சிவபெருமானே என்பதும், அம்முதல்வனே எல்லாத் தெய்வங்கட்கும் தலைவனாகிய முழு முதற்கடவுள் கருத்தைக் கொண்ட இறையியல் நெறியினர் ஒரு பக்கமும்,

மனிதன் எவ்வாறு தோன்றினான் என்றும், நிலம் என்றால் என்ன? நிலத்திற்குள் எத்தனை வகையான மண் அடுக்குகள் காணப்படுகின்றன? நீர் மூலம் எவ்வாறு பரவுகின்றது; தீ எப்படி பரவுகிறது; அதை எவ்வாறு தடுப்பது, (வளி) காற்று என்னென்ன வேலைகளைச் செய்கிறது; காற்றழுத்தம் ஏற்பட்டால் (கடலில்) புயல் எவ்வாறு உருவாகிறது எத்திசை நோக்கி வீசும் என்றும், விண்வெளியில் எத்தனை நட்சத்திரங்கள் உள்ளன? எத்தனை கோள் உள்ளன? அவற்றின் வேலைகள் என்ன? என்று ஆராயும் அறிவியல் நெறியிலார் ஒரு பக்கமும் தத்தம் கண்ணோட்டத்தில் ஆராய்கின்றனர்.

இருந்தபோதிலும் ஐம்பூதங்கள் என்று சொல்லப்படும் நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் ஆகியவற்றை யாராலும் முழுமையாகப் புரிந்து கொள்ள முடியவில்லை. இவ்வாறு புரிந்து கொள்ள முடியாத தத்துவத்தைப் பற்றியக் கருத்தை சங்க இலக்கியங்கள் எவ்வாறு உரைத்துள்ளன என்றும், அக்கருத்துக்களின் செல்வாக்கினைக் கீழ்க்கணக்கு நூல்கள் எவ்வாறு பெற்றுள்ளன என்பதும் இவண் ஆராயப்படுகிறது. இயற்கையாகிய ஐம்பெரும் பூதங்களையும் கூறும்போது,

மண் திணிந்த நிலமும்,
நிலம் ஏந்திய விசும்பும்,
விசிம்பு தைவரு வளியும்
வளித் தலைஇய தீயும்
தீ முரணிய நீரும் என்றாங்கு
ஐம்பெரும் பூதத்து இயற்கை போல[101]

என்றுப் புறநானூறு கூறுகின்றது. இவற்றின் தன்மையைச் சேரமான் பெருஞ்சோற்று

ஊதியனுக்கு எடுத்துக் கூறப்பட்டுள்ளன. மேலும் சேரலாதனது மாண்பையும், அவனால் காக்கப்பட்டு வந்த சேர நாட்டின் வளமையினையும் குறுங்கோயூர்கிழார்,

இரு முந்நீர்க் குட்டமும்
வியன் ஞாலத்து அகலமும்
வலி வழங்கு திசையும்
வறிது நிலை இய காயமும், என்றாங்கு[102]

எனக் குறிப்பிட்டுள்ளார். இக்கருத்துக்களைக் கீழ்க்கணக்கு நூல்கள் எவ்வாறு ஏற்றுள்ளதென்பது வருமாறு,

ஐம்பூதங்களை விளக்குவாரது நிலம், நீர், தீ, காற்று, வான் என்ற ஐம்பூதங்களையும், அந்தணர்களையும், பசுக்களையும், திங்களையும், சூரியனையும், தம் உடம்புபோல எண்ணாது இகழ்வோனாயின் ,அவனது உடலில் உள்ள ஐந்து பூதத்தையுடைய தெய்வங்கள் அன்றே அகன்று போய்விடும் என்ற கருத்து,

ஐம்பூதம் பார்ப்பார் பசுத்திங்கள் ருதமிறு
தத்தம் பூதம் எண்ணாது கிதழ்வோனல் தம் மெய்க்கண்
ஐம் பூதம் அன்றேகெடும்[103]

இப்பாடலின் மூலம் உணர்த்தப் பெறுகின்றது.

**பிறர் நலம் பேணல்**

தன்னலம் கருதாது நாட்டு மக்களின் நலத்தைக் கருதுவது சங்க காலப் புலவர்களின் நோக்கமாகும். இதற்குப் புறநானூற்றில் பல சான்றுகள் உள்ளன. சங்ககால மக்களுக்கு நல் வழி காட்டுவோராக விளங்கியவர்கள் புலவர்கள்.

அவர்களில் இருபுலவர்கள் பாடல் கருத்துக்கள் மட்டும் இங்கு எடுத்தாளப்படுகிறது. முதலாவதாகப் பாண்டியன் கடலுள் மாய்ந்த இளம்பெரும் வழுதியை எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம்.

இந்திரர்க்குரிய அமுதமே கிடைப்பதாயினும் அது தமக்கு இனியது எனக் கருதித் தாமே தனித்து உண்ணும் பண்பு இல்லாதவர் இணையற்றவர். பழிவந்தால் உலகம் முழுமையையும் கொடித்தாலும் பெற மாட்டார்கள். தமக்கென வாழாமல் பிறர்க்கென வாழும் உயர்ந்தோர் தான் இவ்வுலகம் வாழ்கிறது என்றக் கருத்தை,

உண்டால் அம்ம இவ்வுலகம் இந்திரர்
அமிழ்தம் இயைவ தாயினும் இனிதெனத்
தமியர் உண்டலும் இலரே பிறர் முனிவிலர்
துச்சலும் இலர், பிறர் அஞ்சுவது அஞ்சி
புகழெனின் உயருங் கொடுக்குவர், பழியெனின்
உலகுடன் பெறினும் கொள்ளலர், அயர்விலர்
அன்னமாட்சியனையராகித்
தமக்கென முயலான நோன்தாள்
பிறர்க்கென முயலுநர் உண்மையானே[104]

என்ற பாடல் வரிகளால் அறியலாம்.

இப்புறநானூற்றுச் செய்யுளைப் பற்றிக் கூறும்போது,

இப்புறநானூ ற்றுச்செய்யுள் உலகப் பேரறிஞர்
களும், வழிகாட்டிகளு சேர்ந்து புகழத்தக்க
ஒரு சொல்லோவியமாகும், கௌதம புத்தர்,
இயேசு கிறிஸ்து, காந்தியடிகள், ஆபிரகாம் லிங்கன்
முதலியப் பெரியோர்களுக்கு ஏற்றதொரு காவியமாகும்[105]

என அ. கிருஷ்ணசாமி கூறியுள்ளார்.

மக்களுக்கு நல்லதையே செய்ய வேண்டும் என்று கூறும்போது நல்லது செய்யாவிட்டாலும் அல்லது செய்யாதே என்று கூறுவதாக,

நல்லது செய்தல் ஆற்றீராயினும்
அல்லது செய்த லோம்புமி னதுதான்
எல்லாரு முவப்ப தன்றியும்
நல்லாற்றுப் படூஉ நெறியுமா ரதுவே[106]

இப்பாடல் அமைந்துள்ளது.

தொடர்ந்து வறுமைப்பட்டு, அடுத்தவர்க்கு உதவ முடியாது போகிற நிலையிலும், வசதி உண்டாகிறபோது பார்த்துக் கொள்ளலாம் என இருக்கமாட்டார்கள். பெரியோர்கள் மற்றவர்களுக்கு உதவுவதையும் ஒரு கடமையாகவே கருதிச் செய்து வருவர். வறுமை வயப்பட்ட நேர்ந்தாலும், பெரியோர் பிறர்க்குவுதம் கடமையில் தவறமாட்டார்கள் என்பதை பழமொழி நானூறு (83) விளக்குகின்றது. மேலும் தம்மை தேடி வந்தடைந்தவர்களுக்கும், உறவினர்களுக்கும், பசித் துன்பத்தைப் போக்காதவர்கள், பாதுகாத்தவனுக்கு உதவாத பனைமரம் போன்றவர்கள் என்பதை,

விரும்பி அடைந்தார்க்கும் சுற்றத்தவர்க்கும்
வருந்தும் பசிகளையார் வம்பர்க்கு – உதவல்

இரும்பணை வில்வென்ற புருவத்தாய் ஆற்றக்
கரும்பனை அன்னது உடைத்து[107]

என்றப் பழமொழிப் பாடலால் விளங்கிக் கொள்ளலாம்.

சங்க காலத்தில் வாழ்ந்த புலவர்கள் பலனை எதிர்பார்க்காது சமூகத்திற்கு உதவுகிற எண்ணம் கொண்டவர்கள். இம்மையிலும் மறுமையிலும் கிடைக்கக்கூடிய பலன்களை எதிர்ப்பார்த்து அறத்தை விளைபொருளாகக் கொள்ளக்கூடாது என்னும் கருத்தை உட்கொண்டு உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் என்பார்,

இம்மைச்செய்தது மறுமைக்கும் ஆம் எனும்
அறவிலை வணிகன் அயலன் பிறரும்
சான்றோர் சென்றநெறியென
ஆங்குப்பட்டனற்று அவன் கைவண்மையே[108]

எனக் கூறுவர். இதனால் சங்க காலத்தில் வாழ்ந்தோர் தாம் ஒருவருவக்கு உதவி செய்யும்போது மறுமைப் பயனை எதிர்பார்க்கவில்லை.

நீண்ட காலம் வாழ்வைக் கொடுக்கும் நெல்லிக்கனியைத் தான் உண்ணாது ஔவையாருக்குக் கொடுத்து அவர் நீண்டநாள் வாழும்படி செய்த அதியமான் நெடுமான் அஞ்சியும், ஒரு வாளைக் கொடுத்துத் தன் தலையை அறுத்துத் தன் தம்பியிடம் கொடுக்கும்படிச் சொன்ன குமணனும் இந்த பண்புக்குரியவர்களாவர்.

இம்மை, மறுமை பற்றியக் கருத்துக்கள் கீழ்க்கணக்கு நூல்களுள் மிகுதியாக செல்வாக்குப் பெற்றன.

இப்பிறவியிலே ஒருவன் செய்த தீவினையை இப்பிறவியிலே அவனையடைந்து பயனைக் கொடுக்கும் என்ற கருத்தை,

இம்மையால் செய்ததை இம்மையே ஆம்போலும்
உண்மையே ஆமென்பார் ஓரார்கண் எனத் திணைமாலை
நூற்றைம்பது விளங்குகின்றது.[109]

**உலகநெறி**

வாழ்க்கையைத் தெளிவூட்டும் கடமையினை உணர்த்தும் கவிஞர்களை அக்கடமையினை நிறைவேற்றும் முயற்சிக்கண் மூன்று நிலையினராகக் காணும்போது,

> கவிஞர் தம்தனிநிலை ஒன்றையே நினைத்துப்
> பாடுதல் ஒரு நிலை, தம்தனிநிலை மறந்து
> சூழ்நிலையையும், சமுதாயத்தினையும்
> நினைத்துப் பாடும் நிலை மற்றொன்று
> இது இரண்டாம் நிலை, தம்மைத்துறந்து,
> தம் இனம் சூழ்நிலை முதலாயினவற்றையும்
> மறந்து, எதனையும் உலகக் கண்கொண்டு
> நோக்கும் நிலை பிரிதொன்று, இது மூன்றாம்
> நிலை கவிஞரின் உணர்வின் பொதுநலம்
> பொலிய அன்பும் அருளும் ஒளிர்வதால்
> இது உயர்ந்த நிலை என்றும் எதனையும்
> கண்கொண்டு நோக்கும்போது மூன்றாம்
> நிலை, எக்காலத்தும் உணர்வின் இமயமாய்ப்
> போற்றப்படுவது திண்ணம் என்றும் கூறுவர்.[110]

இக்கருத்துக்களை உளங்கொண்டு ஆராயும்போது எக்காலத்தும் இமயமாய் போற்றக்கூடிய பாடலை கணியன் பூங்குன்றனார் பாடியுள்ளார் என்பதை,

> இந்த நெறியில் உணர்வின் இமயமாய்
> விளங்கியயவர் கணியன் பூங்குன்றன்
> என்று அறுதியிடுவர்.[111]

இவ்வாறு கூறப்படும் சிறப்புமிக்கப் புறநானூற்றுப் பாடலை இவண் எடுத்துக் கூறுவது பொருத்தமானதாகும்.

## உலகப் பொது நோக்கு

சங்க காலத்தில் வாழ்ந்த சான்றோர்கள் விரிந்த மனப்பான்மையையும் உலகத்திலுள்ள மக்களனைவரும் ஒரே இறைவனால் படைக்கப் பெற்றவர்கள் என்ற கொள்கையையும் கொண்டிருந்தனர். வரலாற்று நிகழ்ச்சிகள் இறைவனுடைய ஆணையினாலும், வாழ்வினைப் பயனாலும் நடைபெறுகின்றன என நம்பினர். திறவோர் என்ற சான்றோர்கள் பெரிய பதவியில் இருப்பவர்கள் இகழ்ந்து பேசி வாழவில்லை. தங்களைவிடத் தாழ்ந்தவர்களை இகழ்ந்து பழித்தல் கடுகளவேனும் இல்லை என்று கணியன் பூங்குன்றனார் பாடியுள்ளார். அவற்றை,

> யாதும் ஊரே யாவரும் கேளிர்
> தீதும் நன்றும் பிறர்தரவாரா
> நோதலும் தணிதலும் அவற்றோரன்ன
> சாதலும் புதுவ தன்றே வாழ்தல்
> இனிதென மகிழ்ந்தன்றும் இலமே முனிவின்
> இன்னா தென்றலும் இலமே மின்னொடு
> வானந் தண்டுளி தலைஇ யானாது

கல்பொருது இரங்கும் மல்லல் பேர்யாற்று
நீர்வழிப்படூஉம் புணைபோல் ஆருயிர்
முறைவழிப் படூஉம் என்றபதும் திறவோர்
காட்சியில் தெளிந்தன மாதலின் மாட்சியில்
பெரியோரை வியத்தலும் இலமே!
சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே[112]

என்ற இப்பாடல் வரிகளால் உணர முடியும்.

தமிழ் இலக்கியத் திறனாய்வாளர்கள் இப்பாடல் கூறும் அறநெறிகளை ஆராய்ந்து வந்துள்ளது.

கி.மு. 7ஆம் நூற்றாண்டில் தமிழ் புலவர்கள்
உலகக் கண்ணோட்டம் கொண்டிருந்தனர்
என்பதற்கு இது தக்கச் சான்று என
எடுத்துரைக்கிறார்.[113]

மேலும் இப்பாடலை ஆராய்ந்த ஜி. சுப்பிரமணியம் பிள்ளை,

யாதும் ஊரே யாவரும் கேளிர் என்னும்
தொடர் தொன்மை வாய்ந்த இன்னிசைப்
புலவரால் இயற்றப்பட்டது. அவர்கள்
பரந்த நோக்கமுடையவர்களாய் வாழ்ந்தனர்
என்பதைப் புலப்படுத்துகிறது. மற்றும் இது
சிறந்த உலகியல் நோக்ககுடையது[114]

என்று தனது புறநானூற்றுச் சொற்பொழிவில் விளக்கியுள்ளார். மேலும் இதனை,

யாதும் ஊரே யாவரும் கேளிர் என்பதே மனிதன்
வாழும் முழு வாழ்வாகும்[115]

என்று அ.ச. ஞானசம்பந்தம் குறிப்பிடுகிறார்.

இன்றைய வாழ்க்கை முறையில் மக்களின் துன்பத்திற்குத் தன்னலம் காரணமாக அமைகின்றது என்பதை,

இன்றைத் துன்பங்களுக்கெல்லாம் காரணம்
தன்னலமும் பண்படாமையுமே என்று தெளிந்து
உணர்வின் இமயமாய் உள்ள இவ்வொரு
பாடலின் வழியினை இன்றைய உலகம்
உணருமாயின் உயிர் வாழ்வு செழிக்கும் என்பது
திண்ணம் என்று பிரா.போ. குருசாமி
எடுத்துக்காட்டியுள்ளார்.[116]

இக்கருத்தையும் பாடலையும் ஆராய்ந்த ந. சஞ்சீவி அவர்கள்,

இந்நெறி – நாம் அறிந்தும் உணர்ந்தும்,
போற்றியும் வாழ்வதற்குரியது'
எனக் குறிப்பிடுவர்.[117]

இவ்வாறாகச் சங்கத் தமிழர்கள் ஏற்றுப் போற்றிய நெறியைக் கீழ்க்கணக்கு நூல்களில் செல்வாக்குற்றிருக்கிறதா? என்பதை ஒப்பிட்டு ஆய்வது பொருத்தமானதாகும்.

சங்க காலப் புலமையினையும் வாழ்க்கை நெறிகளையும் கீழ்க்கணக்கு நூல்களை இயற்றியப் புலவர்கள் உளங்கொண்டு போற்றியதை,

நல்லார்க்கும் தம்மூரென்று ஊரில்லை நன்னெறிச்
செல்வார்க்கும் தம்மூரென் றூரில்லை – அல்லாக்
கடைக்கட்கும் தம்மூரென் றூரில்லை தங்கைத்(து)
உடையார்க்கும் எவ்வூரும் ஊர்[118]

என்ற நான்மணிக்கடிகையின் வழி அறியமுடிகிறது.

மனித குலத்தைச் சாதி சமய அடிப்படையிலும், குடிப்பிறப்பு அடிப்படையிலும் பிரித்துப் பார்க்காதீர்கள் எல்லா குடியிலும், எல்லா சாதியிலும் நன் மக்கள் தோன்றுவர். அதனால் யாதும் ஊரே, யாவரும் கேளிர் என்ற கருத்தை மனதில் கொள்க எனக் கூறுவதாக,

கள்ளி வயிற்றில் அகில் பிறக்கும் மான் வயிற்றில்
ஒள்ளரி தாரம் பிறக்கும், பெருங்கடலுள்
பல்வினைய முத்தம் பிறக்கும் அறிவார்பார்
நல்லாள் பிறக்கும் குடி[119]

என நான்மணிக்கடிகை சுட்டுகின்றது.

நிலவெல்லை விரிவிற்காக அரசு உருவாக்கத்தில் எழுந்த சங்கப் பாக்கள் அத்தேவையை முழுமையாகச் சுமந்து வெளிப்படுத்தின. போர்க்கால விளைவால் ஏற்பட்ட அமைதியின்மையைப் போக்க இறுதிக் கட்ட சங்கப் பாடல்களும் தொடர்ந்து எழுந்த கீழ்க்கணக்கு நூல்களும் தன் பணியை ஆற்றின. இந்நிலையில் நீதியை நிலைநாட்ட வெண்பா யாப்பே ஏற்றதெனக் கொண்டனர்.

தனிப்பாடல் வகைமையினின்று அறப்பாடல் வகைமையாக நீதிநூற்கள் எழுந்தாலும், சங்க இலக்கியச் செல்வாக்கிற்கு உட்பட்டு புதிய இலக்கியத் தேவையை மானுடத்திற்கு நீதிநூற்கள் வழங்கினவென்பதை மேற்கண்டவாறு துணியலாம்.

## அடிக்குறிப்புகள்

1. ச.வே. சுப்ரமணியன், தமிழ் இலக்கியக் கொள்கை - ஓர் அறிமுகம், தொகு - 1

2. ஆ. வேலுப்பிள்ளை, தமிழ் இலக்கியங்களில் காலமும் கருத்தும், மேலது, ப. 40

3. மேலது - ப. 40

4. ஜி. ஜான் சாமுவேல், இலக்கிய ஒப்பாய்வுக் களங்கள், ப. 25

5. மேலது - ப. 112

6. சரோஜினி, இலக்கியத்தில் பெண் நீதி, ப.1

7. தமிழ் மொழியகராதி, ப. 990

8. க.த. திருநாவுக்கரசு, திருக்குறள் நீதி இலக்கியம், ப. 16

9. வ. பெருமாள், இலக்கியமும் வாழ்க்கையும், ப. 92

10. சி.எம். இராமச்சந்திர செட்டியார், கொங்கு வேளிர், ப. 99 - 100

11. சாமி. சிதம்பரனார், கட்டுரைத் தொகுப்பு, தொகு - 11, ப. 35

12. க.த. திருநாவுக்கரசு, திருக்குறள் நீதி இலக்கியம், ப. 24

13. க.ஆ.சி. வேங்கடபதி, க.த. அறநூல் இயல்புகள், ப. 471 பதினான்காவது கருத்தரங்க ஆய்வுக் கோவை, தொகு - 3

14. சங்க இலக்கியக் கட்டுரைகள், க.ஆ. இரா. சாரங்கபாணி, க.த. சங்க இலக்கியத்தில் அறவியல் நோக்கு, ப. 82

15. மேலது - ப. 83

16. சிறுபாண் - 85 - 111

17. பழமொழி - 75

18. புறம் - 186

19. புறம் - 187

20. பட்டினப் - 283 - 286

21. பழமொ - 257

22. சிறுபஞ் - 66

23. புறம் - 55

24. இன்னா - 3

25. புறம் - 184

26. பழமொ - 246

27. இன்னா - 5

28. நான்மணி - 29

29. புறம் - 9

30. பழமொ - 325

31. புறம் - 5

32. புறம் - 27:11

33. குறுந் - 20:1

34. மேலது - 174:7

35. மேலது - 395:2

36. நற் - 261

37. பொ.வெ. சோமசுந்தரனார் உரை, சிறுபாண், ப. 24

38. மேலது - 85 - 86

39. சிறுபஞ்ச - 3

40. மேலது - 59

41. தொல் - அகத் - 25

42. முதுமொழிக் - 1

43. புறம் - 183: 1 - 2

44. இனியவை - 1

45. புறம் - 183

46. சிறுபஞ்ச - 5

47. மேலது - 20

48. மேலது - 37

49. மேலது - 56

50. நான்மணி - 65

51. இனியது - 32

52. இன்னா - 19

53. மேலது - 28

54. முதுமொழிக் - 8

55. மேலது - 14

56. மேலது - 46

57. பழமொழி - 5

58. புறம் - 215

59. மேலது - 216

60. மேலது - 222

61. மேலது - 242

62. நற் - 355

63. இன்னா - 8

64. திருக் - 786

65. முதுமொழிக் - 43

66. மேலது - 45

67. ஐந் - ஐம் - 23

68. புறம் - 34

69. சிறுபாண் - 208 - 209

70. மேலது, உரை எழுதியோர் கருத்து, ப. 49

71. இனியது - 30

72. பழமொழி - 345

73. புறம் - 74

74. இனியது - 13

75. புறம் - 204

76. முதுமொழிக் - 59

77. புறப் - 189: 7 - 8

78. மேலது - 204

79. முதுமொழி - 34

80. மேலது - 44

81. மேலது - 48

82. மேலது - 55

83. மேலது - 60

84. புறம் - 10 - 11

85. அகம் - 268:13

86. நான்மணி - 10

87. ஆசாகோ - 40

88. மேலது - 79

89. மேலது - 81

90. திரி - 6

91. கலித் - 77 - 9

92. நான்மணி - 8

93. புறம் - 139: 5 - 6

94. மேலது - 53: 11 - 12

95. மேலது - 168: 19 - 20

96. மேலது - 148: 5 - 7

97. சிறுபஞ்ச - 19

98. மேலது - 39

99. ஏலாதி - 33

100. மேலது - 44

101. புறம் - 2

102. மேலது - 20

103. ஆசாகோ - 15

104. புறம் - 182

105. சங்க இலக்கியக் கட்டுரைகள் க.ஆ. கிருஷ்ணசாமி, க.த. சங்க இலக்கியத்தில் வரலாற்று நோக்கு, ப. 185

106. புறம் - 195

107. பழமொழி - 221

108. புறம் - 134

109. திணைமாலை - 123

110. ம.ரா.போ. குருசாமி, வாழ்வும் வழியும், ப. 117

111. மேலது, ப. 135

112. புறம் - 192

113. சி. இலக்குவனார், பழந்தமிழர்களின் உலகக் கண்ணோட்டமும், குறள்நெறி (இதழ் - 1.7.68)

114. ஜி. சுப்பிரமணியம்பிள்ளை, புறநானூறு - சொற், ப. 31

115. அ.ச. ஞானசம்பந்தம், அகமும் புறமும் (அகம்), ப. 23

116. ம.ரா.போ. குருசாமி, வாழ்வும் வழியும், ப. 135

117. ந. சஞ்சீவி, சங்ககாலச் சான்றோர்கள், பக். 150 - 151

118. நான்மணி - 84

119. மேலது - 6

## நுண்கலைச் செல்வாக்கு

**கலை**

மானுடத் தேவைகளின் பதிவாக இலக்கியம் பிறக்கும்போது, கலையும் உடன் வளர்கிறது. கலை பற்றி வாழ்வியல் காலந்தோறும் இலக்கியத்தில் பதிவாகின. அப்பதிவுத் தொடர்ச்சியை இவண் காணலாம்.

கலையைப் பற்றிக் குறிப்பிடும்போது,

> கலை என்பது மனிதனது உள்ளத்தைத்
> தன் வயமாக்கி அவ்வளவோடு நில்லாமல்
> வெளிப்படும் ஆற்றல் என்பர்

கலையைத் திறனாய்வு செய்த ஆபர்கிராம்பி குறிப்பிட்டவற்றை எடுத்துக்கூறி,

> கலை என்பது ஒருவகை ஆற்றல், குறிப்பிட்ட
> ஒரு வழியை மேற்கொண்டு முன்னரே
> கலைஞன் மனத்தில் தோன்றிய ஒரு
> பயனை பிறர் அறியச் செய்யும்
> ஆற்றலே யாகும் அது

என்கிறார் அ.ச. ஞானசம்பந்தம்.

மேலும் மனிதர்களிடம் இக்கலை எப்படித் தோன்றியது, அவற்றின் தன்மை என்ன என ஆராயும்போது,

> பழங்காலத்தில் வாழ்ந்த மனிதர் தங்கள்
> கருத்துக்களில் தோன்றிய சிறந்த உண்மைப்
> பொருள்களை கலைகளின் மூலமே,
> வெளியிட்டனர். அவர்கள் வாழ்க்கையில்
> பெற்றிருந்த பண்பாட்டை இன்று நமக்கு
> அறிவிக்கும் கருவியாகக் திகழ்வன
> அவர்கள் ஆக்கிய கலைகளாகும்.
> இயற்கையிலும், உலகின் வளர்ச்சியிலும்
> காணப்படும் எந்த ஒரு சக்தி உண்டோ
> அந்த சக்தியே கலையிலும் வெளிப்படுகிறது
> என்பர்.[1]

## நடனக் கலைச் செல்வாக்கு

பண்டு ஆடல், பாடல், அழகு என்ற மூன்றையும் பேணும் நிலையில் நடனம், இசை, ஆடை, அணிகள் போன்ற கலைநுட்பங்களை ஆதரித்து வளர்த்து வந்தனர்.

'ஓவத்தனன் இடனுடைய வரைப்பின்' என்பதால் ஓவியக்கலை போற்றப்பட்டு வந்துள்ளது என அறியமுடிகிறது. இவ்வாறு சங்க இலக்கியங்களில் போற்றப்பட்டக் கலைகள் கீழ்க்கணக்கு நூல்களில் எவ்வாறு செல்வாக்கை ஏற்படுத்தின என்பதை இவ்வியலில் ஆராய்வது பொருத்தமானதாக அமையும்.

**நடனம்**

பாரி நாட்டின் மீது மூவேந்தரும் போரிடுவதற்கு வந்தபோது அவர்களைக் கண்டு கபிலர் கூறியதாக அமைந்த புறநானூற்றுச் செய்யுளில்,

> சுகிர்புரி நரம்பின் சீறியாழ் பண்ணி
> விரையொலி கூத்தனும் விறலியர் பின்வர
> ஆடினர், பாடினர் செலினே
> நாடுங் குன்று மொருங்கீ யும்மே[2]

என்றுக் குறிப்பிடுகின்றார்.

கோப்பெருஞ்சோழனின் புகழைப்பாட வந்த பொத்தியார்,

> பாடு நர்க்கீத்த பல்புகழன்னே
> ஆடு நர்க் கீத்த பேரன் பினனே[3]

என்று மனமுருகிக் கூறுவர்.

கூத்தர் தலைவன் பொற்றாமரை சூடவும் விறலியர்கள் அழகிய பேரணிகலன்களைப் பூணவும் நன்னன் சேய் நன்னன் பரிசு அளித்தான் என மலைபடுகடாம் விளக்குகிறது.[4]

விறலியர்கள் என்பவர்கள் ஆடுமகளிராவர். அவர்கள் ஆடற்கலையில் வல்லவர்களாயிருந்தனர். அதனால் அரசனையும், அரசவையினரையும் மகிழ்வித்து அதன் வழி பெறும் பரிசு பெற்று வாழும் வாழ்க்கையாராவர். இவர்களின் இளமையின்

அழகினை ஆற்றுப்படை நூல்கள் எடுத்துரைக்கின்றது. சங்க இலக்கியங்கள் நடனக் கலையைப் பெரிதும் போற்றியுள்ளன.

சங்க காலத்தில் நாட்டியத்தைக் குறிப்பதற்கு ஆடல், கூத்து என்ற சொற்களையே பயன்படுத்தியுள்ளனர். இக்கூத்தில் வள்ளிக் கூத்து, குரவை கூத்து ஆகியவை அடங்கும். சங்க காலத்தில் எழுந்த அகநானூறு என்னும் அகநூலில் மயில் ஆடுவதை விறலியாடுவது போலுள்ளதெனக் கூறப்பட்டுள்ளது.

அசைகின்ற மூங்கிலின் துளையுள்ள இடங்களில் வீசும் மேற்காற்றினால் எழும் ஒலியானது இசையாகவும், இன்னொலியுடனே வீழுகின்ற அருவியின் இனிய ஓசையே தொகுதியுடைய குழுவின் இசையாகவும், கலை மான்களின் கூட்டம் தாழ ஒலிக்கும் கடுங்குரல் பெருவங்கியத்தின் ஒலியாகவும், மலையகத்துப் பூஞ்சாரலிலுள்ள வண்டுகளின் ரீங்காரமே இனிய யாழிசையாகவும், இங்ஙனம் இனிய பலவாகிய இசைகள் கானகத்திலே விளங்கும். அவற்றை மந்திகள் வியப்புடன் நோக்கின. இவ்வாறு அமைந்துள்ள மலையடுக்குகளிடையே ஆடுகின்ற மயிலினங்கள் களத்திலே புகுந்து ஆடும் விறலியரைப் போன்று தோன்றும் என அகநானூறு கூறுவதை,

ஆடுஅமைக்குயின்ற அவிர்துளை மருக்கின்
கோடை அவ்வளி குழலிசையாக
பாடுகின் அருவிப் பனிநீர் இன் இசைத்
தோடுஅமை முழவின் துரைகுரல் ஆகக்
கணக்கலை இருக்கும் கடுங்குரற் றூம்பொடு
மலைப்பூஞ் சாரல் வண்டு யாழ்ஆக
இன்பல் இமிழிசை கேட்டுக் கலிசிறந்து,
மந்தி நல்அவை மருள்வன நோக்கிக்
கழைவளர் அடுக்கடுத்து, இயலி ஆடுமயில்
நனவுப்பகு விறலியின் தோன்று நாடன[5]

என்ற இச்செய்யுளினால் நடனக்கலையின் தன்மையை உணர்ந்து கொள்ள முடிகிறது.

சங்க இலக்கியங்களில் இடம்பெறும் நடனக்கலை விரிந்த எல்லையை உடையது. ஆனால் கீழ்க்கணக்கு நூல்களில் சில கூறுகளே இடம் பெற்றுள்ளன. அகநானூற்றில் நாட்டியம் ஆடும் விறலியரின் நிலை மயில்வாயிலாகக் காட்டப்பட்டுள்ளதைப்போல், கீழ்க்கணக்கு நூலாகிய திணைமாலை நூற்றைம்பதிலும் இடம் பெற்றுள்ளதை,

கானம் கடியரங்காக் கைம்மறிப்பக் கோடலார்
வானம் விளிப்பவண்(டு) யாழாக – வேனல்
வளரா மயிலாட வாட்கண்ணாய்! சொல்லாய்
ஊராகி உய்யும் வகை[6]

என்ற செய்யுள் விளக்கி நிற்கின்றது. தலைவன் அனுப்பிய பல தூதுகளை மறுத்து விட்ட தலைவி விறலியின் தூதினையேற்று தலைவனோடு மகிழ்ந்திருந்தமை கண்ட விறலி கூறுவதாக ஒரு பாடல் அமைந்துள்ளதை,

கிழமை பெரியோர்க்குக் கேடின்மை கொல்லோ
பழமை பயன்நோக்கிக் கொல்லோ – கிழமை
குடிநாய்க்கர் தாம் பல பெற்றாரின் கேளா
அடியேன் பெற்ற அருள்[7]

என எடுத்துரைக்கிறது.

## அடிக்குறிப்புகள்

1. அ.ச. ஞானசம்பந்தன், இலக்கியக் கலை, ப. 334
2. புறம் - 109
3. மேலது - 221
4. மலைபடு - 569 - 70
5. அகம் - 82: 1 - 10
6. திணைமாலை - 11
7. மேலது - 134

# ஆடை அணிகலன் செல்வாக்கு

ஆடை அணிகலன் மக்களின் அவசியமாக உணரப்பட்டபோது இவற்றின் அழகியல் இலக்கியப் பாடுபொருளாக அமைந்தன. இவ்வாறே இருகால இலக்கியமும் பதிவு செய்ததைப் பின்வருமாறு அறியலாம்.

சங்க கால மக்கள் நூல் நூற்றலைச் சிறந்த் தொழிலாக மதித்தனர். சங்க காலப் பெண்கள் வெவ்வேறு நிறங்களையும், வெவ்வேறு பண்புகளையும் உடைய நூற்சீலைகளையும், பட்டுச் சீலைகளையும் உடுத்தினர் என்பதை அக்கால இலக்கியங்களின் வழி அறிய முடிகிறது. அவைகளாவன,

சிதாஅர் துவர நீக்கி
நோக்கு நுழை கல்லா நுண்மையை பூக்கனித்து
அரவுரி யன்ன அறுவை நல்கி[1]

என இழை சென்ற வழி தெரிதலில்லாத நுண்மையுடையனவும், பூந்தொழில் முற்றுப் பெற்றனவும் பாம்பின் தோலை ஒத்தனவும் ஆகிய சிறந்த ஆடை என பொருநராற்றுப்படை விளக்குகிறது. மேலும் சிறுபாணாற்றுப்படை,

நீல நாகம் நல்கிய கலிங்கம்[2]

என்றும் விளக்குகின்றது. இவ்வரிகளால் இவர்கள் உடுத்திய ஆடைகள் கலிங்கம் என்றும், அறுவை என்றும் பெயர்பெற்றன எனத் தெரிகின்றது. இன்னும் பல இடங்களில் துணியைப் பற்றிய குறிப்பு இடம் பெறுகின்றன.[3]

சங்க காலத்தில் காணப்படும் ஆடைகளைப் போன்று கீழ்க்கணக்கு நூற்கால மக்களும் அணிந்தனர் என்பதை கீழ்க்கணக்கு நூற்களின் வழியாக அறியமுடிகிறது.

ஆம்பல் மலர்களால் அழகு செய்யப்பட்ட சந்தனத்தழைகளை அணிந்தனர் என்பதை,

ஆம்பல் அணித்தழை ஆரம்துயல்வரும்[4]

என்ற வரிகளால் அறியலாம். ஆடைகளைக் குறிப்பதால் அர்த்தம் என்ற சொல்லைக் கையாண்டனர்.

அக்கால மகளிர் பட்டாடைகளை உடுத்தினர். அரத்தம் - என்ற சொல்லுக்குச் செம்பட்டு என்று பொருள் கூறுகின்றனர்.

அரத்தம் உடீஇ அணி பழுப்பப் பூசிச்[5]

என்ற திணைமாலை வரியால் அறியமுடிகிறது.

**சாந்து பூசுதல்: மாலை அணிதல்**

பண்டைய தமிழ் மக்கள் செஞ்சாந்து பூசினர் என்ற செய்தியும் காணப்படுகின்றது. மலைச் செஞ்சாந்தினைப் பூசிக் கொண்ட மார்பினையுடைய தலைவன் என்றும் அவன் முத்துமாலைகளையும், குவளைமலரையும் தனது மார்பில் அணிந்திருந்தான் என்பதை,

மலைச்செஞ்சாந்தின் ஆர மார்பினன்
சுனைப் பூங்குவளைச் சுரும்பு ஆர் கண்ணியன்[6]

என்றும்,

ஓங்குமலை நாடன் சாந்துபுலர் அகலம்[7]

எனவும் மயிர்ச்சாந்து இட்டுக் கோதிய நறுமணமுடைய கூந்தலின் எண்ணெய் தடவிய செய்தியை,

சாந்துஉளர் நறுங்கதுப்பு எண்ணெய் நீவி[8]

என்ற வரியால் உணரமுடிகிறது. இவ்வாறு சாந்து பூசி குவளை மலரால் மாலை சூடும் வழக்கம் இருந்ததென கீழ்க்கணக்கு நூல்களும் கூறுகின்றன.

நிறம் மாறும் படியாகச் செஞ்சாந்தினைப் பூசி, மிக்க கருத்துடன் கூடிச் சிவந்த குவளை மலர்களைச் சூட்டினர் என்ற செய்தியை,

………………. அணிபழுப்பப் பூசிச்
சிரத்தையால் செங்கழுநீர் சூடி[9]

எனத் திணை மாலை நூற்றைம்பது கூறுகின்றது.

**அணிகலன்கள்**

பழந்தமிழ் மக்கள் பொன், மணி, பவளம், முத்து முதலிய உயரிய பொருள்களைக் கொண்டு விலையுயர்ந்த அணிகளைச் செய்து அணிந்து மகிழும் பண்புடையவர்களாக இருந்துள்ளனர் என்பதை அக்கால இலக்கியங்களின் வழி அறியமுடிகிறது. அவைகளாவன,

பொன்னுந் துகிரும் முத்து – மன்னிய
மாமலை பயந்த காமரு மணியும்[10]

என்றும்,

மலைபயந்த மணியுங் கடறுபயந்த பொன்னும்
கடல் பயந்த கதிர் முத்தமும்[11]

என்றும் புறநானூறு விளக்குகின்றது.

இவ்வாறு இடம்பெறும் பொன், மணி, முத்து, பவளம் போன்ற மணிகளைப் பற்றிய செய்தியைக் கீழ்க்கணக்கு நூல்களும் கூறுகின்றன. அவைகளாவன,

பவளமும் முத்தும் பளிங்கும் விரைஇப்[12]

என்றும்,

கடல் கொழித்து இட்ட கதிர்மணி முத்தம்[13]

எனவும்,

தொடிகை யிடைமுத்தம் தொக்கு[14]

எனத் திணைமாலையும்,

கண்திரள் முத்தம்[15]

என ஐந்திணை எழுபதும் அணிகலன்களைப் பற்றி விளக்கி நிற்கின்றன.

இந்த அணிகலன்கள் மட்டுமின்றி வளையல் போன்ற அணிகளையும் அணிந்தனர் என்பதை ஆம்பல் மலரால் வளையல் செய்து அணிந்த செய்தியினை,

ஆம்பல் வள்ளித் தொடிக்கை மகளிர்[16]

எனப் புறநானூறு கூறுகிறது. அக்காலத்தில் மகளிர் வளையல்கள் அணிந்திருந்தனர்.

தலைவன் வராதபோதும், காதல் மிகுதியாகும் போதும் கைவளையல்கள் கழன்றன என்ற செய்தியை அறியுமுகத்தான்,

> கழல்தொடி ஆஅய் மழை தவழ்[17]
> ஒண்தொடி மகளிர் வண்டல் அயரும்[18]
> தொடிநெகிழ்ந்தனவே[19]
> ஒண்தொடி மகளிர் வண்டல் அயரும்[20]

என்ற குறுந்தொகை வரிகளால் அறியமுடிகின்றது.

கீழ்க்கணக்கு நூல்களில் பல அணிகலன்களைப் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. மக்கள் வேலைப்பாடுகள் செய்யப்பட்ட அணிகலன்களை அணிந்து மகிழ்ந்தனர். காதணி, மோதிரம், வளையல் உள்ளிட்ட அணிகளை அணிந்து இன்புற்ற செய்தியை இலக்கியச் சான்றுகளின் மூலம் அறியலாம்.

**வேலைப்பாடு நிறைந்த அணி**

பொன்னால் செய்யப்பட்டவை வேலைப்பாடு நிறைந்தவை.

> சித்திரப் பூங்கொடி அன்னாட்(கு) அருள் ஈயாய்
> வித்தகப் மைப்பூணின் மார்பு[21]

எனவும் அழகிய அணிகளை அணிந்த தலைவியே என்பதை,

> இன்சொல் அணியிழாய்[22]

என்றும் திணைமொழி கூறுகிறது.

**மோதிரம்**

அக்காலத்தில் சக்கரத்தைப் போன்ற மோதிரத்தை அணிந்தனர் என்ற செய்தியை,

> வளைஇய சக்கரத்(து) ஆழி[23]

என்று குறித்துள்ளது.

**வளையல்கள்**

நன்றாக வேலைப்பாடுகள் செய்த வளையல்களை அணிந்தனர், வரிகள் பொருந்திய வளையல்களை அணிந்தனர் என்பதை,

> வரிவளைத் தோனி வருவார்[24]

என்றுக் கூறப்பட்டுள்ளது. மேலும் வளையல்களைப் பற்றிய செய்தியை,

சென்றார் வருதல் செறிதொடி[25]
எல்வளை மென்தோள் நெகிழ[26]
வளையொடு சோரும்[27]

என்றுக் கீழ்க்கணக்கு நூல்கள் கூறுகின்றன.

சங்க கால மக்களும் கீழ்க்கணக்கு நூலெழுதிய காலத்தில் வாழ்ந்த மக்களும் நாகரீகப் பண்பாட்டுடன் வாழ்ந்தனர் என்ற செய்தியை அறிய முடிகின்றது. இக்கருத்துக்களை,

ஒரு நாட்டின் நாகரிகத் தொன்மையை
அறிந்துகொள்ள அந்நாட்டின் பழங்குடிமக்கள்
அணிந்த ஆடைகளும் அணிகலன்களும்
சிறந்த சான்றுகளாகும். தமிழகம் மனித
சமுதாயத்தினுடைய நாகரிகத்தின் தொட்டில்
ஆகவே மனித நாகரிகத்தின் வரலாற்றை அறிய
விரும்புவோர், தங்கள் ஆராய்ச்சியைத் தமிழகத்திலிருந்தே
தொடங்க வேண்டும்.
இங்கு வாழ்ந்த ஆதிகுடிகளின் ஆடை
அணிகலன்களையே ஆராய்ச்சிக் கருவிகளாகக்
கொள்ளவேண்டும்[28]

என்று இலக்கியச் செல்வம் கூறுகின்றது.

இக்கருத்துக்களை ஒப்பிட்டறியும்போது சங்க கால மனிதர்கள் நாகரிகம் மிக்கவர்களாக வாழ்ந்தனர் என்பதும், அக்கால இலக்கியங்களில் பதிவு செய்யப்பட்ட இக்கருத்துக்கள் அதற்குப்பின் தோன்றிய கீழ்க்கணக்கு நூல்களிலும் செல்வாக்குப் பெற்றுள்ளதையும் அறியமுடிகிறது.

பண்பாட்டு வளர்ச்சியை விரித்துக் கூற வெண்பா வடிவம் இடம்தரா நிலையில் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் பாங்கில் சங்கப் பா உள்ளடக்கம் கீழ்க்கணக்கு நூற்களில் தாக்கம் பெற்றுள்ளது.

## அடிக்குறிப்புகள்

1. பொரு - 81 - 84
2. சிறுபாண் - 96
3. மலைபடு - 561, பொருந - 82
4. திணைமொழி - 40:6
5. திணைமாலை - 144
6. குறுந் - 321: 1 - 2
7. மேலது - 150:3
8. மேலது - 312:6
9. திணைமாலை - 144
10. புறம் - 218: 1- 2
11. மேலது - 377: 16 - 17
12. திணைமொழி - 50
13. மேலது - 45
14. திணைமா - 42
15. ஐந் - எழு - 61
16. புறம் - 63:12
17. குறந் - 84:3
18. மேலது - 243:3
19. மேலது - 239:1
20. மேலது - 238:3
21. திணைமொழி - 42
22. மேலது - 43

23. ஐந் - எழு - 56

24. திணைமொழி - 42

25. திணைமாலை - 79

26. திணைமொழி - 17

27. மேலது - 19

28. ம.பொ. சிவஞானம், இலக்கியச் செல்வம், ப. 99

## இசைச் செல்வாக்கு

இசைக்கலை நுண்கலைகளோடு தொடர்புடையனவாகும். சங்க காலத்தில் இக்கலையின் செல்வாக்கு கீழ்க்கணக்கு நூல்களில் எவ்வளவு தாக்கத்தை ஏற்படுத்தியுள்ளது என ஆராய்வதும் பொருத்தமானதாக அமையும்.

மக்களின் இசை எழுச்சியை,

> புனத்திலும், பொழிலிலும், குன்றத்தின் மீதும்,
> மருத ண்பணைய்யிலும், முல்லைப் புறவத்திலும்,
> கடற்கானலிலும், கான்யாற்றுக் கரையிலும்,
> அருஞ்சுரத்திலும், மனையின் கத்தும் மன்றத்தினுள்ளும்,
> தேவர் கோட்டத்தும், அறவோர் பள்ளியிலும்,
> இசை வழங்கிய தமிழ்நாடு, மெல்லென்
> றிசைக்கும் தென்றலி னுயிர்ப்பினும் இழுமென
> இழி தரும் அருவி நீரிலும், நறுமலரில் முரலுகின்ற
> தேன்வண்டி னொலியிலும் இசையினைக் கேட்டு
> உவந்த பழந்தமிழர் பாடன் மகனது மிடற்றுப்
> பாடலையும், பாணனிசைத்த யாழ் பாடலையும்
> குழலோன் தந்த வங்கியப் பாடலையும் செவியாரக்
> கேட்டு இன்பமெய்தினர்[1]

என விபுலானந்தர் குறிப்பிடுகிறார்.

### இசையும் இலக்கியமும்

இலக்கியப் படைப்பாளர்கள் இசைக்கருவிகளை உவமமாக இலக்கியத்தில் இடம்பெற வைத்துள்ளன. மேலும் இசைக்கலை யாப்பியலோடு தொடர்புடையது என்பதை,

> தமிழ் யாப்பியலோடு இசை இணைந்து
> வளர்ந்துள்ளது. மக்கள் வாழ்வில் இடம்பெற்ற

> இசை, பாட்டாக வருதல், பாடும் கலைக் குடும்பத்தாருடன் இலக்கியத்தில் இசை இடம் பெறல், இலக்கியப் பாத்திரங்களின் இசையறிபு இலக்கியத்தின் பொருண்மையாக வரல் என்னும் நிலைகளில் இலக்கியமும் இசையும் இரண்டாக எண்ண முடியாதவாறு தமிழ் இலக்கிய வரலாற்றில் இடம் பெற்றுள்ளன என்பர்.[2]

மேலும் இசைக்கருவிகளிலிருந்து எழும் இசையானது வண்டுகளின் ஓசைக்கும், அருவிகளின் நீர் விழும் சப்தத்திற்கும் உவமையாகக் குறித்துள்ளதை மறுக்க முடியாது.

**சங்க கால இசை**

சங்க காலத்தில் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு ஆகிய நூல்களில் யாழ், குழல் பற்றிய செய்திகளும் அவற்றில் எழும் பண்களைப் பற்றியும் விளங்குகிறது. மேலும் தோற்கருவிகளும், துளைக்கருவிகளும் குறிப்பிடப்பட்டுள்ளன. சங்க நூல்களில் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்ற ஐந்திணைகளுக்கும் உரிய இசைக்கருவியாக யாழும் பறையும் குறிப்பிடப்பட்டுள்ளன. அவற்றின் பண்கள் குறிஞ்சிப்பண், முல்லைப்பண், மருதப்பண், நெய்தல்பண், பாலைப்பண் என்று அத்திணைகளின் பெயர்களாலேயே குறிப்பிடப்பட்டுள்ளன.

கீழ்க்கணக்கு இலக்கியங்களில் விளரி, துத்தம், செவ்வழிப்பண் போலவே சாதாரிப்பண், காந்தாரப்பண் முதலியன இடம்பெறுகின்றன. பூக்களில் மொய்க்கும் ஒலியோடு சதாரிப்பண்ணும் இசைத்த செய்தியை,

> போதாரி வண்டெல்லாம் நெட்டெழுத்தின் மேற்புரியச்
> சாதாரி நின்றறையும் சார்ந்து[3]

என்றுத் திணைமாலை விளக்குகிறது.

**காந்தாரம்**

சந்தனச் சோலைகளிலும், தேன்மிகுந்த பொழிலில் வளர்கின்ற முல்லைக் கொடிகளிலும் தங்கியுள்ள இனிய தேன் வண்டுகள் மகிழ்ச்சி கொண்டு காந்தாரம் என்னும் பண்ணிசைப் பாடலாயின என்பதை,

........................ வருமுல்லை சேர்ந்தீந்தேன்
காந்தாரம் பாடும் களித்து[4]

என்றுக் கூறுகின்றது.

**குழல் – துளைக்கருவி**

யாழுக்கு அடுத்தபடியாக குழல் கூறப்படுகிறது. குழலில் பலவகை இருந்ததையும், கோவலர்கள் இதனை இசைத்தமையும் சங்க - கீழ்க்கணக்கு இலக்கியங்களிலிருந்து அறியமுடிகிறது. சான்றாக,

ஆம்பலந் தீங்குழல் தெள்விளி பயிற்ற[5]
கொன்றையந் தீங்குழல் மன்றுதோறு இயம்ப[6]
கொடுங்கோற் கோவலர் குழலோடு டொன்ற[7]

என்று சங்க நூல்களும்,

யாழும் குழலும் முழவும் இயைந்தென[8]
வண்டினம் வௌவாத ஆம்பலும்[9]
தேரோன் மலைமறைய தீங்குழல்[10]
படுவசி ஆம்பல்[11]
கானந் தலைசெயக் காப்பார் குழல் தோறை[12]
இம்மையால் செய்ததை இம்மையே ஆம்போலும்[13]

எனக் கீழ்க்கணக்கு நூல்களிலும் வந்துள்ளன.

அறக்கருத்துக்களைப் படிப்போர் மனதில் பதியும் பாங்கில் செப்பலோசை அளவோடு சங்க கால இசைச் செய்திகள் செல்வாக்குற்றுள்ளன என்று அறியமுடிகிறது.

## அடிக்குறிப்புகள்

1. விபுலானந்த சுவாமிகள், யாழ்நூல், ப. 6
2. மு. இளமுருகன், தமிழ்ப் பெருங் காப்பியங்களில் சங்க இலக்கியத்தின் செல்வாக்கு, ப. 186
3. திணைமாலை - 95
4. மேலது - 106
5. குறிஞ்சிப் - 222
6. நற் - 364:10
7. மேலது - 69:8
8. திணைமொழி - 7
9. திணைமாலை - 101
10. மேலது - 112
11. மேலது - 121
12. மேலது - 122
13. மேலது - 123

## சிற்பக்கலைச் செல்வாக்கு

சங்க இலக்கியங்களில் சிற்பக்கலைச் செல்வாக்கு போற்றப்பட்டுள்ளன. அவற்றின் தொன்மையாக விளங்கும் 'நடுகல்' பற்றிய செய்திகள் **கீழ்க்கணக்கு** நூல்களில் காணப்படுகிறது. அவையாவன,

தலைவியின் பண்புநலனை பாணனிடம் கூறிய தலைவன்
................................................ கற்பெயர் சேராள
அடல் வட்டத்(து) ஆர் உளரேல் ஆம்[1]

என விளக்குகின்றான்.

.......................... நடுகல்
விரி நிழல் கண்படுக்கும் வெங்கானம்[2]

என ஐந்திணை ஐம்பது கூறுகிறது.

தலை மகனது செலவினைத் தலைமகட்குத் தோழி உயர்த்தினால் அப்போது பாலை நிலத்தின் தன்மைகளைக் கூறும்போது,

எழுத்துடைக் கல் நிரைக்க வாயில் விழுத்தொடை
அம்மா(று) அலைககும் சுரநிரைத்(து) அம்மாப்
பெருந்தகு தாளாண்மைக்(கு) ஏற்க அரும்பொருள்,
ஆகும் அவர் காதல் அவா[3]

எனவரும் பாடலில் கல் என்பது இங்கு நடுகல்லைக் குறித்து நிற்கிறது என அறியமுடிகிறது.

**படிமம்**

உலோகத்தால் அமைக்கப்படும் தெய்வ உருவங்களை 'படிமம்' என்று கூறலாம்.1

பொன்னால் செய்யப்பட்ட பாவையை
செந்நீர்ப் பசும்பொன் புனைந்த பாவை[4]

என்றும் மதுரைக்காஞ்சி குறிப்பிடுகிறது.

ஐந்திணை ஐம்பதில், முருகப்பெருமானது வேற்படையினைப் போல மின்னி இடம் பெயர்ந்து சொல்லக்கூடிய மூன்று மதில்களும் பொன், வெள்ளி, இரும்பு என்ற உலோகங்களால் சுட்டப்பட்டது என செய்தி கூறப்படுகிறது.

........................................................
செல்வக் கடம்பமர்ந்தான் வேல்மின்னி – நல்லாய்
இயங்கையில் எய்தவன் தார்பூப்ப ஈதோ
மயங்கி வலனேருங் கார்[5]

என உலோகம் பற்றிய செய்திகள் காணப்படுகின்றது.

செல்வச் சிறார்களுக்கு அணிவதுப் 'பொற்றாலி' எனப்படும். ஐம்படைத் தாலியைப் பயன்படுத்திய செய்தி காணப்படுகிறது. இப்பொற்றாலியை ஐம்படைத்தாலி என்பர். இவற்றில் திருமாலின் சங்கு, சக்கரம், வில், வாள், தண்டு ஆகிய பஞ்சாயுதங்களின் வடிவத்தை அமைத்துச் செய்துள்ளனர் என்பதை,

செல்வர் சிறார்க்குப் பொற்கொல்லர்போல் – நல்ல
பவளக் கொழுந்தின்மேல் பொற்றாலி பா அய்த்
திகழக்கான் றிட்டன தேர்ந்து[6]

என்ற பாடல் வழி அறியமுடிகிறது.

வீரநிலைக் காலத் தொடர்ச்சி தொடர்ந்தபோது நடப்பட்ட நடுகற்கள் கீழ்க்கணக்கு நூற்களில் பதிவாகின. இந் நடுகற்களே பிற்கால உருவ வழிபாட்டிற்குரிய சிற்பக் கலைக்கு முன்னோடியாகத் திகழ்ந்துள்ளதை இப்பதிவுத் தொடர்ச்சியான் தெளிவாகிறது.

## அடிக்குறிப்புகள்

1. திணைமொழி - 150
2. ஐந் - ஐம் - 35
3. ஐந் - எழு - 29
4. மதுரைக் - 410
5. ஐந் - ஐம் - 1
6. திணைமாலை - 66

## ஓவியச் செல்வாக்கு

மனிதன் தன் எண்ணங்களுக்கும், சிந்தனைகளுக்கும் வடிவம் கொடுப்பதன் மூலம் பல கலைகள் தோற்றம் பெறுகின்றன. எழுத்தால் தன் எண்ணங்களை வெளிப்படுத்துபவன் கவிஞனாகிறான். தன் எண்ணத்தை கல்லில் வடிப்பவன் சிற்பியாகின்றான். அதுபோல் தன் உணர்வுகளையும் மனதில் தோன்றும் காட்சிகளையும் வரைந்து காட்டுபவன் ஓவியன் என அழைக்கப்படுகின்றான் என்பர்.

நெடுநீர் வார் குழை களைந்தெனக் குறுங்கண்
வாயுறை அழுத்திய வறிதுவீழ் காதின்
பொலந்தொடி நின்ற மயிர்வார் முன்கை
வலைம்புரி வளையொடு கடிகைநூல் யாத்து
வாளைப் பகுவாய் கடுப்ப வணக்குறுத்துச்
செவ்விரல் கொளீஇய செங்கேழ் விளக்கத்துப்
பூந்துகில் மரீஇய ஏந்துகோட் டல்குல்
அம்மா சூர்ந்த அவிர் நூற் கலிங்கமொடு
புன்னையா ஓவியங்க கடுப்ப[1]

என நெடுநல்வாடை விளக்குகிறது.

### ஓவியத்தின் வகைகள்

ஓவியத்துடன் இலக்கியத்திற்குள்ள தொடர்பை தமிழண்ணல் மூன்று நிலைகளில் குறிப்பிட்டுள்ளார். அவைகளாவன,

1. இலக்கியம் தோன்றத் தூண்டுகோலாக இருக்கும் (Inspiration) நிலை

2. ஓவியம் இலக்கியத்தின் பொருளாகும் (Subject matter) நிலை

3. இலக்கியம் ஓவியமாகவே அமையும் நிலை

என்பர்.[2] இம்மூன்று முறைகளிலும் கீழ்க்கணக்கு நூல்களில் மூன்றாவது நிலையே கையாளப்பட்டுள்ளன.

சங்க இலக்கியங்களைப் போல் கீழ்க்கணக்கு நூல்களில் ஓவியச் செய்திகள் நிரம்ப இடம் பெறவில்லை. இருப்பினும் புலவர்கள் பாடலிலே ஓவியத்தைப் பார்க்கும் அளவிற்கு நுட்பமாகவும் செறிவாகவும் பாடல்கள் அமைந்திருப்பது இவண் உளங்கொளத் தக்கது. அவைகளாவன,

குளிர்ந்த குளத்தில் தாமரை மலர்ந்திருக்கிறது. அம்மலரிலேயே உள்ள பெரிய ஆண் அன்னப்பறவை கீழ் உள்ள பெண் அன்னப் பறவையினை நீரிலிருந்து நினைக்கும்படியாக கழிகள் சூழப்பட்ட மருதநிலம் சித்தரிக்கப்பட்டுள்ளன. இவை மருதநிலத்தைக் கண்முன்னே காண்பதாக அமைக்கப்பட்டுள்ளன.

தண்கயத்துத் தாமரைநீள் சேவலைத் தாழ்பெடை
புண் கயத்துள்ளும்[3]

என்ற வரியால் அறியலாம்.

மேலும் புனையா ஓவியமாக ஒரு காட்சி திணைமாலையில் சித்தரிக்கப்பட்டுள்ளது.

முல்லை நிலம் சிறந்த நாடக சாலையாகவும், மேகக் கூட்டமானது இடிகுரலாகிய பாட்டைப் பாடவும், வண்டினங்கள் யாழாகச் சுருதி கூட்டவும், வேனிற்காலத்தில் தோகைவிரித்து மகிழ்ந்து ஆடாத மயில்கள் நடனம் ஆடவும், வெண்காந்தல் மலர்கள் ஆகிய வேடிக்கைப் பார்ப்போர் வியப்புடன் கைகளைத் தூக்கி அசைக்கவும் இக்கார்காலம் புனையப்பட்டுள்ளது. இதை,

கானம் கடியரங்காக் கைம்மறிப்பக் கோடலார்
வானம் விளிப்ப வண்(டு) யாழக – வேனில்
வளரா மயிலாட வாட்கண்ணாய்[4]

என்ற பாடல் படம்பிடித்துக் காட்டுகிறது.

இவ்வாறு ஓவியத்தை நேராகக் கண்டு வியப்பது போல் பாடல்களை அமைத்துள்ளனர் என்பதை உணரமுடிகின்றது.

மானுட வாழ்க்கையின் திறனாய்வாக இலக்கியம் எழும்போது படைப்பாளன் காணும் சமூக நிகழ்வுகள் மனத்திரையில் பட்டு படிப்போர் எண்ணத்தில் காலூன்ற ஓவியக் கலைக் காட்சிப் படைப்பு இலக்கியத்தில் தாக்குண்டது எனலாம்.

## அடிக்குறிப்புகள்

1. நெடுநல் - 139 - 147
2. தமிழண்ணல், ஒப்பிலக்கிய அறிமுகம், ப. 129
3. திணைமாலை - 142
4. மேலது - 111

## உத்திச் செல்வாக்கு

புலவர்கள் உள்ளடக்கத்தைப் படிப்போர் மனதில் பதிய வைக்க உத்திகள் உதவிபுரிகின்றன. அவற்றில் உவமை முதற்கண்ணதாகும்.

உவமை ஒன்றே எடுத்துக்காட்டு உவமை, பிறிது மொழிதல், தற்குறிப்பேற்றம் முதலியன பலவாக வேறுபட்டு வருதல் உண்டு. எனினும் தொல்காப்பியர் அதனை விளக்கவில்லை. 'அணிகளுக் கெல்லாம் தாயணியாக உவமையைக் கருதியதால் தான் அதைப்பற்றி மட்டும் அவர் கூறியிருக்க வேண்டும் என்பர்'. மேலும்,

> அணிகளுள் உவமையே சிறந்தது,
> ஏனைய அணிகட்குத் தாய் நிலையில்
> உள்ளது[1]

என்று ந. சுப்பு ரெட்டியாரும்,

> அணிகளில் அடிப்படையானதும் மிகுந்த
> பயிற்சியுடையதும் இலக்கியத்திற்கு
> இன்றியமையாததும், பல்வகைப்
> பொருளணிகள் தோன்றக்களனாய
> மைவதும் உவமையே ஆகும்[2]

என ச.வே. சுப்பிரமணியனும் உரைத்துள்ளனர். உவமையின் முதன்மையை சிறப்பிக்கும்போது,

> இலக்கியத்தை அழகுபடுத்துவதும் முதலணி
> அல்லது தாயணி உவமையேயாகும்.
> காலத்தால் மிகவும் முற்பட்டதுமாகும்.
> தொல்காப்பியர் 'உவமவியல்' என ஒரியலே
> வகுத்திருப்பது போல சங்கப் பாடல்களிலும்
> ஏறத்தாழ தொண்ணூ'று விழுக்காடு
> உவமையே இடம் பெறுகிறது என்பர்.[3]

எனவே இலக்கியத்தை அழகுபடுத்துவது உவமை என்றும், பல அணிகள் தோன்ற உவமையே காரணமாகிறது என்றும், மிகத் தொன்மையானதும் இவ்வுவமையணியே என அறிய முடிகிறது.

**சங்க இலக்கியத்தில் உவமைகள்**

உவமையைப் பற்றிய பலவகையான கருத்துக்கள் இடம் பெற்றுள்ளன. இவ்வாறாக சிறப்பு வாய்ந்த உவமைகள் சங்க இலக்கியங்களில் எவ்வாறு எடுத்தாளப்பட்டுள்ளன என்பதை ஆய்வது பொருத்தமானதாகும். பிற்காலத்தில் எழுந்த தண்டியலங்காரம் பல அணிகளையும், அதன் இலக்கணங்களையும் விளக்கியுள்ளன. இருப்பினும் சங்க இலக்கியங்களில் உவமைகள் அதிக அளவில் கையாளப்பட்டிருப்பதால் உவமைகள் பற்றி ஆராய்வது பொருந்தும்.

> சங்க இலக்கியத்தினை உவமைக்
> களஞ்சியம் என்று குறிப்பிட்டு
> பிற்காலத்து நூல்களில் வரும் உவமைகள்
> பலவும் சங்கப் பாட்டுகளுக்குக் கடன்பட்டவை
> எனலாம். சங்க நூல்களில் அமைந்த
> உவமைகள் இயல்பாக அமைந்து காணப்
> படுகின்றன. அந்தப் பழங்காலத்துப்
> புலவர்களால் அமைத்துத் தரப்பட்ட
> உவமைகளைப் பிற்காலத்தார் அவ்வாறே
> பின்பற்றி வழங்கியுள்ளனர்[4]

எனக் குறிப்பர்.

இக்கருத்தின் அடிப்படையில் சங்க இலக்கியங்கள் அதன்பின் எழுந்த கீழ்க்கணக்கு நூல்களில் எவ்வாறு செல்வாக்குற்றன என்பதை இவ்வியலில் ஒப்பிட்டு ஆராயப்படுகிறது.

**உவமைகள்**

ஆய்வின் வசதி கருதியும் இருகால இலக்கியங்களிலும் இடம்பெறும் உவமைகளின் தன்மை அடிப்படையிலும், பண்புகளின் அடிப்படையிலும் ஆறு வகையாகப் பிரிக்கப்பட்டுள்ளன.

1. இயற்கை உவமைகள்

2. அழகு உவமைகள்

3. பண்பு உவமைகள்

4. புராண உவமைகள்

5. வரலாற்று உவமைகள்

6. கருத்து உவமைகள்

என்பனவாகும்.

கவிஞன் தன் உள்ளத்தில் எழுந்த இதய உணர்வுகளை, எழுச்சிகளை சிதைவின்றி தன் படைப்பில் வெளிப்படுத்துவதற்கு உதவுவன உவமைகளாகும். இக்கருத்துக்களின் அடிப்படையில் இவ்வுவமைகள் விளக்கப்படவுள்ளன.

**1. இயற்கை உவமை**

மனித குலத்திற்கும் இயற்கைக்குமுள்ள நெருங்கிய பண்பினை அறிந்தவர்கள் பண்டைத் தமிழ்சான்றோர்கள். அதனால் அக இலக்கிய மரபுகளை வைக்கும்போது இயற்கைக்கு ஒரு சிறப்பான இடத்தைத் தந்துள்ளனர். இதற்கு சான்று பகர்வனபோல் சங்க இலக்கியங்களும் கீழ்க்கணக்கு நூல்களும் விளங்குகின்றது.

**மலர்கள்**

**வேங்கை மலர்**

வேங்கை மரம் உயரமாக வளர்ந்திருப்பதும், அதில் பூக்கள் மலர்ந்திருப்பதும் இயற்கை. இவற்றின் மலர்கள் பொன்போல் மலர்ந்துள்ளதெனக் கூறுகின்றனர்.

கிளர்ந்த வேங்கைச் சேண் நெடும் பொங்கர்ப்
பொன்னேர் புதுமலர்[5]
பூங்கண் வேங்கைப் பொன்னிணர் மிலைந்து[6]
பொன்னென மலர்ந்த வேங்கை[7]

எனச் சங்க அகநூலும்,

நாள் வேங்கை பொன்விளையும் நன்மலை நன்நாடன்[8]

எனத் திணைமாலை நூற்றைம்பதும் கூறுகின்றன. மேலும் வேங்கைப் பூவுக்கு வேங்கைப் புலி உவமையாகக் கூறப்பட்டுள்ளது.

உருபுலி ஏய்ப்ப பூத்த வேங்கை[9]

என்றுக் கலித்தொகையும்,

கருங்கால் இளவேங்கை கான்றப் பூக்கன்மே
இருங்கால் வயவேங்கை யேய்க்கும்[10]

எனத் திணைமாலையும் வேங்கைப்பூவை புலிக்கு உவமையாக்கி உரைத்துள்ளனர்.

**கோங்க மலர்**

கோங்க மலர்கள் குடைபோன்று பூத்துள்ளது. அது ஆகாயத்தில் விளங்கும் விண்மீன்களுக்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளது.

புல்லிதழ்க் கோங்கின் மெல்லிதழ்க் குடைப்பூ
வைகுறு மீனின் நிலையைத் தோன்றி[11]

என்றும், கோங்கம்பூ அரதனக்கல்லால் செய்த சுரிதகம் என்னும் அணியைப் போல் உள்ளதெனவும் குறிப்பிட்டுள்ளனர்.

கைவல் வினைவன் தையபு சொரிந்த
சுரிதக உருவின ஆகிப் பெரிய
கோங்கம் குவிமுகை அவிழ[12]

என்றும் நற்றிணை கோங்கபூவின் தன்மையைக் கூறுகிறது. கோங்க மரத்தினைத் தாயாகவும், கோங்க மலர்கள் தாயின் மூலையாகவும் உவமை கூறப்பட்டுள்ளது.

தான் தாயாக் கோங்கம் தளர்ந்து முலைகொடுப்ப[13]

எனத் திணைமாலை கூறுகிறது.

**முருக்கமலர்**

முருக்கமரம் வலிய புலியினது காலில் நகம் போன்றும் அதன் பூக்கள் முலைகளைப் போலும் உள்ளன என்று அகநானூறு கூறுகிறது.

வாள்வரி வயமான் கோள்உகிர் அன்ன
செம்முறை அவிழ்ந்த முள்முதிர் முருக்கின்
மாண் இழை மகளிர் பூணுடை முனிலயின்[14]

என்றது.

முருக்கமரம் புலியின் நகம்போலும், இம்முருக்கமரத்தின் பூவை பொன்னுள் வைத்தப் பவளம் போன்றுள்ள தென்று கூறியுள்ளது. அவற்றை,

உதிரந் துவரிய வேங்கை உகிர்போல்[15]
பொன்னுள் உறுபவளம் போன்ற புணர்முறுக்கம்[16]

என்றுத் திணைமாலை உவமித்துள்ளது.

**புன்கமலர்**

புங்கமரத்தின் பூக்கள் நெற்பொரி போன்று உள்ளது என குறுந்தொகை கூறுகிறது.

பொரிப்பூம் புன்கொடு பொழில் அணிக்கொளர்.[17]

இவ்வுமையைத் திணைமாலை நூற்றைம்பது,

பொரி சிதறி விட்டன்ன புன்கு[18]

எனக் கையாண்டுள்ளனர்.

**கொன்றமலர்**

கொன்றை மலர்கள் பொன்போல் மலர்ந்துள்ளது என சங்க இலக்கியங்களும், கீழ்க்கணக்கு நூல்களும் உவமை கூறியுள்ளது.

பொன்னென் மலர்ந்த கொன்றை[19]
சுடு பொன் னன்ன கொன்ற[20]
நன்பொன் னன்ன கொன்றையொடு[21]
பொன்செய் புனையிழை கட்டிய மகளிர்
கதுப்பிற் தோற்றும் புதுப்பூங் கொன்றை[22]

என சங்க நூல்களும்,

பொன்போல் தார் கொன்றை புரிந்தன[23]
கோடெலாம் பொன்னாய்க்[24]

எனக் கீழ்க்கணக்கு நூலும் கொன்றை மலர்கள் பொன் போன்றுள்ளதெனக் கூறுகின்றன.

**காயாமலர்**

காயாமலர்கள் கரிய மலையைப் போன்று மலர்ந்துள்ளன என்றுக் கூறப்படுகிறது.

செறியிலைக் காயா அஞ்சன மலர[25]

என சங்க நூலும்,

அஞ்சனங்காயா மலர்[26]

கீழ்க்கணக்கு நூலும் குறிப்பிட்டுள்ளன.

**பீர்க்கம்பூ**

தலைவியின் உடலில் தோன்றிய பசலைப் பீர்க்கின் பூ போன்றுள்ளதென்பதை இரு கால நூல்களும் சுட்டுகின்றன.

........................................... நுதலே
பீர் இவர் மலரில் பசப்பு ஊர்ந்தன்றே[27]
மாரி பீரத்து அலர்சில கொண்டே[28]

என்றும்,

அரும்(பு) ஈர் முலையாள் அணிகுழல் தாழ் வேய்தோன்
பெரும் பீர் பசப்பித்தீர் போந்து[29]

என்றும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

**அருவி**

அருவி கொட்டுவது வெள்ளை ஆடையைப் போன்றுள்ளது எனக் கூறப்பட்டுள்ளது. இவ்வுவமை சங்க காலத்தில் மட்டுமின்றி கீழ்க்கணக்கு நூல்களிலும் கையாளப்பட்டுள்ளது.

எறிபடை கோடா வாண்மை அறுவைத்
தூவிரி கடுப்பத் துவன்றி மீமிசைத்
தன்பல விழி தரும் அருவி[30]

என்றும்,

வேறுஃறுகிலி னுடங்கி ............ இழிதரும் அருவி[31]

எனவும்,

அவிர் துகில் பிரையும் அவ்வெள்ளருவி[32]

என சங்க நூல்களும்,

மாநீல மாண்ட துகிலுமிழ்வ தொத்தருவி[33]

எனத் திணைமாலையும்,

பால்போல் வெள்ளருவி[34]

என்றும் குறிப்பிட்டுள்ளது.

**நிலவு**

முகத்துக்குதான் நிலவை உவமை கூறுவர். ஆனால் இவண் மண் திட்டுக்கும் நிலவு உவமையாகக் கூறப்பட்டுள்ளது. இவ்வுவமை சங்க இலக்கியங்களிலும் கீழ்க்கணக்கு நூல்களிலும் நிரம்பக் கையாளப்பட்டுள்ளன.

நிலவுக்குவித்தன மோட்டுமணல், இடிகரை[35]

நிலவுக்குவித்தன்ன வெண்மணல் ஒரு சிறை[36]

நிலவெக்கர் பலபெயர[37]

நிலவுக் கானல்[38]

நிலவடைந்த இருள்போல் வலையுணங்கு மணல் மூன்றில்[39]

வானிலா ஏய்க்கும் வயங்கொளி எக்கர்[40]

நிலவின் இலங்கு மணல் மலி மறுகு[41]

நிலவு மணல் வியன்கானல்[42]

எனச் சங்க நூல்கள் நிலவு போன்ற மணல்மேடு என்று உவமை கூறியுள்ளது. இதனை திணைமாலை நூற்றைம்பது,

நிலா எழுந்த வார்மணல் நீடிச்[43]

என்றுக் குறிப்பிட்டுள்ளது.

**மரம் – அசோக மரம்**

அசோகமரத்தின் இலைகள் செப்புத் தகட்டைப் போன்றுள்ளது எனும் பொருளில்,

செப்படரன்ன செங்குமழைப் பிண்டி[44]

இவை சிவந்த நிறத்திற்குக் கூறப்பட்டுள்ளன.

அசோகமரக் கூட்டங்கள் எல்லாம் நெருப்பினைப் போன்ற
நிறத்தோடு பூக்களைப் பூத்துள்ளன[45]

எனக் கூறுகிறது.

**2. அழகு உவமை**

அழகின் தன்மையைப் போற்றுவதாகும். இயற்கையாக அமைந்த பொருள்களின் அழகையும் அதன்வழி வெளிப்படும் உவமைகளையும் எடுத்து உரைப்பதாகும். உடல் உறுப்புகளே இவ்வுவமையில் அதிக இடத்தினைப் பெற்றுள்ளன. அவை கண், தோள், பல், வாய், முகம், விரல், கூந்தல் என்பனவாகும்.

**கண்**

மகளின் கண்களையும் அதன் அழகையும் சங்கப் புலவர்கள் பலவாறாக உவமித்துள்ளனர். அதுபோன்று கீழ்க்கணக்கு நூற்களிலும் கண் பற்றிய உவமைகள் பல இடம் பெற்றுள்ளன.

கயத்துவளர் குவளையின் அமர்ந்த கண்ணே[46]
பூப்போல் உண் கண்[47]
கயலெனக் கருதிய உண்கண்[48]
குவளை அம்கண்ணே[49]
பூஒத்து அலமரும் பெருமழைக் கண்ணே[50]
குவளை உண்கண்[51]
மழைக்கண்[52]
பூப்போல் உண்கண்[53]
குவளை நீர் சூழ் மாமலர் அன்ன கண்[54]

என்று சங்க இலக்கியங்கள், கண்களுக்கு உவமித்துள்ளன.

சங்க நூல்களைப் போன்று, கீழ்க்கணக்கு நூல்களும் கண்களை,

வேள் கண்ணாள்[55]
கழுநீர் மலர்க்கண்ணாய்[56]
உருவவேல் கண்ணாய்[57]
வாட்கண்ணாய்[58]
பகழிபோல் உண்கண்ணாய்[59]
வாள்தடங்கண்[60]
செங்கயல் போல் கண்ணினாள்[61]
கயலியலுண் கண்ணாய்[62]
மாவலந்த நோக்கினாய்[63]
வடுவிடைப் போழ்ந்தகன்ற கண்ணாய்[64]

எனப் பலவாறாக உவமித்துள்ளன.

**தோள்**

படைப்பாளர்கள் தோளுக்குப் பெரும்பாலும் மூங்கிலைப் போன்றது என்றே உவமித்துள்ளது. இவ்வுத்தியை மேற்கணக்கு, கீழ்க்கணக்கு என்ற இருவகை இலக்கியங்களை யாத்தப் புலவர்களும் கையாண்டுள்ளனர்.

பணைத்தோள்[65]
பணைத்தோட் குறுமகள்[66]
பணைப் பெருந் தோளினர்[67]

என சங்க நூலும்,

நெடும்பணைப்போல் தோள்[68]
வேய்தோளோய்[69]

எனத் திணைமாலையும்,

தடமென் பணைத்தோள்[70]

என ஐந்திணை எழுபதிலும் கையாளப்பட்டுள்ளன.

**பல்**

பல்லுக்கு முத்து, மூங்கிலின் கணு, முல்லை மலர், முள்ளு போன்றவை உவமையாகக் கூறப்பட்டு உள்ளன. இலு இலக்கியங்களில் இவ்வகைகள் கையாளப்பட்டுள்ளன.

முழுவலி முள் எயிறு[71]
இலங்கு முத்துறைக்கும் எயிறு[72]
மூங்கில் முளை பற்கள்[73]
தொகுமுகை இலங்கு எயிறு[74]
முள் எயிற்றுத் துவர்வாய்[75]

என சங்க நூல்களும்,

முத்தன்ன வெண்முறுவல்[76]
முல்லை முகை வென்ற பல்லினாய்[77]
குருகிலை ஒண்டொடி நல்லார் முறுவல்[78]
முட்போல் எயிற்றினாய்[79]

எனக் கீழ்க்கணக்கு நூல்களும் கூறுகின்றன.

**வாய்**

வாயைக் கூறும்போது பவளவாய் என்று அழைக்கின்றனர்.

அமிழ்துபொதி துவர்வாய்[80]
துவர்வாய்[81]

என்ற உவமை (ஐங் - 185, குறுந் - 300) சங்கநூலில் பல இடங்களில் வந்துள்ளன.

பவளக் கடிகை இடைமுத்தம்[82]

என திணைமாலையில் இடம் பெற்றுள்ளது.

**முகம்**

முகத்தை நிலவுக்கு ஒப்பிட்டுள்ளனர்.

முகில் நிலாத் திகழ் தரும்[83]

என சங்க நூலும்,

அடுபோ ரணிணல்,
நாடு தலையளிக்கும் ஒன்முகம் போலக்
கோடு கூடு மதியம்.[84]

முகத்தைத் தாமரை எனவும் ஒப்பிட்டுளள்னர்.

முகத்தாமரை[85]

தாமரைத்தான் முகமாத்[86]

எனத் திணைமாலையில் முகத்தைக் குறித்துள்ளனர்.

**கைவிரல்**

கைவிரலுக்குக் காந்தள் மலர் உவமையாகக் கூறப்பட்டுள்ளது.

காந்தள் மெல்விரல்[87]

பொன்போல் விரல்[88]

என சங்கநூல்களும்,

கணமுகைக் காந்தன் கையென[89]

எனத் திணைமொழியும் எடுத்துரைக்கிறது.

**கூந்தல்**

பெண்களின் கூந்தலுக்கு அறலை மணலையும், மயில் தோகையையும் உவமையாகக் கூறியிருக்கின்றனர்.

அறல் போல் கூந்தல்[90]

மனவுக் கோப்பன்ன நன்நெடுங் கூந்தல்[91]

என்றும்,

நுண்ணறல் போல நுணங்கிய ஐங்கூந்தல்[92]

கூந்தல் மயிலன்னாய்[93]

என்றும் குறித்துள்ளனர்.

**மேனி**

மேனி பவழம் போன்றது, மாந்தளிர் போன்றது, பொன் போன்றது என உவமையாகக் கூறுகின்றனர்.

பழவழத்தன்ன மேனி[94]

இளந்தளிரன்ன மேனி[95]

என்றும்,

மாந்தளிர் மேனியாய்[96]

என்றும் வந்துள்ளன.

இவ்வாறு அழகு உவமைகள் சிறப்புற்று விளங்கியதை அறியமுடிகின்றன.

### 3. பண்பு உவமை

சங்க இலக்கியங்களில் பண்புப் பற்றிய உவமைகள் நிரம்ப இடம் பெற்றுள்ளன. மன்னர்களின் வலிமையும், குணத்தையும் குறிப்பிடும்போது இவ்வுவமைகள் இடம்பெற்றுள்ளன.

அரிமா அன்ன அணங்குடைத்துப்பின்
திருமாவளவன் தெவ்வர்க் கோக்கிய
வேலினும் வெய்ய கானமவன்
கோலினுந் தண்ணிய தடமென் தோளே[97]

என்ற வரிகளில் திருமாவளவனின் வீரமும் பண்பும் காட்டப்பட்டுள்ளன. சிறுபாணாற்றுப்படையில், நல்லியங் கோடனனின் வீரத்தையும் அவனது ஈகைப் பண்பையும் குறிப்பிடும்போது,

உறுபுலித் துப்பின் ஓவியர் பெருமகன்
களிற்றுத் தழும் பிருந்த கழல் தயங்கு திருந்தடிப்
பிடிக்கணஞ் சிதறும் பெயல்மழைத் தடக்கை[98]

என்று நத்தத்தனார் எடுத்துரைக்கிறார்.

கரிகால் பெருவளத்தானைப் பற்றி, விளக்கும் முடத்தாமக் கண்ணியார்,

உருவப் பஃறேர் இளையோன் சிறுவன்
முருகற் சீற்றத் துருகெழு குரிசில்[99]

எனப் பொருநராற்றுப்படையில் கூறியுள்ளார்.

சங்க இலக்கியங்களில் மன்னர்களின் வீரமும் பண்பும் பற்றிய உவமைகள் இடம் பெற்றுள்ளன. கீழ்க்கணக்கு நூல்களும், இவ்வுவமைகளை ஏற்றுப் போற்றியுள்ளதென்பதை அறியமுடிகிறது.

சோழங் கெங்கணானனின் வீரத்தைப் புகழுமிடத்து சிங்கம் எனக் கூறியிருப்பது தாய் இலக்கியமாகிய சங் இலக்கியத்தின் செல்வாக்கை ஏற்றுக் கொண்டதே எனக் குறிப்பிடலாம். போர்க்களத்தில் போரிடும் சோழன் செங்கணான் பொருத தன்மை இங்கு உவமையாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.

செவ்வரைச் சென்னி அரிமானோடு அவ்வரை
ஒல்கி உருமிற்கு உடைந்தற்றால் – மல்கிக்
கரை கொன்(று) இழிதரூஉம் காவிரி நாடன்
உரைசால் உடம்பிடி மூழ்க அரசோ(டு)
அரசுவா வீழ்ந்த களத்து[100]

எனக் களவழி நாற்பது விளக்குகிறது. அக்கால இலக்கியத்தின் பண்புஉவமை விளக்கி உரைக்கப்பட்டுள்ளது.

தலைவியின் அண்ணன்மார்களின் வலிமையை குறிக்குமிடத்து புலியை ஒத்தவன் என்றும், தலைவனும் அத்தகைய வீரமுடையவனென்றும் கூறுமிடத்து எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

கோள்வேங்கை போல் கொடியார் என் ஐயன்மார்[101]
நல்யானைப் போன்றவர்கள் தமயன்மார்கள் என்பதை
கொல்யானை வெண்மருப்பும் கொல்வல் புலியதளும்
நல் யானை நின்ஐயர்[102]

எனவும் திணைமாலை நூற்றைம்பது எடுத்துரைக்கின்றது. மேலும் அரிய மலை போன்ற யானைகளை அகல்படுத்திக் கொல்லும் ஆற்றலை உடையவர்களுடைய தங்கையானவள் தலைவி என்பதை,

அருமலை மாய்க்குமவர் தங்கை[103]

என வந்துள்ளது. பண்பு உவமைகள் சங்க இலக்கியங்களில் இடம்பெற்றதைப் போல் கீழ்க்கணக்கு நூல்களிலும் சிறப்புற்று விளங்குவது இவண் உளங்கொளத் தக்கதாகும்.

**4. புராண உண்மைகள்**

இலக்கியப் படைப்பாளர்கள் தன் படைப்பு மக்கள் மனதில் நிலை நிறுத்தவும், தன் படைப்பு என்றென்றும் நிலைத்து நிற்பதற்கும் பல இலக்கிய உத்திகளைக் கையாளுகின்றனர். அவற்றுள் ஒன்று புராண உவமைகளையும் கையாளுகின்றனர்.

கவிஞன் தன் உள்ளத்து எழுந்த இதய
உணர்வின் ஊற்றுகளை எழுச்சிகள்
நிறைந்த இன்ப துன்ப உந்துதல்களைச்
சிதைவின்றி தன் உள்ளத்து எழுந்தவாறே
உலகிற்கு உணர்த்த உதவுவது உவமைகளே[104]

என்பர். இவ்வுவமைகள் எத்தன்மை வாய்ந்தனவாக இருக்க வேண்டும் என்பதைச் சிந்தித்தபோது உவமையின் வழியாக ஒரு நாட்டின் புராணம் உள்ளிட்டக் கருத்துக்களை கையாளத் தொடங்கினரோ என எண்ண இடமுள்ளது.

காலங்காலமாக மக்களிடம் நிலைப் பெற்று நிலைத்து விட்ட புராணக் கதைகளை உவமைகளில் கையாளப்பட்டுள்ளது இவ்வகை உவமையாகும்.

சங்க இலக்கியங்களில் இதிகாசப் போர்களும் நாட்டில் வழக்கத்திலிருக்கும் தெய்வங்களும் உவமைகளாக எடுத்தாளப்பட்டுள்ளன.

கடல்வளர் புரிவளை புரையுமேனி
அடல் வெந் நாஞ்சிற் பனைக்கொடியோனும்
மண்ணுறு திருமணி ஸபரையு மேனி
விண்ணுயர் புட்கொடி விரல் வெய்யோனும்[105]

என்றும்,

பானிற வுருவிற் பனைக் கொடியோனும்
நீனிற வுருவி னேமி யோனும் என்று
இருபெருந் தெய்வமு முடனின் றாஅங்கு[106]

என்றும் புறநானூறு, பால் போல் நிறத்தையுடையவனென்றும் நீல நிறம் போன்று திருமேனியுடையவன் என்றும் எடுத்துரைக்கின்றன.

திருமாலையும், பலராமனையும் சங்க இலக்கியங்கள் குறித்துள்ளன. இவற்றின் புராண வுவமைச் செல்வாக்கைக் கீழ்க் கணக்கு நூல்கள் அப்படியே பெற்றுள்ளன.

அலைகடலும், கடற்கரைச் சோலையும், அதனை அடுத்த வெண்மணலும் கண்ணனும், பலராமனுமாகக் காட்சி அளிக்கிறது என்பதை,

மாயவனும் தம்மும் போலே மறிகடலும்
கானலும் சேர் வெண்மணலும் காணாயோ[107]

எனத் திணைமாலை விளக்குகிறது. மேலும் கண்ணனது நிறம் இருள் போலவும், பலராமன் நிறம் வெண்மை நிறம் போலவும் உள்ளது என்பதை,

இருள் பரந்(து) ஆழியான் தன்னிறம்போல் தம்முன்
அருள்பரந்த ஆய்நிறம் போன்றும் – மருள் பரந்த
பால் போலும் வெண்ணிலவும்[108]

எனவும்,

பாழிபோல் மாயவன் தன் பற்றார் களிறெறிந்த
ஆழிபோல் ஞாயிறு கல்சேரத் – தோழியே!
மான்மாலை தம்முன் நிறம்போல் மதிமுளைப்ப
யான் மாலை ஆற்றேன் நினைத்து[109]

என்றும் கணிமேதாவியார் குறித்துள்ளார்.

இக்கருத்துக்களை உணரும்போது கீழ்க்கணக்கு ஆசிரியர்கள் சங்க இலக்கியத் தாக்கத்தையும் புராணக் கருத்தையும் ஏற்றுள்ளனர் எனத் தெரிகிறது.

**5. வரலாற்று உண்மைகள்**

படைப்பாளன் தான் படைக்கும் இலக்கியத்தில் அவனின் சமகாலத்தில் வாழ்ந்த அரசர்களைப் பற்றியோ அல்லது அவனுக்கு முன்பே வாழ்ந்த அரசர்களைப் பற்றியோ உவமை வாயிலாகக் குறிப்பிடுவதை சங்க இலக்கியங்களில் காண முடிகிறது. இவ்வரலாற்று உவமைகளின் தர்க்கத்தைக் கீழ்க்கணக்கு நூல்களிலும் காணமுடிகிறது.

அகநானூற்றில் பாண்டியன் நெடுஞ்செழியனைப் பற்றிய குறிப்பு இடம்பெற்றுள்ளது.

கொய்த பிடரிமயிரினை உடைய குதிரைகள் பூட்டியதும், மகரக்கொடி எடுத்ததுமான தேரினை உடையவன் பாண்டியன் நெடுஞ்செழியன். அவன், தலையாலங்கனம் என்னுமிடத்தில் போரிட்ட செய்தியும், பகைவர்களையும், குறுநில மன்னர்களையும் கதிகலங்கச் செய்த செய்தியும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. அவற்றை,

கொய்சுவற் புரவிக் கொடித்தேர்ச் செழியன்
ஆலங்கானத்து அகன் தலைச் சிவப்பச்
சேரன் செம்பியன் சினங்கெழு திதியன்,
..........................................................
முரசொடு வெண்குடை அகப்படுத்து, உரைசெலக்
கொன்று களம் வேட்ட ஞான்றை,
வென்றிகொள் வீரர் ஆர்ப்பினும் பெரிதே[110]

என்று அகநானூறு கூறுகிறது.

இவ்வாறு வரும் வரலாற்று செய்திபோல் கீழ்க்கணக்கு நூலாகிய களவழி நாற்பதில் செங்கட் சோழனைப் பற்றிய உவமை இடம் பெற்றுள்ளது. செங்கட் சோழனின் குதிரையும் கத்தரித்த புற மயிரையுடையன என்றும், அவனது வாட்போரின் திறமையும் எடுத்தாளப்பட்டுள்ளன. இச்செய்தியை,

பொய்கையுடைந்து புனல்பாய்ந்த வாயெல்லாம்
நெய்தல் இடையிடை வாளை பிறழ்வனவோல்
ஐதிலங்(கு) எஃகின் அவிரொளி வாள் தாயினவே
கொய்சுவன் மாவிற் கொடித்திண்டேர் செம்பியன்
தெவ்வரை அட்ட களத்து[111]

என எடுத்துரைக்கின்றது.

மேலும் பாண்டியனது மதுரையம்பதி ஒத்த தலைவியினை விளையாட்டுப் பண்ணையிலும் காணவில்லை என்பதில் பாண்டியனின் மதுரையை ஒத்த தலைவி என்ற உவமை வந்துள்ளது. இக்கருத்து,

கோடாப் புகழ்மாறன் கூட லனையாளை
ஆடா அடகினும் காணேன் போர்[112]

என்றப் பாடலில் மிளிர்வதைக் காணமுடிகிறது.

படைப்பாளர்களின் வரலாற்றுச் செய்திகளைக் கூறும்போது அவற்றில் உவமைகளைக் கையாண்டுள்ளனர்.

**6. கருத்து உவமைகள்**

வாழ்க்கைக்குத் தேவையான அறக்கருத்துக்கள் உவமைகளாக சங்கப் பாடல்களில் இடம்பெற்றுள்ளன. இம்மரபு கீழ்க்கணக்கு நூல்களில் நிரம்ப இடம்பெற்றுள்ளன.

செல்வம் நிறைந்தவர்களை ஆராய்ந்து அடையும் உள்ளத்தினால், செல்வங்குறைந்தோர் பயனற்றவராதலின், அவர் பாலிருந்த பற்றினையுங் கைவிட்டு, அவரை விட்டு நீங்குவர் நடுநிலையற்றவர்கள், அவர்களைப்போல வண்டுகள் சுனைப்பூக்களைக் கைவிட்டுவிட்டு, மரக்கிளைகளிலேயுள்ள புதுப்பூக்களை அடைந்தன என்னுங் கருத்தை,

நிறைந்தோர்த்தேரும் நெஞ்சமொடு, குறைந்தோர்
பயன் இன்மையின் பற்றுவிட்டு, ஒரூஉம்
நயன்இல் மாக்கள்போல, வண்டினம்
சுனைப்பூ நீத்துச் சினைப்பூப் படர[113]

என அகநானூற்றுப் பாடல் வரிகள் கருத்து உவமையை விளக்கி நிற்கின்றன.

தலைவியை விட்டுப் பிரிந்து சென்றுள்ள தலைவனிடம், கீழ்மக்களின் நட்பு போன்று தலைவியின் அக்காலத்திலிருந்த இளமை இன்பத்தை நுகர்ந்துவிட்டு, இளமை இல்லாதபோது பரத்தையர் வீட்டிற்குச் செல்கியாயே! இது நீதியாகுமா என்று கேட்பதன்மூலம் நீதிக்கருத்து உவமையாக இடம்பெற்றுள்ளது. இச்செய்தியை,

கடையாயார் நட்பே போல் காஞ்சி நல் ஊர
உடைய இள நலம் உண்டாய் – கடையக்

கதில் முலை ஆகத்துக் கண்ணன்னார் சேரி
எதிர் நலம் ஏற்று நின்றாய்[114]

என்றுத் திணைமொழி விளக்குகிறது.

நீதிக் கருத்துக்களை வலியுறுத்துவதை நோக்கமாகக் கொண்ட கீழ்க்கணக்கு நூல்களில் கருத்து உவமைகளே மிகுதியாக எடுத்தாளப்பட்டுள்ளன.

மக்களிடம் முன்பே அறிமுகமான இயற்கைப் பொருட்கள் புராணக் கதைகள் வழி உவம ஆட்சியைக் கையாண்டால் தான் பாடுபொருள் எளிதில் சென்றடையும் என்ற நோக்கில் சங்க நூற்பாடல்கள் அமைந்தவாறே கீழ்க்கணக்கு நூற்களும் உவமப் பதிவுகளை ஏற்றுப் போற்றினர் எனக் கருதமுடிகிறது.

## உள்ளுறை உவமம்

### உள்ளுறை உவமம்

உவமை வகைகளில் ஒன்றாக விளங்குவது உள்ளுறை உவமம். தொல்காப்பியர் வகுத்த ஏனைஉவமம், உள்ளுறை உவமம் இவற்றில் உள்ளுறை உவமம் அகப்பொருளுக்கே உரியதாகும். இதனை,

மற்றிவையெல்லாம் அகப்பொருட்கே
உரியவாக விதந்தோகிய தென்னை,
வராதன போல எனின், ஆண்டு வருதல்
அரிதாதலின் இவ்வாறு அகத்திற்கே
கூறினார்[115]

என்றப் பேராசிரியரின் உரை இனிது தெளிவுபடுத்தும். மேலும் தொல்காப்பியரும் உள்ளுறை உவமத்திற்கு,

உள்ளுறுத்து இதனோடு ஒத்துப்பொருள் முடிகென
உள்ளுறுத்து உரைப்பதே உள்ளுறை உவமம்[116]

என்று இலக்கணம் வகுப்பர். மேலும் உள்ளுறை உவமமே உவமப் போலியாகும் என்பதையும் எடுத்துரைத்துள்ளார்.

சங்க நூல்களில் உள்ளுறை உவமம் என்ற உத்திக் கையாளப்பட்டது (அகம் - 46). இவ்வுத்தியின் செல்வாக்கைக் கீழ்க்கணக்கு நூல்களில் காணமுடிகிறது. அவ்விலக்கியங்களிலும் மருதநிலத்துப் பாடலில்தான் நிரம்பக் கையாளப்பட்டுள்ளன.

அவற்றை,

> கருங் கோட்டுச் செங்கண் எருமை கழனி
> இருங்கோட்டு மென்கரும்பு சாடி – அருங்கோட்டால்
> ஆம்பல் மயங்கி அணிவளை ஆர்ந்(து) அழகாத்
> தாம்பல் அசையினவாய் தாழ்ந்து[117]

என்றுத் திணைமாலை நூற்றைம்பது குறிப்பிடுகின்றது.

**உள்ளுறைப் பொருள்**

உள்ளுறை என்பது சொல்லும் பொருளில் இருந்து மற்றொரு பொருள் தோன்றுமாறு சொல்வதாகும். இக்கருத்திற்கு ஒத்தாற்போல் இப்பாடலிலும் எருமையின் செயல்களைத் தலைவனின் செயலுக்கு ஒப்பிட்டுள்ளனர்.

எருமையாகிய தலைவன், மென் கரும்பாகிய தலைவியைச் சாடி விலக்கி, தோழிமாராகிய ஆம்பலை அகற்றிப் பரத்தையாகிய குவளையினைத் தின்று வாழ்வதாக பெறப்படுகின்றது. தன்னால் வெறுக்கப்பட்ட தலைவனை எருமை எனவும், தன்னை மென்கரும்பாகவும், பரத்தையின் அற்ப வாழ்வினைக் குவளையாகவும் தலைவி கூறிய வாக்கு குறிப்பிடத்தக்கது. இவ்வாறு சங்க நூல்களைப் போன்று கீழ்க்கணக்கு நூல்களும் உள்ளுறையைக் கையாண்டுள்ளது.

தலைவியின் அன்பைப் புறந்தள்ளி பரத்தையர் உறவு மேவும் செயலான் தலைவனுக்கும் தலைவிக்கும் இடையே ஊடல் எழுகிறது. இதை மருதத்திணைப் பாடல்கள் உள்ளுறை வழி கடிந்துள்ளன. ஆணாதிக்கச் சமூக அமைப்பில் தலைவனை நேரே கடிதல் இயலாது. இந்நிலையில் இலைமறைக் காய் போல தலைவனை இடித்துரைக்கும் செயலுக்கு உரிய உத்தியாக உள்ளுறையைக் கையாண்டனர். இம்மரபு சங்கப் பாக்களில் விரிவாக அமைய கீழ்க்கணக்கு நூற்கள் சுருக்கமாக இடம்பெற்றுள்ளது.

## இறைச்சி

இறைச்சி என்பது உள்ளுறை உவமம் போன்ற கருப்பொருள் ஒன்றனுள்ளே பிறிதொரு பொருளைக் கொள்வதாகும். இறைச்சி என்பது உரிப்பொருளின்

புறத்ததாகித் தோன்றும் பொருள். இறைச்சிப் பொருள் பெரும்பான்மையும் அகப்பொருள் ஒழுகலாற்றில் தலைவனது கொடுமை கூறும் வழி பிறப்பதென்றும், கூறவேண்டுவதோர் பொருளின் புறத்தே புலப்பட்டு அப்பொருளுக்கு உபகாரப்படும் பொருட்டன்மைகளையுடையதென்றும் கூறுவர் நச்சினார்க்கினியர்.

இறைச்சிதானே யுரிப்புறத்ததுவே
என இளம்பூரணரும், இறைச்சிதானே
பொருட்புறத்ததுவே என நச்சினார்க்கினியரும்
பாடங் கொண்டனர்.[118]

எனவே வெளிப்படச் சொல்லப்பட்ட பொருளின் புறத்தே தங்கிய குறிப்பு பொருளை இறைச்சி என்று வழங்குவதைத் தமிழ் மரபாகக் கருதினர்.

**சங்கப் பாடல்களில் இறைச்சி**

இறைச்சிப் பொருள் சங்க நூல்களிலும், அவற்றின் தாக்கத்தால் கீழ்க்கணக்கு நூல்களிலும் கையாளப்பட்டுள்ளன. அவற்றை,

அருவி வேங்கைப் பெருமலை நாடற்கு
யான் எவன் செய்கோ என்றியான் அது
ஈகை என உணரேன் ஆயின்
என்ஆ குவைகொல் நன்னுதல் நீயே[119]

என்ற குறுந்தொகைப் பாடலில் இறைச்சி இடம் பெற்றுள்ளது. அவை,

அருவி தன்னை அடுத்து வளரும் வேங்கை மரத்திற்கு உதவிக் காப்பதுப் போலத் தலைவனும் தன் துணையாகச் சேர்ந்த என்னைக் காப்பான் என்பது உட்குறிப்பு. இதனால் தலைவி தன் தலைவன் இன்ன இயல்புடையான் எனச் சுட்டியதாகியது. எனவே இஃது இறைச்சிப் பொருளாகும்.

சங்க நூல்களில் குறிஞ்சித்திணையில் இடம் பெற்ற இறைச்சி எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. ஆனால் கீழ்க்கணக்கு நூல்களில் மருதத்திணையில் வரும் இறைச்சி எடுத்துக்காட்டப்படுகின்றது. திணை எதுவாயினும் இறைச்சி என்னும் இலக்கிய உத்தியை இருகால நூல்களும் எடுத்தாண்டுள்ளதை அறியமுடிகிறது.

கீழ்க்கணக்கு நூல்களில் இறைச்சி,

கன்றுள்ளிச் சோர்ந்தபால் காலொற்றித் தாமரைப்பூ
வன்றுள்ளி அன்னத்தை ஆர்த்துவான் – சென்றுள்ளி
வந்(து)ஐஆ என்னும் வகையிற்றே மற்றிவன்
தன்தையார் தம்மூர்த் தகை[120]

என்றுத் திணைமாலை நவில்கிறது.

இச்செய்யுளில் மருதநிலக் கருப்பொருள்கள் எருமை, அன்னம், தாமரை, தடாகம், தலைவனின் அருட்தன்மைக்கு இயைந்த இறைச்சிப்பொருளாக அமைந்துள்ளது.

இவ்விரு கால இலக்கியங்களும் இறைச்சிப்பொருளை ஏற்றுப் போற்றியுள்ளதை இவற்றானறியலாம்.

மானுட நேயம் வளர ஒத்த மக்கள் தம்முள் உறவு ஆழங்கால்பட இறைச்சி உத்தி சங்கப் பாடல்களில் இடம்பெற்றது. இவ்வாறே கீழ்க்கணக்கு நூற்களிலும் பதிவாகியுள்ளன.

## உருவகம்

உவமை கொள்ளும் பல்வேறு வடிவங்களில் உருவகமும் ஒன்று. தொல்காப்பியம் உருவக அணி எனத் தனியாகச் சுட்டவில்லை. எனினும், அதற்கான கூறுகளை உவமையியலிலேயே குறிப்பிடுவர். தொல்காப்பியத்திற்குப் பின் தோன்றிய தண்டியலங்காரம்,

உவமையும் பொருளும் வேற்றுமை யொழிவித்து
ஒன்றென மாட்டினஃ துருவக மாகும்[121]

என்று உருவகத்திற்கு இலக்கணம் வகுத்துள்ளன. உவமையோடு நெருங்கிய தொடர்புடைய உருவகம் உவமைக் களத்திலே தோன்றுகிறது.

சொல்லின் பயன்பாட்டுச் சூழலும் பல்பொருள்
உணர்த்தும் பாங்கும் கவர் பொருள் தரும்
இயல்பும் தான் உருவங்களைப் படைக்க ஏது[122]

என்பர். மேலும் உருவகம் பற்றிய வரையறைக் கூறும்போது,

பிறிதொரு பொருளோடுள்ள ஒப்புமையின்
ஆழமும், நெருக்கமும் காரணமாக அப்பொரு
ளாகவே குறிக்கப்படும் நிலையில் உருவகம்
உருவாகின்றது[123]

என ச.வே. சுப்பிரமணியன் குறிப்பிட்டுள்ளார்.

அவ்வாறு படைக்கப்படும் உருவகங்கள் மிகவும் ஆழ்ந்த நோக்கில் உருவாகின்றதெனலாம்; நடையினைத் தெளிவாக்குவதற்கும் உருவகம் பயன்படுகிறது.

நடையினைத் தெளிவு செய்வதற்குரிய
சிறப்புக் கூறுகளுள் உருவகமும் ஒன்றாகும்[124]

என்பர். மேலும் உருவக அணி என்பது படைப்பாளனின் நோக்கத்தையும், கலைத் திறனையும் வெளிப்படுத்திக் காட்டுகிறது. இவை இயற்கைப் பேராற்றலைப் பின்னணியாகக் கொண்டு படைக்கப்படுகிறது. இதனை,

மாந்தர் படைப்புகளைச் சிறப்பாகப்
புலப்படுத்தும் உருவக ஆட்சியில் தான்
சிறந்த படைப்பாளனின் வெற்றி உள்ளது[125]

என்பர். இக்கருத்தை உளங்கொள்ளும்போது உவமையோடு நெருங்கிய பிணைப்பை உடையது உருவகம் என் எண்ண இடமுளது.

**சங்க இலக்கியத்தில் உருவகம்**

சங்க இலக்கியங்கள் உவமை, உள்ளுறை, உவமம், இறைச்சி போன்ற இலக்கிய உத்திகளைக் கையாண்டுள்ளது. இவ்வுத்திகளோடு தொடர்புடைய உருவகமும் பல இடங்களில் எடுத்தாளப்பட்டுள்ளன.

செங்கழுநீர்ப் பூக்களைப் போன்ற கண்கள் என்பது உவமை. இவற்றை கண்கள் போன்ற செங்கழு நீர்ப் பூக்கள் என உருவகமாக வந்துள்ளது.

ஒண் செங் கழு நீர்க் கண்போல்[126]

என அகநானூறு குறித்துள்ளது. இவற்றை மனங்கொண்ட மூவாதியார் கண்களைப் போன்ற நெய்தல் மலர் என்று குறிப்பிட்டுள்ளார். அவற்றை,

கண்ணுறு நெய்தல் கமழும்[127]

என்ற வரியால் அறியமுடிகிறது.

மேலும் ஐங்குறுநூறு கண்போன்று கருவிலங்கொடிகள் மலர்ந்துள்ளது என்பதை,

கண்ணெனக் கருவிளை மலர[128]

என்ற பாடல்வரி சுட்டுகின்றது.

இவ்வுருவகம் கார் நாற்பதிலும் இடம்பெற்றுள்ளது. அவை,

கருவிளை கண்மலர் போல் பூத்தன[129]

எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

மேலும் கீழ்க்கணக்கு நூல்களில் பல இடங்களில் உருவகம் அமைந்துள்ளது.

இவற்றை,

திரைபாக னாகத் திமில்களி றாகக்
கரை சேர்ந்த கானல் படையா – விரையாது
வேந்து *கிளர்ந்தன்ன* வேலை நீர்ச் சேர்ப்ப நாள்
ஆய்ந்து வரைதல் அறம்[130]

என்ற செய்யுளும்,

பாறு புரவியாய்ப் பல்களிறு நீள்திமிலாத்
தேறு திரைபறையாய்ப் புட்படையாத் – தேறாத
முன் கிளர்ந்த போலும் கடற்சேர்ப்ப! மற்றொர்
முன் கிளர்ந்(து) எய்தல் முடி[131]

என்றப் பாடலும் விளங்குகின்றன.

## அடிக்குறிப்புகள்

1. ந. சுப்பு ரெட்டியார், கவிதை அனுபவம், ப. 12
2. ச.வே. சுப்பிரமணியன், கம்பன் இலக்கிய உத்திகள், ப. 212
3. இராம. பெரிய கருப்பன், சங்க இலக்கிய ஒப்பீடு, ப. 43
4. மு. வரதராசன், தமிழ் இலக்கிய வரலாறு, ப. 59
5. அகம் - 52: 2 - 3
6. மேலது - 182 - 1
7. மேலது - 188:9
8. திணைமாலை - 20
9. கலித் - 38:6
10. திணைமாலை - 26
11. நற் - 48
12. மேலது - 86
13. திணைமாலை - 65
14. அகம் - 99: 1 - 4
15. ஐந் - ஐம் - 31
16. திணைமாலை - 67
17. குறுந் - 341
18. திணைமாலை - 64
19. ஐந் - 420
20. மேலது - 432
21. ஐங் - 436
22. குறுந் - 21: 2 - 3

23. திணைமாலை - 109
24. மேலது - 120
25. முல்லைப் - 93
26. திணைமொழி - 21
27. நற் - 197: 1 - 2
28. குறுந் - 98:5
29. திணைமாலை - 116
30. புறம் - 154: 10 - 12
31. திருமுருகு - 296
32. குறுந் - 55
33. திணைமாலை - 6
34. மேலது - 19
35. நற் - 159:3
36. கறுந் - 123:2, 320:8
37. பொரு - 213
38. மதுரைக் - 114
39. பட்டினப் - 82 - 83
40. கலித் - 131:17
41. அகம் - 200:1
42. புறம் - 17:11
43. திணைமாலை - 29
44. அகம் - 9:4
45. திணைமாலை - 63
46. ஐங் - 277
47. மேலது - 16
48. மேலது - 36
49. குறுந் - 13:5
50. மேலது - 72
51. மேலது - 167:3
52. மேலது - 259

53. ஐங் - 101

54. நற் - 37:5

55. திணைமாலை - 6, 25

56. திணைமொழி - 11

57. திணைமாலை - 80, 88

58. மேலது - 111, 112

59. கார் - 5

60. ஐந் - ஐம் - 34

61. திணைமாலை - 149

62. ஏலாதி - 14

63. மேலது - 56

64. கார் - 6

65. குறுந் - 131, 132

66. குறுந் - 276

67. மேலது - 338

68. திணைமாலை - 12

69. மேலது - 94

70. ஐந் - எழு - 16

71. நற் - 18

72. ஐங் - 185

73. குறுந் - 119:3

74. மேலது - 126:4

75. அகம் - 39:3

76. திணைமாலை - 33

77. ஐந் - ஐம் - 3

78. திணைமொழி - 21

79. ஏலா - 7

80. பதிற் - 51 - 21

81. அகம் - 39:3

82. திணைமாலை - 42

83. அகம் - 54:7

84. புறம் - 67: 2 - 4

85. திணைமாலை - 72

86. மேலது - 34

87. குறுந் - 167:1

88. ஐங் - 230

89. திணைமொழி - 2

90. குறுந் - 286

91. மேலது - 23:2

92. ஐந் - ஐம் - 27

93. ஏலாதி - 33

94. குறுந் - க.வா.

95. கார் - 16

96. ஐந் - ஐம் - 45

97. பட்டினப் - 298 - 301

98. சிறுபாண் - 122 - 24

99. பொருந - 130 - 131

100. களவழி - 35

101. திணைமாலை - 20

102. மேலது - 22

103. மேலது - 23

104. இ. சுந்தரமூர்த்தி, திருக்குறள் அணிநலம், ப. 20

105. புறம் - 56: 3 - 6

106. மேலது - 58

107. திணைமாலை - 58

108. மேலது - 96

109. மேலது - 97

110. அகம் - 36: 13 - 15, 21 - 23

111. களவழி - 33

112. திணைமாலை - 4

113. அகம் 71: 1- 4

114. திணைமொழி - 33

115. தொல் - உவம, ப. 31

116. தொல், பொருள், அக. 48

117. திணைமாலை - 137

118. க. வெள்ளைவாரணர், தொல்காப்பியம் தமிழ் இலக்கிய வரலாறு, ப. 148

119. குறுந் - 96

120. திணைமாலை - 138

121. தண்டி - 36

122. W. Empson, Seven types of Ambiquity, P. 2

123. ச.வே. சுப்பிரமணியன், கம்பன் இலக்கிய உத்திகள், ப. 287

124. S. Ullmann Meaning and style, P. 89

125. S. Ullmann Meaning and style, P. 83

126. அகம் - 48:8

127. ஐந் - எழு - 63

128. ஐங் - 464

129. கார் - 9

130. திணைமாலை - 52

131. மேலது - 53

## வருணனைச் செல்வாக்கு

### இயற்கையும் வருணனையும்

சங்கப் புலவர்கள் இயற்கையோடு இயைந்த வாழ்வினை நிகழ்த்தியவர்கள். தம் உணர்வுகளையும், கற்பனைகளையும் இயற்கையில் ஏற்றிக் காட்டுகின்றனர். சங்க இலக்கியத்தில் இயற்கையின் ஆட்சி மிகுந்து காணப்படுகின்றன. இயற்கை மனித உணர்வுகளை சித்தரிப்பதாக அமைந்துள்ளது.

இவற்றை,

> மானிட உணர்வுகளோடு இயற்கையின் எழிலை
> இயை புறச் செய்தது பண்டைத்தமிழிலக்கிய
> மரபு[1]

என்று மு.வ. குறிப்பிடுவர்.

சங்கப் புலவர்கள் இயற்கையை வருணிப்பதன் மூலம் மனிதகுலத்துக்கு அறிவுரை வழங்கினர். இயற்கை உயிர்களாகிய மான், யானை, எருமை, கடுவன் அன்றில் ஆகியவற்றின் செயல்களைக் குறிப்பிட்டு தலைவனின் பொறுப்பற்றத் தன்மையை எடுத்துரைத்தனர்.

சங்க அகப் பாடல்கள், புறப்பாடல்கள் இரண்டிலும் இயற்கை வருணனை இடம்பெற்றுள்ளன. அகப் பாடல்களில் ஐந்நிலங்களைப் பற்றிய வருணனைகளையும் ஓவியம் போல் வடித்துள்ளனர். கார் காலத்தின் வரவு செடி கொடிகளில் மலரும் மலர்களின் வழியாக அறிவிக்கப்பட்டது. இயற்கையாக மலர்ந்த மலர்களையும், சங்கப் புலவர்கள்

குறியீட்டில் பயன்படுத்தினர். முல்லை மலரை கற்புக்கும், குறிஞ்சிப்பூவைத் தலைவியின் பருவ வரவைக் குறிப்பதற்கும் பயன்படுத்தினர். இவ்வாறு மனித வாழ்வின் அடித்தளமாக அமையும் இயற்கையைச் சங்கப் புலவர்கள் எவ்வாறு வருணித்துள்ளனர் என ஆய்வது அவசியமான தொன்றாகும்.

**இயற்கையின் நிலைகள்**

இயற்கை பல நிலைகளில் கையாளப்பட்டுள்ளன. அவை,

> இயற்கையை அவ்வாறே காட்டுதல்.
> இயற்கையைச் செயற்கையுடன் கலந்து தருதல்,
> இயற்கையை அழகுறப் புனைதல், இயற்கையின்
> சில பல கூறுகளைத் தேர்ந்து ஒருங்கமைத்து அளித்தல்,
> போன்றன. கூறும்முறையில் எளிய குறிப்பாக
> அமைத்தல், அல்லது விரிவாக வருணித்தல்[2]

என்பர். இவ்வாறு பல நிலைகளில் வருணிக்கப்படும் இயற்கையை பெரிய அளவில் ஆராய இடமுள்ளது. ஆய்வின் எல்லைகருதி ஐந்நிலங்களின் அடிப்படையில் ஓரிரு சான்றுகள் மட்டும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. கீழ்க்கணக்கு நூல்களும் இயற்கையை எவ்வாறு வருணித்துள்ளன என்ற தன்மையும் இவண் ஆராயப்படுகின்றது.

**குறிஞ்சி நில வருணனை**

இயற்கையை வருணிக்கும்போது இலக்கிய வெளியீட்டிற்கும் பயன்படுத்துகின்றனர் என்ற கருத்தை,

> இலக்கிய வெளியீட்டில் உவமை, உள்ளுறை, இறைச்சி,
> குறியீடு, பின்னணி போன்ற பல நோக்க நிறைவேற்றத்திற்கு
> இயற்கை கையாளப் படுகின்றது, உணர்வு வெளியீடு
> களாகவும் இயற்கை அமையலாம் என்பர்.[3]

இதன் அடிப்படையில் விளக்கும்போது இயற்கை வருணனை இவ்விலக்கிய உத்திகளைப் பெற்று வருவதுண்டு; பெறாமல் வருணிக்கப்படுவதும் உண்டு.

உயர்ந்த மலையில் வேங்கை மரத்தின் மேலே ஓங்கி வளர்ந்துள்ள மரக்கிளைகளில் மயில்கள் ஏறிப் பூப்பறிப்பது போல் உள்ளது என்றும், மலைநாட்டுத் தலைவன் தன் மீது கொண்ட நட்பினை கடுவன் அறியுமெனவும் கூறப்பட்டுள்ள பாடலில் குறிஞ்சியின் இயற்கை வருணிக்கப்பட்டுள்ளன.

அரும்பு அற மலர்ந்த கருங்கால் வேங்கை
மேக்குஎழு பெருஞ்சினை இருந்த தோகை
பூக்கொய் மகளிரின் தோன்றும் நாடன்
தகா அன் போலத் தான் தீது மொழியினும்
தன்கண் கண்டது பொய்க்குவது அன்றே
தேக்கொக்கு அருந்தும் முள் எயிற்றுத் துவர்வாய்
வரை ஆடு வன் பறழ்த் தந்தை,
கடுவனும் அறியும்அக் கொடியோ னையோ[4]

என வருணிக்கப்பட்டுள்ளது. இக்காட்சியை ஒத்தாற்போன்று கீழ்க்கணக்கு நூலிலும் குறிஞ்சி நிலக்காட்சி வருணிக்கப்பட்டுள்ளது. அவற்றை,

மன்றத் தறுகல் கருங்கண் முசு உகளும்
குன்றக நாடன் தெளித்த தெளிவினை
நன்றென்று தேறித் தெளிந்தேன் தலையளி
ஒன்று மற்(று) ஒன்றும் அனைத்து[5]

என்ற வெண்பாவால் உணரலாம்.

**முல்லை நில வருணனை**

முல்லை நிலத்தில் மலர்ந்திருக்கும் மலர்களின் அழகும், கொடிகளின் தன்மையும் வருணிக்கப்பட்டுள்ளன. காயா மலர்கள் மைபோன்ற கரிய மலர்களைப் பூத்துக் குலுங்கும் காட்சி வருணிக்கப்பட்டுள்ளது. இவற்றை,

செறியிலைக் காயா அஞ்சன மலர
முறியிணர்க் கொன்றை நல்பொன் காலக்
கோடற் குவிமுகை யங்கை யவிழத்
தோடர்தோன்றி குருதி பூப்பக்
கான நந்திய செந்நிலப் பெருவழி[6]

என்று முல்லைப்பாட்டு விளக்குகின்றது.

இக்காட்சியைத் திணைமொழி ஐம்பது என்ற கீழ்க்கணக்கு நூலும்,

அஞ்சனங் காயா மலரக் குருகிலை
ஒண்டொடி நல்லார் முறுவல் கவின்கொளத்
தண்கமழ் கோடல் துடுப்(பு) ஈனக் காதலர்
வந்தார் திகழ்கநின் தோள்[7]

என்று முல்லை நிலக் காட்சியை எடுத்துரைக்கின்றது.

**மருத நில வருணனை**

மருத நிலத்தின் திணையும் அங்குள்ள நாரை, தாமரை மலரில் குதித்து விளையாடுதல் வருணிக்கப்பட்டுள்ளது. நாரை கெண்டை மீனைப் பற்றிச் செல்லும் காட்சியும், வாளை மீன்கள் பற்றியும் இயற்கையாக வருணிக்கப்பட்டவற்றை,

குருகுகொளக் குளித்த கெண்டை அயலது
உருகெழு தாமரை வால்முகை வெரூஉம்
கழனி அம் படப்பைக் காஞ்சி ஊர[8]

என்றக் குறுந்தொகை வரிகளால் அறியமுடிகின்றது.

இதுபோன்று கீழ்க்கணக்க நூலாகிய ஐந்திணை ஐம்பதில்,
'கோலச் சிறுகுருகின் குத்(து) அஞ்சி ஈர்வாளை
நீலத்துப் புக்(கு) ஒளிக்கும் ஊரற்கு[9]

என வருணிக்கப்பட்டுள்ளது.

**நெய்தல் நில வருணனை**

கடற்கரையின் நிகழ்ச்சிகள் நன்கு வருணிக்கப்பட்டுள்ளது. கடல் அலைகள் கரை மீது மோதுவதனையும், அதனால் மணல் திட்டு உருவாவதையும் அழகுபட சித்தரிக்கப்பட்டுள்ளன. இவற்றை,

யார் அணங் குற்றனை கடலே பூழியர்
சிறுதலை வெள்ளைத் தோடு பரந் தன்ன
மீன் ஆர் குருகின் கானல் அம் பெருந்துறை
வெள்வீத் தாழை திரை அலை[10]

என்று வருணிக்கப்பட்டுள்ளது.

கடற்கரையின் இயற்கையான நிகழ்ச்சிகள் அழகுடன் புனையப்பட்டுள்ளதை,

எக்கர் இடுமணல் மேல் ஓதம் தரவந்த
நித்திலம் நின்றிமைக்கும் நீள்கழி[11]

என்ற பாடலும்,

கொடுமுள் மடல்தாழைக் கூம்பவிழ்ந்த ஒண்பூ
இடையுள் இழுது ஒப்பத் தோன்றிப் புடையெலாந்
தெய்வம் கமழும் தெளிகடல்![12]

என்ற பாடல் வரிகளும் விளக்கி நிற்கின்றன.

**பாலை நில வருணனை**

வறட்சிப் படிவங் கொண்ட பாலை நிலத்தின் இயல்பு வருணிக்கப்பட்டுள்ளன. சங்க இலக்கியங்கள் பிரிவினால் துன்புறும் தலைமகள் பாலை நிலத்தின் நிகழ்ச்சிகளை எடுத்துரைப்பதினாலும், தோழிக் கூற்றினாலும் பாலையின் தன்மைகள் வருணிக்கப்பட்டுள்ளன. இந்நிலையை,

வாள் வரி வயமான் கோள் உகிர் அன்ன
செம்முகை அவிழ்ந்த முள் முதிர் முருக்கின்
சிதரார் செம்மல் தா அய், மதர் எழில்
மாண் இழை மகளிர் பூணுடை முலையின்

முகைபிணி அவிழ்ந்த கோங்கமொடு அசைஇ, நனை
அதிரல் பரந்த அம் தண் பாதிரி
உதர்வீ அம்சினை தாஅய். எதிர் வீ
மராஅ மலரொடு விராஅய்ப் பராஅம்[13]

என்ற அகநானூற்றுப் பாடல் வரிகள் உணர்த்துகின்றன.

இப்பாலை நிலத்தின் இயற்கை வருணனையைக் கீழ்க்கணக்கு நூல்களும் ஏற்றுப் போற்றியுள்ளன. அவற்றை,

உதிரந் துவரிய வேங்கை உகிர்போல்
எதிரி முருக்கரும்ப ஈர்ந்தண் கார் நீங்க – எதிரு நர்க்கு
இன்பம் பயந்த இளவேனில் காண்டொறும்[14]

என்ற பாடல் விளக்குகின்றது.

இயற்கையில்லாமல் மனித வாழ்வு நடைபெறுதல் இயலாது என்றக் கருத்தை ஐந்திணைகளின் வாயிலாக சங்க இலக்கியங்கள் விளங்கி நிற்கின்றன. ஐந்நில வருணனைகள் மட்டுமின்றி சங்கப் புலவர்கள் மனித உறுப்புக்களையும் வருணனை செய்துள்ளனர்.

**உறுப்பு வருணனை**

சங்க நூல்கள் தலைமகளை வருணிக்கும்போது அவளது உறுப்புக்களை வருணித்துள்ளது. அவர்களது முகம், கைகள், கண்கள், கூந்தல், பற்கள், வாய் போன்றவை வருணிக்கப்பட்டன. அவற்றை,

உள்ளிக் காண்பென் போல்வல் முள்எயிற்று
அமிழ்தம் ஊறும் செவ்வாய் கமழ் அகில்
அறம் நாறும் அறல் போற கூந்தல்,
பேர் அமர் மழைக்கண் மடந்தை
மூரல் முறுவலொடு மதைஇய நோக்கே[15]

என்று குறுந்தொகை வருணித்துள்ளது.

தலைவியின் உறுப்புக்களை வருணிக்கும் தன்மை கீழ்க்கணக்கு நூல்களிலும் கையாளப்பட்டுள்ளன. இவ்வாறு வருணிக்கப்படுவதை,

முகத்தாமரை முறுவல் ஆம்பல் கண்நீலம்
இகந்தார் விரல் காந்தன் என்றென்று உகந்திபைந்த
மாழைமா வண்டிற்காம் நீழல்[16]

என்ற திணைமாலைப் பாடல் விளக்குகின்றது.

இயற்கையை வருணித்த சங்கப் புலவர்கள் உறுப்புகளையும் வருணித்துள்ளனர் என்பதை இவ் எடுத்துக் காட்டுகளின் வழி அறியமுடிகின்றது.

இவ்வாறு கீழ்க்கணக்கு நூல்களும் வெண்பா வடிவம் கொடுத்து இடத்தேவைக்கு ஏற்ப இயற்கை வருணனையை ஏற்றுப் போற்றியுள்ளன.

## அடிக்குறிப்புகள்

1. மு. வரதராசன், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, ப. 17
2. சங்க இலக்கியக் கட்டுரைகள், க.அ.ச.வே. சுப்பிரமணியன், க.த. சங்க இலக்கியத்தில் இயற்கை, ப. 10
3. மேலது - ப. 10
4. குறுந் - 26
5. ஐந் - எழு - 9
6. முல்லைப் - 93 - 97
7. திணைமொழி - 21
8. குறுந் - 127
9. ஐந் - ஐம் - 24
10. குறுந் - 163
11. ஐந் - ஐம் - 48
12. மேலது - 49
13. அகம் - 99: 1 - 8
14. ஐந் - ஐம் - 31
15. குறுந் - 286
16. திணைமாலை - 72

## தொன்மச் செல்வாக்கு

பழம் புராணக் கதைகளை இலக்கியப் படைப்பினுள் ஆராய்தலைத் தொன்மம் என்பர். இதன் இலக்கணமாகத் தொல்காப்பியர்,

தொன்மைதானே
உரையொடு புணர்ந்த பழமை மேற்றே[1]

என்று குறிப்பர். இந்நூற்பாவில் வரும் தொன்மை என்ற சொல்லையே 'தொன்மம்' என்று கொண்டுள்ளனர்.[2]

**தொன்மை என்பதற்கு**

உரைநடையால் இயற்றப்பட்ட பழமையான வரலாறுகள்,
கதைகள் முதலியன, உரையிடையிட்ட பாட்டுடைச்
செய்யுள் என்று கூறி பெருந்தேவனாரால்
செய்யப்பட்ட பாரதமும், தகடூர் யாத்திரையும்
போல்வன எடுத்துக் காட்டென்பர் பேராசிரியர்.
உரையொடு புணர்ந்த என்பதற்கு உரையொடு
கலந்த பொருள் கொண்டு விட்டார் என்று[3]

எனத் தொல்காப்பியர் கூறியதையும், பேராசிரியர் உரையையும் சி. இலக்குவனார் விளக்கியுள்ளார்.

பழமையான கருத்துக்களைக் கூறுவது தொன்மை என்று கூறுகின்றார் தொல்காப்பியர். இந்நூற்பாவை ஆராயும்போது தொன்மை என்பது புராணக் கருத்துக்களையும், பழமையையும் உள்ளடக்கியது என்று சோமசுந்தரம் கூறுகிறார். அவை,

புராணம் என்றசொல் பழமை என்ற பொருளை
யுடையது இறைவனின் பெருமை பாடுவதாகவும்
சமயத் தலைவர்களின், அரசர்களின் வரலாறு
களைப் பாடுவதாகவும், கோயிக்லளின், ஊர்களின்
வரலாற்றுப் பெருமைகளைப் பாடுவதாகவும்
அமைகின்றன. பக்திச்சுவை மிக்கு வீட்டு
நெறிக்கான வழிகளைக் கூறுவதே இதன்
இயல்பாகும்[4]

என்பவையாகும். இவை சமயஞ்சார்ந்ததாகக் கருதப்படுகிறது.

**தொன்மம் பற்றிய திறனாய்வாளர் கருத்து**

தொன்மத் திறனாய்வைப் பற்றிக் குறிப்பிடும்போது,

தொன்மத்திறனாய்வு என்பது மேற்கத்திய இலக்கிய விமர்சன
உலகில் (Archetypal Criticism) என வழங்கப்படுகிறது. இது மனிதவியல்,
உளவியல், மத ஒப்பியல், இலக்கியம் மற்றும் நுண்கலைகள்
போன்ற பல்வேறு துறைகளின் கூட்டுத் தொகுப்பாக
விளங்குகிறது, 'தொன்மம்' (arcetype) என்பது
தொன்மத் திறனாய்வின் அடிப்படைக் கூறாகும்.
இந்தத் தொன்மம் அல்லது தொல்படிமமானது
மனித மனத்தினுள்ளே ஆழப்பொதிந்துள்ள
மிகத் தொன்மையான உணர்வுகளின் உள்ளடக்கமே
ஆகும். நாகரிகம் வளரவளரத்
தொல் படிமங்கள் மீது பல படிவுகள் ஏற்பட்டு,
அவை வெளிப்புற வாழ்வினிலே உணரப்பட
முடியாதவாறு அமைந்து விட்டன. இதில் தொல்
படிமங்களே கவிதைத் திறன் இயற்கையிலேயே
கைவரப் பெற்றக் கவிஞனுக்கு படைப்புத்திறனில்
மிகவும் உதவுகின்றன[5]

என்று T. கங்காதரன் குறிப்பிட்டுள்ளார்.

இக்கருத்துக்களை உளங்கொண்டு தொன்மம் என்பதைத் தொன்மை வாய்ந்த கதையாகவும், புராணங்களுடைன் கூடிய சமயச் சார்பினதாகவும் கொள்வதில் தவறில்லை, இவ்வரையறைகளோடு இவ்ஆய்வு மேற்கொள்ளப்படுகிறது.

**படைப்பாளனும் தொன்மையும்**

தொன்மத்தை இலக்கியப் படைப்பாளர்கள், கற்போருக்குக் கருத்தைத் தெளிவாகப் புரியவைக்கவும், எளிதில் அவர்கள் புரிந்து கொள்வதற்கும் ஏற்றவகையில் கையாளுகின்றனர். இலக்கியப் படைப்பாளர்கள் தான் பயன்படுத்தும் தொன்மத்தை உவமையினாலும், வருணனையினாலும், அறிவுறுத்துவதனாலும் அமைக்கின்றனர்.

**தொன்ம வகைகள்**

இலக்கியத்தைச் சமுதாய நோக்குடன் ஆராய வேண்டும். ஒப்பிலக்கிய ஆய்வாளர்கள் தொன்மத்தைப் பல வகைகளாகப் பிரித்துள்ளனர். அவற்றை இங்கு காண்பது அவசியமாகும். அவைகளாவன,

1. மெய்ப்பொருள் இலக்கியம் (Mystical function)

2. பரவெளி தரும் உருவளவை (Cosmological dimension)

3. சமூகவியல் சார்பு தொன்மம் (Sociological basis)

4. அறிவு கொளுத்தும் தொன்மம் (Pedagogical)

எனக் கதிர்மகாதேவன் தொன்மத்தை நான்காகப் பகுத்துள்ளார்.[6] இக்கொள்கையில் பரவெளி தரும் உருவளவையைத் தவிர மற்ற மூன்று வகைகளும் நம் நாட்டு இலக்கியங்களில் பரவலாகக் காணப்படுகின்றன.

**சங்க இலக்கியத் தொன்மங்கள்**

சங்க நூற்களில் நூற்பொருளின் விளக்கமாகத் தொன்மங்கள் அமைந்துள்ளன. இவ்வகையில் அகத்திணையில் ஐந்திணைகளுக்குமுரிய தெய்வங்கள் இடம்பெற்றுள்ளதை அறியலாம். அவற்றை,

மாயோன் மேய காடுறை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெருமணல் உலகமும்
முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்
சொல்லிய முறையால் சொல்லவும் படுமே

எனத் தொல்காப்பியர் வரையறை செய்துள்ளார்.[7]

குறிஞ்சிக்கு முருகனும், முல்லைக்குத் திருமாலும், மருதத்துக்கு இந்திரனும், நெய்தலுக்கு வருணனும் தெய்வங்களாகக் குறித்துள்ளார். இத்தெய்வங்களைத் தொன்மங்களாகக் கையாண்டுள்ளனர். கீழ்க்கணக்கு நூல் ஆசிரியர்கள் சங்கஇலக்கியத் தொன்மங்களை வரவேற்றுள்ளனர்.

**கீழ்க்கணக்கு நூல்களும் தொன்மங்களும்**

கீழ்க்கணக்கு நூல்களில் பெரும்பாலானவை அறக் கருத்துக்களையே வலியுறுத்துகின்றன. இருப்பினும், தொன்மக் கருத்துக்களையும் தன் கையகத்தே கொண்டு விளங்குகின்றன. நீதியை வலியுறுத்தும்போதும், ஒழுக்கங்களை உயர்த்திக் கூறும்போதும் தொன்மக் கருத்துக்களை கையாண்டுள்ளனர். அகநூல்களிலும், கடவுள் வாழ்த்துப் பகுதியிலும் தொன்மச் செய்திகள் நிரம்ப இடம் பெற்றுள்ளதை அறியமுடிகிறது.

1. சங்க இலக்கியங்களைப் போலவே ஐந்திணைக்குரிய தெய்வங்கள், இராமாயணக் கதைகள், பாரதப்போர் இடம் பெற்றுள்ளன.
2. தெய்வங்களின் அவதாரங்களும் அவற்றின் செயல்பாடுகளும் எடுத்தியம்பப்பட்டுள்ளன.
3. தலைவன் தலைவியரின் பண்புகளைக் கூறும்போதும், தொன்மம் கையாளப்பட்டுள்ளன.

கடவுள் வாழ்த்துப் பகுதிகளில் எனத் தொன்மங்கள் பல இடங்களில் கையாளப்பட்டுள்ளன.

**முருகன்**

சேயோன் மேய மைவரை உலகம்

எனத் தொல்காப்பியர் கூறியுள்ளார்.[8]

முருகன் குறிஞ்சிநிலக் கடவுளாக வணங்கப்படுவதைச் சங்க இலக்கியங்களின் வழி அறிய முடிகிறது. மனிதர்கள் மலைகளைச் சார்ந்து வாழ்ந்த காலந்தொட்டு முருகன் மலைநிலக் கடவுளாக வணங்கப் பட்டான். தமிழ் இலக்கியங்களில் முருகனைப் பற்றிய செய்திகள் நிரம்பக் காணப்படுகின்றன.

> தமிழ் இலக்கியத்துள் முருகன் செவ்வேலாகவும்,
> திருமணக் கடவுளாகவும் போற்றப்படுகின்றான்

என க. நெடுஞ்செழியன் குறிப்பர்.[9]

இதனைக் கொண்டு ஆராயும்போது, காதல் நோயால் வருந்திய தலைவியின் உடல் மெலிவிற்கான உண்மை காரணத்தை அறிய முடியாததாய், வேலனை அழைத்து வெறியாட்டு நடத்துகின்றாள். முருகன் கையில் வேலிருத்தல், அவனக்குக் கள்ளைப் படைத்தல், ஆடுகளைப் பலிகொடுத்தல் ஆகிய நிலைகளினால் முருகன் திருமணக் கடவுளாகப் போற்றப்பட்டு வணங்கப்பட்டான் என உணரமுடிகின்றது.

மேலும் கோடைக்காலத்தில் கனிந்ததும், தேனை ஒத்த சுவையினை உடையதுமாகிய மாம்பழச் சாற்றில், பலாவினது ஒத்தாற்போன்ற சுளைகளைக் கலந்து, அடையில் இருந்து பிழிந்த தேனொடு சேர்த்து அவற்றை கணுநீக்கப்பட்ட மூங்கிற் குழாயில் அடைத்து, பாம்பின் நஞ்சைப்போல வெறிகொள்ளுமாறு செய்த மதுவினை, உயர்ந்த மலையுச்சியில் வாழும் முருகனுக்குப் படைத்தார்கள் என்ற செய்தியை,

என் ஆ வதுகொல் தானே – முன்றில்
தேன்தேர் சுவைய திரள் அரை மா அத்துக்
கோடைக்கு ஊழ்த்த கமழ் நறு தீங்கனிப்
........................................................
........................................................
பயிர்ப்புறப் பலவின் எதிர்ச் சுளை அளைஇ
பாம்புகடுப்பு அன்ன தோப்பி வான்கோட்டுக்
கடவுள் ஓங்கு வரைக்கு[10]

என்ற அகநானூற்றுப் பாடல் விளக்குகிறது.

### வேலனுக்கு நெறியாட்டு செய்தது

முருகப் பெருமானை வழிப்பட்டு, ஆட்டுக் குட்டியை கொன்று இத்தலைவியினுடைய நறுமையான நெற்றியைத் தடவி முருகனை வணங்கி, அவனக்கு வெறியாட்டு நடத்தியச் செய்தியை சங்கநூலான குறுந்தொகை,

முருகு அயர்ந்து வந்த முதுவாய்வேல
சினவல் ஓம்புமதி வினவுவது உடையேன்
பல்வேறு உருவின் சில்அவிழ் மடையொடு
சிறுமறி கொன்று இவள் நறுநுதல் நீவி
வணங்கினை கொடுத்தி[11]

என்றுக் கூறுகின்றது.

இவ்வாறு முருகனுக்கு வெறியாடு நடத்தியதைக் கீழ்க்கணக்கு அகநூல்களும் எடுத்துரைக்கின்றது. அவற்றை,

வெறிகமழ் வெற்பன் என் மெய்ந்நீர்மை கொண்ட(து)
அறியாள் மற்(று) அன்னோ! அணங்(கு) அணங்கிற்றென்(று)
மறயீர்த்(து) உதிரம் தூய், வேலன் தரீஇ
வெறியோ(டு) அலம்வரும் யாய்[12]

என்ற ஐந்திணை ஐம்பது பாடல் வரிகளால் அறிந்துகொள்ள முடிகிறது. இவ்வாறு காலங்காலமாக வணங்கப்பட்ட முருகனைத் தமிழ்வழித் தொன்மத்திற்குரியவனாக குறிப்பர்.

**முருகன் சூரபன்மனை அழித்தது**

திருப்பரங்குன்றத்தில் கோவில் கொண்டிருக்கம் முருகனை நல்லந்துவனார் என்னும் புலவர் பாடியுள்ளார். முருகன் சூரபன் மாவினை அவன் சுற்றத்தோடு தொலைத்த செய்தியை அகநானூற்றில்,

சூர்மருங்கு அறுத்த சுடர்இலை நெடுவேல்,
சினமிகு முருகன் தண்பரங் குன்றத்து,
அறிந்துவன் பாடிய சந்துகெழு நெடுவரை[13]

என மதுரை மருதனிள நாகனார் பாடியுள்ளார்.

இத்தொன்மச் செய்தியைக் கீழ்க்கணக்கு நூலாகிய திணைமாலை ஆசிரியர் உளங்கொண்டு படைத்தளித்தார் என்பது உளங்கொளத் தக்கது. அவற்றை தலைமகள் தோழிக்கு உரைக்கும் துரையில் வைத்துப் பாடியுள்ளார் என்ற செய்தியை,

கருங்கடல் மாந்திய வெண்தலைக் கொண்மூ
இருங்கடல்மா கொன்றான்வேல் மின்னிப் – பெருங்கடல்
தன்போல் முழங்கித் தவளம் குருந்தணைய[14]

என்ற பாடல் வரிகளால் அறிய முடிகிறது.

மேலும் முருகனை கடவுள் வாழ்த்துப் பகுதியில் நிரம்பப் பாடியுள்ளனர். முருகனைத் தொழாதவர்களுக்கு துன்பம் உண்டாகும் என்ற செய்தி,

.................................... ஆங்கின்னா
சத்தியான் தாள் தொழாதார்க்கு[15]

என இன்னாநாற்பதின் கடவுள் வாழ்த்து கூறுகிறது.

**சிவன்**

தமிழ் இலக்கியங்களுள் மதுரைக்காஞ்சியில் ஐம்பூதங்களின் தலைவனாகப் புனையப்படுகின்றான். 'ஆலமர் கடவுளாகவும்', காரியுண்டிக் கடவுளாகவும், நீல மணிமிடற்று ஒருவனாகவும், முக்கண் உடையவனாகவும் சுட்டப்படுகிறான்.

**உமைபங்கன்**

சிவன் உமையுடன் இருப்பதை சங்கப் பாடல்களில் (புறம் - 1: 7 - 8, அகம் - க.வா. 1 - 7, பதிற் - க.வா. 7 - 8) காண முடிகிறது. இதனை,

பெண்ணுரு வொருதிற னாகின் றவ்வுருத்
தன்னுள் அடங்கிக் கரக்கினுங்கரக்கும்
பிறைநுதல் வண்ணமாகின்ற அப்பிறை
பதினெண் கணனு மேத்தவும் படுமே
எல்லா வுயிர்க்கும் மேம மாகிய
நீரற வறியாக் கரகத்துத்
தாழ்சடைப் பொலிந்த வருந்தவத் தோற்கே[16]

எனப் புறநானூறு கூறுகின்றது. இத்தோற்றத்தைக் கீழ்க்கணக்கு நூல்களும் ஏற்றுப் போற்றியுள்ளன. இக்கருத்தினை,

வேலன் தரீஇய விரிசடைப் பெம்மான்
வாலிழை பாகத்து அமரிய கொழுவேல்
கூற்றம் கதழ்ந்தெறி கொன்றையன்
கூடடா உலகம் கெழீஇய மலிந்தே

என்ற இன்னிலை விளக்கியுள்ளது.[17]

சிவபெருமானப் பற்றிய செய்தி தொன்மமாக வந்துள்ளது. அவனை முக்கண்ணுடையவனாகச் சங்க நூல்கள் குறிப்பிட்டுள்ளன.

முக்கண் பற்றி,

வலவயினுரிய பலர்புகழ் திணிதோள்,
உமையமர்ந்து விளங்கும் இமையா முக்கண்[18]

எனத் திருமுருகாற்றுப்படை எடுத்தியம்புகிறது. இச்செய்தியை,

முக்கண் பகவன் அடிதொழா தார்க்கின்னா[19]

என இன்னா நாற்பது விளக்குகிறது.

## திருமால் அவதாரங்கள்

### கண்ணன் - பலராமன்

திருமால் கண்ணனாகவும், பலராமனாகவும் ஒரே சமயத்தில் அவதாரம் செய்திருந்தனன், கண்ணன் முக்காற் பங்கும், பலராமன் காற்பங்கும் நாராயண அம்சத்துடன் பிறந்திருந்தனர் என்பர் சான்றோர். இவ்விருவரையும் சேர்த்துப் புறநானூற்றுப் பாடலில் காணமுடிகின்றது. இச்செய்தியை,

> பானிற வுருவிற் பனைக் கொடி யோனும்
> நீனிற வுருவி பேமி யோனுமென்று
> இருபெருந் தெய்வமு முடனின்றாங்கு[20]

என அறியமுடிகின்றது. மேலும் பலராமனையும், கண்ணனையும் பற்றிய பாடல் வரிகள் (கலி - 105, 26, 364, 104, 124:36, நற் - 32, புறம் - 56, பரி - 1, 2, 2:3) பல இலக்கியங்களில் இடம்பெற்றுள்ளன.

தொன்மச் செய்திகளை எடுத்தாளுவதில் சங்க இலக்கியப் புலவர்கள் மிகுந்த ஆர்வமும் ஈடுபாடும் கொண்டிருந்தனர். கீழ்க்கணக்கு நூலாசிரியர்களும் தனக்கு முன்தோன்றிய சங்க நூல்களின் தாக்குறவைப் பெற்றிருந்தனர்.

### பலராமன்

மறத்தின் மிகுதியினாலே, பேரொலியோடு மாறுபட்டோரைக் கொள்ளும் படையினையுடையமையால், வரம்பு கடந்து எதிர்வருபவரின் உயிரைப் போக்கும் ஆற்றலில் மிகுந்த வல்லொலியையும், பொலிவான புகழைக் கொண்ட, புழுதியின் மார்பை உழுகின்றதான, வளைந்த முகப்பைக் கொண்ட நாஞ்சிற் படையை உடையவன் பலராமன் என்று பரிபாடல்,

> மறமிகு மலியொலி மாறடு தானையால்
> திறனிகந்து வரூஉம் அவருயிர் அகற்றும்
> விறன் மிகு வலியொலி பொலிபுகழ் புழுதியின்
> நிறனுழு வளைவாய் நாஞ்சிலோனும்[21]

என்று கூறுகிறது.

தொன்மச் செய்திகளைச் சங்க இலக்கியப் புலவர்கள் கையாள்வதில் ஈடுபாடும், ஆர்வமும் காட்டினர். இத்தொன்மச் செல்வாக்குக் கீழ்க்கணக்கு நூல்களிலும் நிரம்ப இடம்பெற்றுள்ளன. இச்செய்தியை,

இருள் பரந்(து) ஆழியான் தன்னிறம்போல் தம்முன்
அருள் பரந்த ஆய்நிறம் போன்றும் – மருள்பரந்த[22]

என்றும்,

பாழிபோல் மாயவன்தன் பற்றாற் களிறெறிந்த
ஆழிபோல் ஞாயிறு கல்சேரத் – தோழியே
மான்மாலை தம்முன் நிறம்போல் மதிமுளைப்ப
யான்மலை ஆற்றேன் நினைந்து[23]

என்றும் திணைமாலை நூற்றைம்பது கூறுகின்றது.

**கண்ணன்**

கண்ணன் ஆயர்பாடியில் நந்தகோபர் அரண்மனையில் குழந்தையாய்த் தொட்டிலில் கிடக்கையில் கம்சன் ஏவலால் சகட வடிவத்தில் வந்த சகடாசூரன் என்ற ஓர் அசுரனைத் தம் காலால் உதைத்து அழித்த செய்தியை,

மாயச் சகடம் உதைத்ததூ உம்[24]

என்று திரிகடுகம் கூறுகிறது.

**ஞாலம் அளந்தவன்**

மாபலிச் சக்ரவர்த்தி என்பவன் பெரும் வலிமைப் படைத்தவன்; மூவுலகங்களையும், தன் ஒரு வெண் கொற்றக் குடைக் கீழ் கொண்டு வந்தவன். இதனால் இந்திரன் முதலான தேவர்கள் திருமாலிடம் முறையிட, திருமாலும் அவர்களின் வேண்டுகோட்கிசைந்து வாமன வடிவம் மேற்கொண்டு தம் அடியால் மூன்று அடி மண்ணை தானமாக மாபலிச் சக்ரவர்த்தியிடம் வேண்டினார். அசுரகுருவாகிய சுக்கிரன் வந்தவர் மாயத்திருமால் என்று கூறித் தடுத்தும் மாபலி அதைக் கேளாது நீர் வார்த்துத் தானமாகக் கொடுத்தான். தானமாகப் பெற்ற மண்ணைத் திருமால் அளக்கக் கருதி நெடிய வடிவங் கொண்டு மூன்று உலகங்களையும் தம் திருவடியால் அளந்து மூன்றாவது அடியை அவன் தலையில் வைத்த செய்தியைக் கலித்தொகை,

ஞால மூன்றடித்தாய முதல்வற்கு[25]

எனக் கூறுகின்றது.

நல்லாதனார் என்ற புலவர் தான் இயற்றிய திரிகடுகக் காப்புப் பாடலில் இத்தொன்மத்தைக் கையாண்டு இருக்கிறார். இதனை,

கண்ணகல் ஞாலம் அளந்ததூஉம்
பூவைப்பூ வண்ணன் அடி[26]

என்ற பாடல் வரியால் அறியமுடிகிறது.

நான்மணிக்கடிகையிலும் உலகளந்த செய்தி தொன்மச் செய்தியாகக் கையாளப்பட்டுள்ளன.

அடியினால் முக்காற் கடந்தான் முழுநிலம்[27]

என்ற வரி உணர்த்துகின்றது.

**குருத்தம் தாய்ச்சதவன்**

கிருட்டிண அவதாரத்தில் கம்சனால் ஏற்பட்ட அரக்கன் ஒருவன், யமுனை ஆற்றங்கரையில் தங்கி கண்ணனைக் கொள்ள சமயம் பார்த்திருந்தான். அவனுடைய வஞ்சனை செயலை உணர்ந்த கண்ணன் விளையாட்டகாவே தம் திருவடிகளால் அம்மரத்தை முறித்துத் தள்ளினாரென கூறப்படுகின்றது. இத்தொன்மச் செய்தியைக் கீழ்க்கணக்கு நூல்கள் எடுத்தியம்புகின்றன.

காமருஞ்சீர் தண்ணறும் பூங்குருத்தம் சாய்த்ததூஉம்
பூவைப் பூ வண்ணன் அடி[28]

என்ற திரிகடுக வரிகளால் உணரமுடிகின்றது.

கிருட்டிணாவதாரத்தில், இந்திரன் மழைப் பெய்வித்தபோது பசுக் கூட்டங்களின் நடுக்கத்தை நீக்கும்பொருட்டு கோவர்தன மலையைக் குடையாகப் பிடித்தான். அதன்மூலம் ஆயர்களையும் அவர்களது பசுக்கூட்டங்களையும் காத்தருளினான் என்ற செய்தி,

.......................................... அக்காலத்து
ஆப்பனி தாங்கிய குன்றெடுத்தான் சோவின்
அருமை அழித்த மகன்[29]

என்று நான்மணிக்கடிகை கூறுகின்றது. திருமால் பற்றிய தொன்மங்கள் பல இடங்களில் கையாளப்பட்டுள்ளன.[30]

திருமால் பற்றிய தொண்மங்கள் இலக்கியச் செல்வாக்கினைப் பெற்றதை இவ்வியலான் அறியமுடிகிறது.

**குபேரன்**

அறிவு ஆராய்ச்சியுடையவனாய் யானையும், குதிரையும், பொன்னும், கன்னிகையும், பசுவின் கூட்டமும் ஆகிய நிறைந்த செல்வங்களுடன் வாழ்க என ஈகை குணமுள்ளவனை வாழ்த்துவது வழக்கமாக இருந்தது. இதனை,

யானை குதிரை பொன் கன்னியே ஆனிரையோ(டு)
ஏனையொழிந்த இவையெல்லாம் ஆனெய்யால்
எண்ணனாய் மாதவர்க்(கு) ஊன் ஈந்தான் வைசிர
வண்ணனாய் வாழ்வான் வகுத்து[31]

என்று ஏலாதி விளக்குகிறது.

**அருந்ததி – பெண்**

அருந்ததி போன்ற கற்புடைய மகளிரின் தோள்களைச் சேரும் கணவனுக்குத் திரிகடுகம் (போல்) மருந்தாகும் என்பதை,

அருந்ததிக் கற்பினார் தோளும்[32]

என்று திரிகடுகம் குறிப்பிடுகிறது.

**இது,**

அருந்ததி அனைய கற்பின்[33]

என்று ஐங்குறு நூற்றில் செல்வாக்குப் பெற்றவையாகும்.

**நப்பின்னை**

திருமண வாழ்வில் இல்லறம் நடத்துவதற்குரிய முறைகளைக் கூறும்போது பொய்கையார் நப்பின்னையில் வரலாற்றை எடுத்துரைக்கிறார். இதனை,

ஒப்புயர்வில் வேட்டோன் ஒருநிலைப்பட்(டு) ஆழ்ந்தசெயல்
நப்பின்னை ஞாலம் ஒருங்கறிய – துப்பராய்த்
தூயமலரின் மென்மையுறு தோற்றத்தை வைத்துய்க்க
ஏமக்கழத்தி அறிந்து[34]

என்ற இன்னிலையில் அறியமுடிகிறது.

**இராமாயண பாரதத் தொன்மங்கள்**

திராவிட நாகரிகத்தில் ஆரிய நாகரிகம் கலந்த காலம் தொட்டு, இரு நாகரீக

பண்பாட்டு உறவுகள் வேர்கொள்ளத் தொடங்கின என்றும்,

இவ்வளர்ச்சியில் சங்க காலம் தொட்டு
இன்றளவும் வடநாட்டிற்குரிய இராமாயணம்
பாரதம் ஆகிய இரண்டின் கருத்துக்கள்
தமிழ் இலக்கிய வரலாற்றில் இடம்பெறலாயின.
இந்நிலையில் கம்பரும், வில்லிப்
புத்தூராரும் காப்பியம் பாடத் தொடங்குவதற்கு
முன்பு இராமாயணம், பாரதம்
பற்றிய தனிநூல்கள் இருந்த தற்கான
சான்றுகள் கிடைத்தில என்பர்.[35]

ஆனால் இவ்விரண்டு கதைகளும் தமிழக மக்களிடம் செவிவழிக் கதைகளாகச் செல்வாக்குற்றிருந்தன. இவற்றை சங்க இலக்கியங்களில் பரவலாகக் காணமுடிகிறது.

**இராமன் - இராவணப் போர்**

போரிலே வெற்றி பெறும் ஆற்றலுடைய இராமன், இலங்கையிற் படையெடுத்தல் பற்றி ஆராயப்பட்டுள்ளன. இவற்றை,

வென்வேற் கவுரியர் தொல்முது கோடி
முழுங்கு இரும் பௌவம் இரங்கும் முன்துறை,
வெல்போர் இராமன் அருமறைக்கு அவித்த
பல்வீழ் ஆலம்போல[36]

என அகநானூறு விளக்குகிறது.

இராமாயணப் போர் நடந்ததைப் பற்றி பழமொழி விளக்கியுள்ளது. அரக்கனான இலங்கையர்கோன் இராவணன், சீதையைக் கவர்ந்து, இராமன் பகைக்கு ஆளாகிப் போர் செய்து மாண்டான் என்ற கதையை,

போற்றாது கொண்டு அரக்கன் போரில் அகப்பட்டான்[37]

என்றுப் பழமொழி விளக்குகிறது.

மேலும் புறநானூறு,

கடுந்தெற லிராமன் உடன்புணர் சீதையை
வலித்த கையரக்கன் வெளவிய ஞான்றை
நிலஞ்சேர் மதரணி கண்டகுரங்கின்
செம்முகப் பெருங்கினை யிழைப்பொலிந்தா அங்கு[38]

என்றுக் கூறுவதிலிருந்து கீழ்க்கணக்கு நூல்கள், மேற்கணக்கு நூல்களின் தொன்மைச் செல்வாக்கை முழுமையாகக் கையாண்டுள்ளது என்பது விளங்குகிறது.

**இலங்கை அரசன் விபீடணன்**

இராமனை அடைக்கலம் அடைந்ததால், இலங்கை அரசன் இராவணனின் தம்பி விபீடணன் இலங்கையை ஆளும் அரசனானான் என்றச் செய்தியை,

> பொலந்தார் இராமன் துணையாகத் தான்போந்து
> இலங்கைக் கிழவர்க்கு இளையான் – இலங்கைக்கே
> போந்து இறைஆயதும்[39]

என்ற பழமொழி நானூறு விளக்குமாற்றான் அறியமுடிகிறது. இவ்வாறாக இராமன் இராவணப் போர் பற்றிய தொன்மைச் செல்வாக்கைச் சங்க நூல்கள் மட்டுமின்றி கீழ்க்கணக்கு நூல்களும் ஏற்றுப் போற்றியுள்ளன.

**பாரதப் போர்**

பாரதப் போர் பற்றியச் செய்திகளைச் சங்க காலமக்கள் அறிந்திருந்தனர். பாண்டவர்கள் கதையையும் நன்கு தெரிந்திருந்தனர். இவ்வாறு மக்களிடையே வழக்கில் இருந்தத் தொன்மைக் கருத்துக்களை அடக்கால இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன. இதனை,

> மறத்தலைக் கொண்ட நூற்றுவர் தலைவனைக்
> குறங்கறுத் திடுவான்போற் கூர்நுதி மடுத்த[40]

என்றக் கலித்தொகையால் அறிய முடிகிறது.

இப்பாரதப் போரைப் பற்றி பழமொழி நானூறு விளக்கியுள்ளது. கவுரவர்களிடம் பாண்டவர்களும் தனது உரிமைப் பொருளையே வைத்துச் சூதாடினர். அதனால் பாண்டவர்களுக்கும், கவுரவர்களுக்குமிடையே போர் மூண்டது என்ற செய்தியையும், அதனால் இருவரும் எதிர் நின்று போரிட்டனர் என்பதையும்,

> பாரத்துள்ளும் பணையம்தம் தாயமா
> ஈரைம் பதின்மரும் போர்எதிர்ந்து ஐவரோடு
> ஏதிலராகி இடைவிண்டார்[41]

என்றப் பழமொழி நானூறு வரிகளால் அறியமுடிகிறது.

**அரக்கு மாளிகை**

அரக்கு மாளிகையில் தரும புத்திரர்களாகிய பாண்டவர்கள் ஐவரையும் வைத்துத் தீயிட்டான் துரியோதனன். அவர்கள் அங்கிருந்து வேறுவழியாக வெளியேறி உயிர்ப்

பிழைத்தனர் என்ற செய்தியை,

..............................................
.................................... – அரக்கு இல் உள்
பொய்யற்ற ஐவரும் போயினார் இல்லையே[42]

என்ற வரிகளால் உணரமுடிகிறது.

**பெருஞ்சோறளித்தல்**

பாண்டவர்களுக்கும், துரியோதனாதியர் நூற்றுவர்க்கும் பாரதப்போர் நிகழ்ந்தபோது உதியஞ் சேரலாதன் சோறளித்தான். இதனால் பெருஞ்சோற்று உதியஞ் சேரலாதன் என்னும் சிறப்புப் பெயரைப் பெற்றான். பெருஞ்சோறு வழங்கியதை,

அலங்குளைப் புரவி யைவரொடு சினை இ
நிலந்தலைக் கொண்ட பொலம்பூந் தும்பை
ஈரைம்பதின்மரும் பொருதுகளத் தொழியப்
பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்[43]

என முரஞ்சியூர் முடிநாகராயர் வாழ்த்து மாற்றான் அறியலாம்.

பாரதப் போரில் நடந்த நிகழ்ச்சிகளை இன்னிலை, பழமொழி உள்ளிட்ட நீதி நூல்கள் பதிவு செய்துள்ளன. தொன்மச் செல்வாக்கைக் கீழ்க்கணக்கு நூல்கள் ஏற்றுப் போற்றியதை அறியமுடிகிறது. பாரதப் போரில் கண்ணன் விரும்பி அர்ச்சுனனுக்குக் கூறிய கீதையாகிய அறிவுரையைக் கேட்ட கொடிய பேய் ஒன்று அறிவு பெற்று சான்றோர் அவையைப் போய்ச் சேர்ந்தது என்ற செய்தியை எடுத்து உரைத்து, மனிதர்களுக்கு அறிவுரை வழங்குகிறது இன்னிலை. இக்கருத்தை,

அன்றமரில் சொற்ற அறிவுரைவீழ் தீக்கழுது
மன்றுயர்து போந்த வகைதேர்பின் – பொன்றா
அறமறிந்தோன் கண்ட அறம்பொருட் கேட்(டு) அல்லல்
மற மொறுக்க வாய்த்த வழக்கு[44]

எனப் பொய்கையார் விளங்குவதினால் அறியமுடிகிறது.

**மன்னர்கள்**

**சோழன்**

சங்க இலக்கியங்களில் சேர, சோழ, பாண்டியர்களைப் பற்றிய தொன்மச் செய்திகள் இடம்பெற்றுள்ளன. தூங்கையில் எறிந்த தொடிதோட் செம்பியன் என்னும் சோழஅரசனைப் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. அவற்றை,

ஈதனின் புகழுமன்றே, சார்தல்
ஒன்னா ருட்குந் துன்னருங் கடுந்திறற்
தூங்கையி லெறிந்தநின் னூங்கவோர் நினைப்பின்
அடுதனின் புகழுமன்றே கெடுவின்று
மறங்கெழு சோழ ருறந்தை அவையைத்து[45]

என்றுப் புறநானூறும்,

.................................... ஒன்னார்
ஒங்கெயிற் கதவம் உருமுச்சுவல் சொறியும்,
தூங்கெயில் எறிந்த தொடி விளங்கு தடக்கை
நாடா நல்லிசை நற்றேர்ச் செம்பியன்[46]

என்று சிறுபாணாற்றுப்படையும் விளக்கு நிற்கிறது.

சங்க இலக்கியங்களில் கூறப்படும் சோழ மன்னர்ப் பற்றிய தொன்மத்தைக் கீழ்க்கணக்கு நூல்களும் ஏற்றுள்ளன. வலிமையால் பருத்துத் திரண்ட திண் தோள்களையுடைய சோழ மன்னன் செம்பியனுடைய சினம் ஆகாயத்தில் உலவிக் கொண்டிருந்த வலிமை மிக்க அசுரர்கள் கோட்டைகளை அழித்தச் செய்தியை,

வீங்தோள் செம்பியன் சீற்றம் விறல்விசும்பில்
தூங்கும் எயிலும் தொலைத்தலால் – ஆங்கு
முடியும் திறத்தால் முயல்க தாம் கூரம்பு
அடிஇழுப்பின் இல்லை அரண்[47]

என்றுப் பழமொழி விளக்குகிறது.

**சேரன்**

சேர அரசர்களின், அச்சம்தருதலின் மிக்கதான் கொல்லி மலையில் உள்ள கரிய கண்ணையுடைய தெய்வத்தால் அம்மலையின் மேல்பால் எழுதி வைக்கப் பெற்ற நல்ல அழகினையுடைய கொல்லிப் பாவைப் பற்றிய செய்திகளையும் சங்க இலக்கியங்கள் கூறுகின்றன. அவற்றை,

பெரும்பூண் பொறையன் பே எம்முதிர் கொல்லிக்
கருங்கட் தெய்வம் குடவரை எழுதிய
நல்இயல் பாவை அன்ன[48]

எனக் குறுந்தொகை பதிவு செய்துள்ளதால் அறியமுடிகிறது.

இப்பெருமை வாய்ந்த சேர மன்னர்களைப் பழமொழியும் தொன்மைச் செய்திகளாகப் பதிவு செய்துள்ளது.

**சேரன் செங்குட்டுவன்**

சேரன் செங்குட்டுவன் புகழைப் போற்றிப் பாமாலையாகத் தொடுத்த பெரும்புலவன் கவுதமன், தான் பாடிய பாமலைக்குப் பரிசாக, தானும் தன் சுற்றத்தாரும் சொர்க்கம் புக வேண்டும் என வேண்டிக் கொண்டான். புலவன் தன்னிடம் வேண்டிக் கொண்டபடியே வேள்விகள் பல செய்து புலவனை வானுலகப் பேறு பெறவைத்தான் என்ற செய்தி பழமொழியில்,

> தொடுத்த பெரும்புலவன் சொற்குறைதீர
> அடுத்தா என்றாங்கு வாழியரோ என்றான்
> தொடுத்து இன்னர் என்னலலோ வேண்டா கொடுப்பவர்
> தாம் அறிவார் தம்சீர் அளவு[49]

எனக் கூறுகிறது.

கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்றாகிய பழமொழி நானூறு என்னும் நூலில் தான் தொன்மச் செய்திகள் நிரம்ப இடம்பெற்றுள்ளன.

**பாண்டியன்**

பாண்டியனைப் பற்றியும் தொன்மைச் செய்திகள் சங்க இலக்கியங்களில் இடம்பெற்றுள்ளன. வெற்றி வேலினையுடைய பாண்டியரது மிக்க பழமையினையுடைய திருவண்ணக்கரையின் அருகிலே, முழங்கும் பெருங்கடல் ஒலிக்கின்ற துறைமுகம் என்ற செய்தியை,

> வென்வேற் கவுரியர் தொல்முது கோடி
> முழங்கு இரும் பௌவம் இரங்கும் முன்துரை[50]

என அகநானூறு குறித்துள்ளது.

மாறுபடுதல் இல்லாத பாண்டியனின் மதுரையம் பதியை,

> கோடாப் புகழ்மாறன் கூடல னையாளை
> ஆடா அடகினும் காணேன்[51]

என்று கணிமேதாவியார் போற்றுமாற்றான் உணரலாம்.

**சோழர்கள்**

**கரிகால் வளவன்**

கீழ்க்கணக்கு நூல்களில் தொன்மம் மிக்க செல்வாக்குற்றுள்ளன. கரிகால்

வளவனுக்கு கழுமலம் என்னுமிடத்தில் கட்டப்பட்டிருந்த பட்டத்துயானை மாலை சூட்டிய செய்தியையும், அதனால் உயர்குணக் குன்றான கரிகால் வளவன் சோழ நாட்டு அரசனான செய்தியையும் பழமொழி எடுத்துரைக்கின்றது. அப்பாடலை,

கழுமலத்தில் யாத்த களிறும் கருவூர்
விழுமியோன் மேற்சென் றதனால் – விழுமிய
வேண்டினும் வேண்டா விடினும்[52]

என்றுப் பழமொழிக் கூறுகிறது.

**மனுநீதிச் சோழன்**

திரு ஆருரை (திருவாரூர்) ஆண்ட மனுநீதிச் சோழன் மன்னன் மகன் வீதிவிடங்கன், தேரில் ஏறித் தெருவழியே சென்றதும், பசுவின் கன்று மீது தேர் ஏற்றிக் கொன்றதும், அதனால் கொற்றவன் மகன் என்றும் பாராமல் நீதி வழங்கிய மனுநீதிச் சோழனைப் பற்றி குறிப்பிடும்போது,

சால மறைத் தோம்பிச் சான்றவர் கைகரப்பக்
காலை கழிந்தனன் பின்றையும் – மேலைக்
கறவைக் கன்று உளர்ந்தானைத் தந்தையும் ஊர்ந்தான்
முறைமைக்கு மூப்பிளமை இல[53]

என முன்றுறையரையனார் சித்தரித்துக் காட்டியுள்ளார்.

தொன்மச் செய்திகளை இதுவரை ஆராய்ந்ததினால் சங்க இலக்கியங்கள் தொன்மச் செய்திகளை கையாண்டு உள்ளது. முறையே, கீழ்க்கணக்கு நூல்களும் தொன்மச் செய்திகளை நிரம்ப எடுத்தாண்டுள்ளன. எனவே கீழ்க்கணக்கு நூல்கள் தனக்கு முன் தோன்றிய சங்க இலக்கியச் செல்வாக்கை ஏற்றுள்ளதை அறியமுடிகிறது.

படைப்பு மக்களுக்குரியது என்ற ஆழமான நோக்கில் சங்கப் புலவர்கள் தம் கருத்தினை மக்கள் எளிதில் ஏற்க தொன்மத்தைக் கையாண்டனர். இம்மரபைக் கீழ்க்கணக்கு நூலாசிரியர்களும் எவ்வித மாற்றமும் இன்றி ஏற்றுப் போற்றியுள்ளனர் என துணிந்து கூறமுடிகிறது.

## அடிக்குறிப்புகள்

1. தொல் - பொருள் - செய், நச், நூ. 237
2. கதிர் மகாதேவன். தொன்மம், ப. 72
3. சி. இலக்குவனார், தொல்காப்பிய ஆராய்ச்சி, ப. 271
4. ச. சோமசுந்தரம், தமிழ் இலக்கியக் கொள்கைகள், ப. 35 - 36
5. T. கங்காதரன், தமிழ்ப் பொழில், துணர்:67, மலர் 6, ப. 286
6. கதிர் மகாதேவன். தொன்மம், பக். 27 - 37
7. தொல் - பொருள் - அகத் - நச், நூ. 5
8. மேலது - 5 - 2
9. க. நெடுஞ்செழியன், தமிழ் இலக்கியத்தில் உலகாய்தம், ப. 319
10. அகம் - 348: 1- 8
11. குறுந் - 362
12. ஐந் - ஐம் - 20
13. அகம் - 59: 10 - 12
14. திணைமாலை - 93
15. இன்னா - க.வா.
16. புறம் - 1: 7 - 13
17. இன்னி - க. வா.
18. திருமுருகு - 152 - 153
19. இன்னா - க.வா.
20. புறம் - 58: 14 - 16
21. பரிபா - 13: 30 - 33
22. திணைமாலை - 96
23. மேலது - 97

24. திரி - காப்பு
25. கலித் - 124:1
26. திரி - காப்பு
27. நான்மணி - 2
28. திரி - காப்பு
29. நான்மணி - 2
30. பழமொ - 305
31. ஏலா - 49
32. திரி - 1
33. ஐங்குறு - 442
34. இன்னி - 22
35. மு. இளமுருகன், தமிழ்ப் பெருங்காப்பியங்களில் சங்க இலக்கியத்தின் செல்வாக்கு, ப. 253
36. அகம் - 70: 13 - 16
37. பழமொ - 292
38. புறம் - 378: 18 - 21
39. பழமொ - 258
40. கலித் - 52: 2 - 3
41. பழமொ - 357
42. மேலது - 235
43. புறம் - 2: 13 - 16
44. இன்னி - 1
45. புறம் - 39: 4 - 8
46. சிறுபாண் - 80 - 82
47. பழமொ - 156
48. குறுந் - 89: 4 - 6
49. பழமொழி - 381
50. அகம் - 70: 13 - 14
51. திணைமாலை - 4
52. பழமொழி - 231
53. மேலது - 243

# முடிவுரை

கீழ்க்கணக்கு நூல்களில் சங்க இலக்கியச் செல்வாக்கைக் காணும் முயற்சியாக மேற்கொள்ளப்பெற்ற இவ்வாய்வில் காணப்பெற்ற மெய்ம்மைகள் (Facts) ஆய்வு முடிவுகள் ஆகியவற்றை முன்வைத்து, மேலாய்விற்குரிய களங்களையும் தருகிறது இம்முடிவுரை.

சங்க இலக்கியம் கதைத் தொடர்ச்சியற்ற தனிநிலைப் பாத் தொகுதியாகும். இச் செல்வாக்கைக் கீழ்க்கணக்கு நூல்கள் ஏற்றுள்ளதால் தனித்தனிப் பாக்களாகவே அமைந்துள்ளன. இந்நூல்களிலும் சங்க இலக்கியம்போல் கதைத் தொடர்ச்சியைக் காணவியலாது.

சங்க இலக்கியங்கள் ஆசிரியப்பாவால் இயற்றப்பட்டன. ஆனால் கீழ்க்கணக்கு நூல்கள் முழுவதும் அறக்கருத்துப் பரவலுக்கேற்ற வெண்பாக்களால் யாக்கப்பட்டுள்ளன. இதனால் சொல், தொடர் அமைப்புகளை முழுமையாகக் கையாள்வதில் சில இடர்பாடுகள் காணப்படுகின்றன. இக்காரணத்தால் தொடர், சொல், செல்வாக்கு ஓரளவிற்கே இடம்பெற்றுள்ளன. சங்க இலக்கியக் கருத்துக்களே கீழ்க்கணக்கு நூல்களில் அதிகளவு தனது செல்வாக்கை ஏற்படுத்தியுள்ளதை இவ்வாய்வின் மூலம் அறியமுடிகிறது.

சங்க இலக்கியப் புலவர்கள் அவைக்களப் புலவர்களாகவும், மன்னர்களுக்கும் மக்கட்கும் இடையே வாயில்களாகவும் திகழ்ந்தார்கள். வீரத்திற்கும், கலைகளுக்கும், வாழ்க்கை இன்பத்திற்கும் சிறப்பளித்தனர். ஆனால் கீழ்க்கணக்கு நூலாசிரியர்கள் அறத்திற்குச் சிறப்பளிக்கும் சமயச்சான்றோர்களாக விளங்கினர். மனித வாழ்க்கைக்கு இம்மையை விடவும் மறுமையைப் பெரிதும் வலியுறுத்தினர். இக்கருத்தியலை மையமிட்டு புலனடக்கத்தை வலியுறுத்தியுள்ளனர் என்பதும் இவ் ஆய்வின் மூலம் அறியமுடிகிறது.

சங்க நூல்கள் காதலையும், போரையும் உள்ளடக்கமாகக் கொண்டு விளங்கினாலும் அறககருத்துக்களைக் கூறிட மறக்கவில்லை. கீழ்க்கணக்கு நூல்கள், சங்க இலக்கியச் செல்வாக்கை ஏற்றுக் கொண்டதுடன், தான் எழுந்த காலத்திற்குத் தேவைப்படும் அறக்கருத்துக்களுக்கே முதலிடம் கொடுத்துள்ளன. இவ் அறக்கருத்துக்களின் வளர்ச்சிக்குச் சங்க இலக்கிய அறக்கருத்துக்களே வித்தாக அமைந்துள்ளதை இவ்வாய்வின் மூலம் அறிய முடிகிறது.

இவற்றைத் திரிகடுகம், சிறுபஞ்சமூலம், நான்மணிக்கடிகை, ஏலாதி, இனியவை நாற்பது, இன்னா நாற்பது ஆகிய நூல்களில் காண முடிகிறது.

கீழ்க்கணக்கு நூலாசிரியர்கள், திரிகடுகம், சிறுபஞ்சமூலம், நான்மணிக்கடிகை, ஏலாதி என்ற மருந்துகளின் பெயர்களை நூல்களுக்குப் பெயராக வைத்தனர். அம்மருந்துகள் உடல்நோயைத் தீர்ப்பதுபோல் இந்நூல்களில் இடம்பெறும் கருத்துக்கள் உள்ள நோயைத் தீர்க்கும் மருந்தாக அமைந்துள்ளன.

சங்க இலக்கியத்தின் அகத்திணை மரபுகளையும் கீழ்க்கணக்கு நூல்கள் அப்படியே ஏற்றுக் கொண்டுள்ளன. சங்க இலக்கிய அகத்திணை தம் செல்வாக்கால், ஐந்திணை ஐம்பது, ஐந்திணை எழுபது, திணைமொழி ஐம்பது, திணைமாலை நூற்றைம்பது என கீழ்க்கணக்கு நூல்களில் வளர்ச்சியடைந்துள்ளது. மேலும் கார்காலத்தின் தன்மையை

முழுமையாக விளக்கும் தனிநூலாகக் கார்நாற்பது படைக்கப்பட்டுள்ளதைக் காணமுடிகிறது.

கீழ்க்கணக்கு நூல்களில் ஐம்புலனடக்கம் வலியுறுத்தப்பட்டாலும், சங்க அகப்பா உள்ளடக்கத்தினின்று விலகாமல் படைத்துள்ளதை அறியமுடிகிறது. இறுதியில் போர்ச்சிறப்பைப் பாடும் களவழி நாற்பதும், காதலின் மாட்சியைப் பாடும் ஐந்திணை ஐம்பது உள்ளிட்ட அகத்திணைநூல்கள் சங்கங்கள் கருத்துச் செல்வாக்கை ஏற்றுப் போற்றியுள்ளன.

சங்கம் மருவிய காலத்து நூல்களாகிய கீழ்க்கணக்கு அகநூல்கள் திணைமரபுகளில் சங்க இலக்கிய அகநூல்களின் செல்வாக்கைப் பெற்றிருந்தாலும், சிற்சில இடங்களில் உவமைகளின் வாயிலாகத் தாம் சார்ந்திருந்த நீதிநூல்களின் செல்வாக்கையே அதிகமாகப் பிரதிபலித்துள்ளன. ஒருவன் செய்யும் நல்வினைகளுக்கு ஏற்ப செல்வம் பெருகும் என்ற நம்பிக்கை கீழ்க்கணக்கு நூல்களில் நிரம்ப இடம் பெற்றுள்ளன.

கீழ்க்கணக்கு நூல்கள் அறச்செய்திகளை மையமிட்டுக் குறிப்பிடுவதால் சங்க இலக்கியப் புறத்திணைச் செல்வாக்கை அதிகமாக ஏற்கவில்லை. போரற்ற பெருவாழ்வையும் நீதிநூற்கள் மனங்கொண்டதால் புறத்திணையில் நிலையாமையை வலியுறுத்தும் காஞ்சித்திணை வளர்ச்சியை முதுமொழிக்காஞ்சியில் காணமுடிகிறது.

கீழ்க்கணக்கு நூல்கள் மனிதகுல வாழ்வில் பின்பற்ற வேண்டிய அறங்களை வெளிப்படையாகவே வலியுறுத்துகின்றது. மக்கள் இப்படித்தான் வாழவேண்டும் என்று வரையறுத்துக் கூறும்போது புறநானூற்றில் வலியுறுத்தியுள்ள அறக்கருத்துக்களை வரவேற்றுள்ளன.

மாந்தகுல வாழ்க்கை நெறியுடையதாக அமையவேண்டும் என வலியுறுத்திய சங்கச் செல்வாக்குப் பின்னாளில் ஆசாரக்கோவை என்றத் தனிநூலாகப் பரிணமித்தது.

அற இலக்கியங்களின் தோற்றத்திற்கு வீரயுகக் கோட்பாடுகளில் மனிதன் கொண்ட வெறுப்புணர்வு காரணமாக அமைந்துள்ளதை இவ்ஆய்வின் வழி அறியமுடிகின்றது.

வானிலாவிய செல்வச் செழிப்புடன் வாழ்ந்தாலும் குழந்தைப்பேறு இல்லையெனில் மனிதப் பிறவி பயனற்றதென இருகால இலக்கியங்களும் எடுத்தியம்புகிறது. இருவேறு கால இலக்கியப் போக்குகளில் கல்வியின் அவசியம் தொடர்ந்து வலியுறுத்தப்பட்டதை அறியமுடிகிறது.

சங்க காலத்தில் அன்பும் நட்பும் வாழ்வியலோடு இயல்பானதாய் இணைந்திருந்தது. அவற்றை முழுமையாக்கி கீழ்க்கணக்கு நூல்கள் வலியுறுத்தியுள்ளன.

சங்க இலக்கியங்களில் காணப்பெறும் நடனம், இசை, ஓவியம், சிற்பம் ஆகியன பற்றிய குறிப்புகள் கீழ்க்கணக்கு நூல்களில் அதிக செல்வாக்கைப் பெறவில்லை என்பது இவ்ஆய்வினால் அறியமுடிகிறது.

சங்க இலக்கிய உத்திகள் கீழ்க்கணக்கு நூல்களில் மிகுந்த செல்வாக்கைப் பெற்றுள்ளன. உவமைகள் அவற்றின் தன்மை அடிப்படையில் இயற்கை உவமை, அழகு உவமை, பண்பு உவமை, வரலாற்று உவமை, புராண உவமை, கருத்து உவமை என்று உத்திச் செல்வாக்கு கையாளப்பட்டுள்ளது. இச்செல்வாக்கு அறக்கருத்துக்களை மனதில் பதியுமாறு அமைந்துள்ளது.

பரத்தமை ஒழுக்கத்தை நீதிநூற்கள் வெகுவாகக் கண்டிக்க, சங்க இலக்கிய குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல் என்ற ஐந்நிலம் பற்றிய வருணனைச் செல்வாக்கை கீழ்க்கணக்கு நூல்கள் தத்தம் நீதிநூற் பொருண்மைக்கும், அகப்புற ஆளுமைக்கும் ஏற்றுப் போற்றியுள்ளதை இவ்ஆய்வின் மூலம் அறியமுடிகின்றது.

பரத்தமை ஒழுக்கத்தை முற்றாகக் களைய விரும்பிய நீதிநூற்கள், சங்ககால

மருதத் திணைப் பாடல்களில் இடம்பெறும் உள்ளுறை உத்தியை வரவேற்றுப் போற்றியது என்று துணியலாம்.

பழங்கதைகளாகிய தொன்மச் செல்வாக்கு கீழ்க்கணக்கு நூல்களில் பரவலாக இடம்பெற்றுள்ளன.

இவ்வாய்வை அடுத்து மேலாய்வைத் தொடர்வதற்கு விரிவான களங்களும் வாய்ப்புகளும் உள்ளன.

சங்க இலக்கிய அகத்திணைச் செல்வாக்கைக் கீழ்க்கணக்கு நூல்களில் தனி ஆய்வு மேற்கொள்ள களங்கள் உள்ளன. பாத்திரப்படைப்பு பற்றியும் ஆராய வாய்ப்புள்ளது.

கீழ்க்கணக்கு நூல்களில் சமண, பௌத்த சமயக் கொள்கைகளைப் பற்றி ஆராய வாய்ப்புள்ளது. மேலும் இந்நூல்களில் மனிதநேயம் பற்றிய கருத்துக்களை தனி ஆய்வு மேற்கொள்ளுமளவிற்கு களங்கள் நிரம்ப இடம் பெற்றுள்ளதை இவ்வாய்வின் மூலம் அறியமுடிந்தது.

## துணைநூற்பட்டியல்

முதன்மை ஆதாரங்கள் - அகநானூறு
வேங்கடசாமி நாட்டார், நாவலர் ந.மு.,
வேங்கடாசலம்பிள்ளை, ரா., (உ.ஆ)
தமிழ்ச்சங்க வெளியீடு,
சென்னை - 1954

இடைகழிநாட்டு நல்லூர் நத்தத்தனார்- சிறுபாணாற்றுப்படை
சோமசுந்தரனார், பொ.வே., (உ.ஆ)
திருந்திய பதிப்பு கழக வெளியீடு,
சென்னை - 2000

ஐங்குறுநூறு
சோமசுந்தரனார், பொ.வே., (உ.ஆ)
கழக வெளியீடு, சென்னை
முதல் பதிப்பு - 1961

கடியலூர் உருத்திரங்கண்ணனார் - பட்டினப்பாலை
சோமசுந்தரனார், பொ.வே., (உ.ஆ)
கழக வெளியீடு, சென்னை - 2001

பெரும்பாணாற்றுப்படை
சோமசுந்தரனார், பொ.வே., (உ.ஆ)
கழக வெளியீடு, சென்னை - 2001

கணிமேதாவியார் ஏலாதி
பாலசுந்தரம்பிள்ளை (உ.ஆ)
கழக வெளியீடு, சென்னை
மறுபதிப்பு - 1953

ஏலாதி
இராசாராம், துரை., (உ.ஆ)
சண்முகம்பிள்ளை (ப.ஆ)
முல்லை நிலையம்,
சென்னை
மறுபதிப்பு - 2001

திணைமாலை நூற்றைம்பது
மூலமும் பழைய உரையும்
நடராசப்பிள்ளை. அ.,
கழக வெளியீடு, சென்னை
மறுபதிப்பு - 1966

திணைமாலை நூற்றைம்பது
இராசராம், துரை., (உ.ஆ)
சண்முகம்பிள்ளை, மு., (ப.ஆ)
முல்லை நிலையம், சென்னை
மறுபதிப்பு - 2001

கண்ணன் சேந்தனார் - திணைமொழி ஐம்பது
மூலமும் பழைய உரையும்
நடராசப் பிள்ளை, அ., (உ.ஆ)
கழக வெளியீடு, சென்னை
மறுபதிப்பு - 1962

திணைமொழி ஐம்பது
இராசாராம், துரை., (உ.ஆ)
சண்முகம்பிள்ளை (ப.ஆ)
முல்லை நிலையம், சென்னை
மறுபதிப்பு - 2001

கபிலர் - குறிஞ்சிப்பாட்டு
சோமசுந்தரனார், பொ.வே., (உ.ஆ)
கழக வெளியீடு, சென்னை
மறுபதிப்பு - 2000

கபிலர் - இன்னா நாற்பது
வேங்கடசாமி நாட்டார், ந.மு., (உ.ஆ)
கழக வெளியீடு, சென்னை
மறுபதிப்பு - 1964

இன்னா நாற்பது
இராசாராம், துரை., (உ.ஆ)
சண்முகம்பிள்ளை, மு., (ப.ஆ)
முல்லை நிலையம், சென்னை
இரண்டாம் பதிப்பு - 2000

கலித்தொகை மூலமும்
நச்சினார்க்கினியர் உரையும்
தமிழ் பல்கலைக்கழக வெளியீடு, தஞ்சாவூர்
நிழற்படப் பதிப்பு - 1984

காரியாசான் - சிறுபஞ்சமூலம்
புன்னைவனநாத முதலியார், பு.சி.,
வித்துவான் (உ.ஆ)
கழக வெளியீடு, சென்னை
மறுபதிப்பு - 1963

சிறுபஞ்சமூலம்
இராசாராம், துரை., (உ.ஆ)
சண்முகம்பிள்ளை, மு., (ப.ஆ)
முல்லை நிலையம், சென்னை
மறுபதிப்பு - 2001

குறுந்தொகை மூலமும் உரையும்
சண்முகம் பிள்ளை, மு., (ப.ஆ)
தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு,
தஞ்சாவூர்
மறு அச்சு - 1985

தொலகாப்பியர் - தொல்காப்பியம் எழுத்ததிகாரம்
இளம்பூரணர் உரை
சுந்தரமூர்த்தி, கு., (ப.ஆ)
அண்ணாமலைப் பல்கலைக்கழக வெளியீடு,
சிதம்பரம் - 1991

பொருளதிகாரம்
நச்சினார்க்கினியர் உரை
அண்ணாமலை பல்கலைக்கழக வெளியீடு
1985

தொல்காப்பியம்
இளம்பூரணர் உரை
கழக வெளியீடு, சென்னை
மறுபதிப்பு - 1967

தொல்காப்பியம் - பொருளதிகாரம்
பேராசிரியர் உரை
கழக வெளியீடு, சென்னை
மறுபதிப்பு - 1969

நக்கீரர் - திருமுருகாற்றுப்படை
சோமசுந்தரனார், பொ.வே., (உ.ஆ)
கழக வெளியீடு, சென்னை
மூன்றாம் பதிப்பு - 2001

நெடுநல்வாடை
சோமசுந்தரனார், பொ.வே., (உ.ஆ)
கழக வெளியீடு, சென்னை
2001

நப்பூதனார் - முல்லைப்பாட்டு
சோமசுந்தரனார், பொ.வே., (உ.ஆ)
கழக வெளியீடு, சென்னை - 2001

நல்லாதனார் - திரிகடுகம்
புதவுரை விளக்கவுரைகளுடன்
புன்னைவனநாத முதலியார், பு.சி.,
வித்துவான் (உ.ஆ),
கழக வெளியீடு, சென்னை
மறுபதிப்பு - 1966

திரிகடுகம்
இராசாராம், துரை., (உ.ஆ)
சண்முகம்பிள்ளை, மு., (ப.ஆ)
முல்லை நிலையம், சென்னை
மறுபதிப்பு - 2001

நற்றிணை
வேங்கடராமன்., ஹெச்., வித்துவான் (ப.ஆ)
டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூல் நிலையம்,
சென்னை,
முதற்பதிப்பு - 1989

பதிற்றுப்பத்து
மூலமும் விளக்க உரையும்
துரைசாமிப்பிள்ளை, ஔவை., (உ.ஆ)
கழக வெளியீடு, சென்னை - 1973

பரிபாடல்
மூலமும் பரிமேலழகர் உரையும்
சாமிநாதையர், உ.வே., (ப.ஆ)
கல்யாணசுந்தரையர்
சென்னை - 1948

புல்லங்கடானார் கைந்நிலை
சங்குப்புலவர், தி., (உ.ஆ)
கழக வெளியீடு, சென்னை
மறுபதிப்பு - 1964

கைந்நிலை
இராசாராம், துரை., (உ.ஆ)
சண்முகம்பிள்ளை, மு., (ப.ஆ)
முல்லை நிலையம், சென்னை
மறுபதிப்பு - 2001

| | | |
|---|---|---|
| | | கார்நாற்பது<br>இராசாராம், துரை., (உ.ஆ)<br>சண்முகம்பிள்ளை, மு., (ப.ஆ)<br>முல்லை நிலையம், சென்னை<br>இரண்டாம் பதிப்பு - 2000 |
| மதுரைக் கூடலூர் கிழார் | - | முதுமொழிக்காஞ்சி<br>பாலசுந்தரம்பிள்ளை, திரு. தி.சு.,<br>கழக வெளியீடு, சென்னை<br>இரண்டாம் பதிப்பு - 1954 |
| | | முதுமொழிக்காஞ்சி<br>இராசாராம், துரை., (உ.ஆ)<br>சண்முகம்பிள்ளை, மு., (ப.ஆ)<br>முல்லை நிலையம், சென்னை<br>மறுபதிப்பு - 2001 |
| மாங்குடி மருதனார் | - | மதுரைக்காஞ்சி<br>சோமசுந்தரனார், பொ.வே., (உ.ஆ)<br>கழக வெளியீடு, சென்னை - 2001 |
| மாறன் பொறையனார் | - | ஐந்திணை ஐம்பது<br>மூலமும் பழைய உரையும்<br>நடராசப்பிள்ளை, அ., (உ.ஆ)<br>கழக வெளியீடு, சென்னை<br>மறுபதிப்பு - 1963 |
| | | ஐந்திணை ஐம்பது<br>இராசாராம். துரை., (உ.ஆ)<br>சண்முகம்பிள்ளை, மு., (ப.ஆ)<br>முல்லை நிலையம், சென்னை<br>மறுபதிப்பு - 2001 |
| முடத்தமாக் கண்ணியார் | - | பொருநராற்றுப்படை<br>சோமசுந்தரனார், பொ.வெ., (உ.ஆ)<br>கழக வெளியீடு, சென்னை - 2001 |
| முன்றுரையரையனார் | - | பழமொழி நானூறு<br>மூலமும் தெளிவுரையும்<br>மாணிக்கவாசகன் (உ.ஆ)<br>உமா பதிப்பகம், சென்னை<br>முதற்பதிப்பு - 2001 |
| முன்றுரையரையனார் | - | பழமொழி நானூறு மூலமும் தெளிவுரையும்<br>மாணிக்கனார், அ., புலவர் (உ.ஆ)<br>வர்த்தமானன் பதிப்பகம், சென்னை - 1999 |

மூவாதியார் - ஐந்திணை எழுபது
மூலமும் பழைய உரையும்
நடராசப்பிள்ளை, அ., (உ.ஆ)
கழக வெளியீடு, சென்னை
மறுபதிப்பு - 1966

ஐந்திணை எழுபது
இராசாராம், துரை., (உ.ஆ)
சண்முகம்பிள்ளை, மு., (ப.ஆ)
முல்லை நிலையம், சென்னை
மறுபதிப்பு - 2001

விளம்பிநாகனார் - நான்மணிக்கடிகை
பாலசுந்தரம்பிள்ளை, தி.சு., (உ.ஆ)
கழக வெளியீடு, சென்னை
மறுபதிப்பு - 1965

நான்மணிக்கடிகை
இராசாராம், துரை., (உ.ஆ)
சண்முகம்பிள்ளை, மு., (ப.ஆ)
முல்லை நிலையம், சென்னை
இரண்டாம் பதிப்பு - 2000

## துணைமை ஆதாரங்கள்


அமிர்தசாகரர் - யாப்பருங்கலக்காரிகை
அண்ணாமலை நகர், அண்ணாமலை
பல்கலைக்கழகம், 1973

யாப்பருங்கல விருத்தியுரையுடன்
கழக வெளியீடு, சென்னை
மறுபதிப்பு - 1976

இராமச்சந்திரன் செட்டியார் - கொங்குவேளிர்
அண்ணாமலைப் பல்கலைக்கழக
வெளியீடு - 1968

இராமச்சந்திரன் செட்டியார், லெ.ப.கரு., - பத்துப்பாட்டுவளம்
முத்தையா நிலைய வெளியீடு,
சென்னை - 1971

இராமராசன், எஸ். - ஆசாரக்கோவை ஓர் ஆய்வு
வேலூர் - 1980

இலக்குவனார், சி. - தொல்காப்பிய ஆராய்ச்சி
வள்ளுவர் பதிப்பகம்,
புதுக்கோட்டை
இரண்டாம் பதிப்பு - 1961

இளமுருகன், மு., முனைவர் - தமிழ்ப்பெருங்காப்பியங்களில் சங்க
இலக்கியத்தின் செல்வாக்கு
கலையக வெளியீடு, தஞ்சாவூர்
முதற்பதிப்பு - 1999

ஐயனாரிதனார் - புறப்பொருள் வெண்பாமாலை
சோமசுந்தரனார், பொ.வே., (உ.ஆ)
கழக வெளியீடு, சென்னை
எட்டாம் பதிப்பு - 1989

கந்தசாமி, சோ.ந., - யாப்பியலின் தோற்றமும் வளர்ச்சியும்
தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு,
தஞ்சாவூர்
முதற்பதிப்பு - 1989

குருசாமி, ம.ரா.போ., - வாழ்வும் வழியும்
மெர்க்குரி புத்தகக் கம்பெனி,
கோயம்புத்தூர் - 1972

சஞ்சீவி, ந., - சங்ககாலச் சான்றோர்கள்
பாரிநிலையம், சென்னை - 1954

சதாசிவப் பண்டாரத்தார், தி.வை., - தமிழ் இலக்கிய வரலாறு
கழக வெளியீடு, சென்னை - 1971

சரோஜினி - இலக்கியத்தில் பெண் நீதி
அரசி பதிப்பகம், திண்டுக்கல்
முதற்பதிப்பு - 1980

சிவசுப்பிரமணியன், ஆ., - பொற்காலங்கள்
கார்க்கி நூலகம், சென்னை - 1981

சிவஞானம், ம.பொ., - இலக்கியச் செல்வம்
இன்ப நிலையம், சென்னை - 1955

சீத்தலைச் சாத்தனார் - மணிமேகலை
உ.வே. சாமிநாதையர் (ப.ஆ)
சோமசுந்தரனார், திரு.பொ.வே., (உ.ஆ)
கழக வெளியீடு, சென்னை - 1971

சீனிச்சாமி, து., - தமிழில் காப்பியக் கொள்கை முதற் பகுதி
தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு,
தஞ்சாவூர்
1985

சுந்தரமூர்த்தி, இ., - திருக்குறள் அணிநலம்
சென்னைப் பல்கலைக்கழக தமிழ்த்துறை
திருக்குறள் ஆராய்ச்சிப் பகுதி,
சென்னை
முதற்பதிப்பு - 1971

சுப்பிரமணியன், ச.வே., - தமிழ் இலக்கியக் கொள்கை -
ஓர் அறிமுகம் தொகுதி 1
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை

கம்பன் இலக்கிய உத்திகள்
ஜெயக்குமாரி ஸ்டோர்ஸ்,
நாகர்கோவில் - 1969

சுப்புரெட்டியார், ந., - அகத்திணைக் கொள்கைகள்
பாரி நிலையம், சென்னை 1981

கவிதை அனுபவம்
பாரி நிலையம், சென்னை
முதற்பதிப்பு - 1961

செல்லதுரை, பால்., - கீழ்க்கணக்கு நூல்களில் களவொழுக்கம்
விருதுநகர் - 1978

சோமசுந்தரம், ச., - தமிழ் இலக்கியக் கொள்கைகள்
அணியகம் வெளியீடு,
சென்னை
முதற்பதிப்பு - 1981

ஞானசம்பந்தன், அ.ச., - அகமும் புறமும்
ஆசிரியர் பதிப்பு, சென்னை - 1981

இலக்கியக் கலை
கழக வெளியீடு, சென்னை
ஏழாம் பதிப்பு - 1989

தண்டியாசிரியர் - தண்டியலங்காரம்
மறுபதிப்பு
கழக வெளியீடு, சென்னை - 1971

தமிழண்ணல் - ஒப்பிலக்கிய அறிமுகம்
மீனாட்சி புத்தக நிலையம்,
மயூரா வளாகம், சென்னை
எட்டாம் பதிப்பு - 2000

சங்க இலக்கிய ஒப்பீடு பகுதி - 1
மீனாட்சி புத்தக நிலையம்,
மதுரை - 1979

தமிழ்மொழியகராதி
ஏசியன் எசுகேஷனல் சர்வீஸ்,
புதுதில்லி (110 016)

திருநாவுக்கரசு, ச - திருக்குறள் நீதி இலக்கியம்
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை - 1977

திருவள்ளுவர் - திருக்குறள் மூலமும்
பரிமேலழகர் உரையும்
கழக வெளியீடு, சென்னை
பத்தொன்பதாம் பதிப்பு - 1987

தில்லை கோவிந்தன் - Evolution and Evaluation of
Patinenkilkanakku
உலகத் தமிழராய்ச்சி நிறுவனம்,
சென்னைப் பல்கலைக்கழகம் - 1976

| | | |
|---|---|---|
| நாராயண வேலுப்பிள்ளை, எம்., டாக்டர், வித்துவான் | - | சங்க இலக்கியம் வழங்கும் பத்துப்பாட்டு<br>நர்மதா பதிப்பகம், சென்னை<br>முதற்பதிப்பு - 2000 |
| நெடுஞ்செழியன், க., | - | தமிழ் இலக்கியத்தில் உலகாய்தம்<br>பாரி நிலையம், சென்னை<br>முதற்பதிப்பு - 1990 |
| | | பன்னிருப்பாட்டியல்<br>கழக வெளியீடு, சென்னை<br>மறுபதிப்பு - 1970 |
| பாலசுப்பிரமணியன், சி., | - | தமிழ் இலக்கிய வரலாறு<br>நறுமலர்ப் பதிப்பகம்,<br>பாரி நிலையம், சென்னை<br>இருபதாம் பதிப்பு - 1991 |
| பெருமாள், வ., | - | பலநோக்கில் பழ மொழிகள்<br>இலக்கியா பதிப்பகம், சென்னை - 1987 |
| மகாதேவன், கதிர்., | - | தொன்மம்<br>இலட்சுமி வெளியீடு, மதுரை - 1984 |
| மாணிக்கம், வ.சுப., | - | இலக்கியச் சாறு<br>மணிவாசகர் பதிப்பகம்,<br>சிதம்பரம் - 1987 |
| | | தொல்காப்பியப் புதுமை<br>மணிவாசகர் பதிப்பகம்,<br>சிதம்பரம் - 1987 |
| வரதராசன், மு., | - | இலக்கியத் திறன்<br>கழக வெளியீடு, சென்னை<br>மறுபதிப்பு - 1979 |
| | | தமிழ் இலக்கிய வரலாறு<br>சாகித்ய அக்காதெமி,<br>புது தில்லி - 1980 |
| | | பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை<br>பாரி நிலையம், சென்னை - 1979 |
| வன்மீகநாதன் | - | பண்டையத் தமிழரின் நித்தியவாழ்க்கை<br>பதிப்பு - 1938 |
| விபுலானந்தர் | - | யாழ்நூல்<br>கரந்தைத் தமிழ்ச்சங்கம்,<br>தஞ்சாவூர் - 1974 |

வெள்ளைவாரணன், க., - சங்க காலத் தமிழ்மக்கள், நேஷனல் பப்ளிஷிங் கம்பெனி, சென்னை - 1950

வேங்கடசாமி மயிலை, சீனி - இலக்கிய வரலாறு தொல்காப்பியம் அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலை நகர் - 1978

வேங்கடபதி - சாப்பிரர் ஆட்சியில் தமிழகம் மக்கள் வெளியீடு சென்னை - 1976

கீழ்க்கணக்கு நூல்கள் - ஓர் ஆய்வு அண்ணாமலைப் பல்கலைக்கழகம் - 1972

வேலுப்பிள்ளை, ஆ., - தமிழ் இலக்கியங்களில் காலமும் கருத்தும் பாரி புத்தகப் பண்ணை, சென்னை - 1978

ஜான் சாமுவேல், சி., - இலக்கிய ஒப்பாய்வுக் களங்கள் மணிப் பதிப்பகம், சென்னை முதற்பதிப்பு - 1978

EMPSON, W., - Seven types of Ambiquity London - 1947

ULLMANN, S., - Meaning and style, Basil Blackwell Oxford, 1973

## மலர்கள், இதழ்கள்


ஆய்வுக்கோவை - மூன்றாம் கருத்தரங்கு தமிழ் இலக்கிய ஆய்வுக் கோவை

அனைத்திந்திய தமிழ் இலக்கியக் கழகம்
தஞ்சாவூர் - 1986

இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம்
அண்ணாமலை நகர்

பத்தாவது கருத்தரங்கு - 1978

பன்னிரண்டாவது கருத்தரங்கு - 1980

பதினான்காவது கருத்தரங்கு தொகுதி - 3

சங்க இலக்கியக் கட்டுரைகள்
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர் - 1984

சிதம்பரனார், சாமி., (தொ.ஆ)
கட்டுரைத் தொகுப்பு, தொகுதி - 2
இலக்கிய நிலையம், சென்னை

தமிழ்ப் பொழில் - துணர்: 49, மலர் - 8 - 1975
துணர்: 67, மலர் - 6 - 1993

குறள்நெறி - பழந்தமிழர்களும் உலகக் கண்ணோட்டமும்
1.7.1968

சொற்பொழிவு - சுப்பிரமணியம்பிள்ளை
புறநானூற்றுச் சொற்பொழிவு கழக வெளியீடு
1966


20/10/04.
ம. மணிவேல்
(நெறியாளர்)
பேராசிரியர்,
தமிழியல் துறை,
ம. கா. பல்கலைக்கழகம்,
மதுரை 625021.